ஶ்ரீ ... ...

சிதம்பரக்ஷேத்ர ஐந்து மாஹாத்மியங்கள்
எதிர்பாருங்கள்.

சிதம்பர மாஹாத்மியம், புண்டரீகபுர மாஹாத்மியம்,
...மசபா மாஹாத்மியம், தில்வாரண்ய மாஹாத்மியம்,
வ்யாக்ரபுர் மாஹாத்மியம்

மற்றும்பல வெளியீடுகள்

...B:- சபைக்கு மெம்பர்களாகு நன்கொடை அளிப்பவர்கள்
கௌரவ மெம்பர்கள் ஆவர்.

நிதி அளிப்பவர்களுக்கு எல்லாம்
'புஸ்தகங்கள் இனாமாக அளிக்கப்படும்'
இனி போடும் புஸ்தகங்களும் இனாமாக அளிக்கப்படும்.

"நன்கோடை அளிக்க முன்வாருங்கள்"

அ...
...யிலும் காண்
ஏற்பட்டு
விஷயத்தையும் அ...

நடன குஞ்சிதபாத சபை,
சிதம்பரம்.

உ

## "நடன குஞ்சிதபாதசபை வெளியீடுகள்."

கிடைக்குமிடம்:—

C. S. ஸச்சிதானந்த தீக்ஷிதர்;

நெ. 6, தெற்கு ஸந்நிதி, சிதம்பரம்.

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| 1. | சிதம்பர க்ஷேத்ர மஹிமை. | 0 | 4 |
| 2. | ஆத்மஜ்ஞானம் | 0 | 4 |
| 3. | சாஸ்த்ரங்களின் நோக்கம் | 0 | 4 |
| 4. | சைவ ஸித்தாந்தம் | 0 | 4 |
| 5. | ஈசாவாஸ்ய உபநிஷத் ஸாரம் | 0 | 4 |
| 6. | சாகுந்தல நாடகம் (தமிழ் மொழிபெயர்ப்பு) | 1 | 8 |
| 7. | கீதாபாஷ்ய ஸாரம் | 0 | 4 |
| 8. | தைத்திரீய உபநிஷத் | 0 | 4 |
| 9. | புவனேச்வரி மஹிமை | 0 | 4 |
| 10. | ஸ்த்ரீகள் தர்மம் | 0 | 4 |
| 11. | ப்ரச்ன உபநிஷத் | 0 | 4 |
| 12. | புருஷ தர்மம் | 0 | 4 |
| 13. | ஸ்ரீசங்கராசார்ய சரிதம் | 0 | 8 |
| 14. | பிண்டோத்பத்தியின் பெருமை | 0 | 4 |
| 15. | ஓங்கார ஸ்வரூபம் | 0 | 4 |
| 16. | 14 ஸூத்ரங்களின் பெருமை | 0 | 4 |
| 17. | சங்கீதம் | 0 | 4 |
| 18. | லிங்கபுராணம் சுருக்கம் | 0 | 4 |
| 19. | ருத்ராக்ஷ மஹிமை | 0 | 4 |
| 20. | ஒன்பது தாண்டவங்கள் | 0 | 4 |
| 21. | ப்ரம்ஹ வித்யை | | |
| 22. | 108 உபநிஷத்துக்களின் ஸாரம் | | |
| 23. | சிதம்பர மாஹாத்மியம் (அச்சில்) | | |

...ரு பே... வர ஆயுள் போதாது என்றும் புரியாத அர்த்தபாகங்கள் ...நிஷத்... ...றுகின்றது என சுருக்கிவ்யாஸர் சுருக்கமாக சாகைகளாக ...கைகள் ...னயோர்க்கும் விளங்கும்படி அழகிய முறையில் தொகுத்து ...கைத... ...தும் ஒழுங்கு முறைகண்ட வேதவித்துகள் அதன் கரையை ...வ... ...ர் என்பது வெளிப்படை.

...கவ்... இதன் பெருமை ப்ருஹஸ்பதி, வஸிஷ்டர் முதலிய பல ரிஷிகள் ...ஸ்ரீ... ...உலகிற்கு புகட்டி வந்தார்கள். அதுகாலம் வேதாந்தத்தின் ...ருமை அருமையாக விளக்க ஜனகர் ஒரு ரிஷி தான் கற்ற விஷ ...க்ஙளை உலகிற்கு நன்கு வெளிப்படுத்தவேண்டி பல சிஷ்யர்களுக்கு ...த போதித்து வந்தார். அதன் முறையில் உலகில் வேதாந்த ...ஷயம் நன்கு புலனுக ஆயிற்று.

...க்ருதயுகத்தில் தர்மம் நான்கு பாதமாகவும், த்ரேதாயுகத்தில் மூன்று பாதமாகவும், த்வாபரயுகத்தில் இரண்டு பாதமாகவும், கலி யுகத்தில் ஒருபாதமாகவும் பிறகு 5000 வருஷம் கலி ஆனபிறகு அரை பாதமாகவும் இருக்க காரணம் என பாகவதத்தில் வ்யாஸர் எழுதியபடி அதன் கஷ்டத்தில் நிவ்ருத்தி அடைய த்ரேதாயுகத்தில் ஆரம்பத்தில் ஜனகர் அதாவது ஸீதைக்கு தகப்பனுர் அவ்வேதங்கள் வேதாந்தங்கள் இவைகளின் நுட்பங்களை நன்குபயிற்சிக்க சிஷ்யர்களுக்கு ஆரம்பித்தார்.

அக்காலத்தில் உபநிஷத்துக்கள் ஸமீபமிருந்து அறியத்தக்கதாக இருந்தது. அவர் எல்லா சிஷ்யர்களுக்கும் 108 உபநிஷத்துக்களில் சொல்லிய அர்த்தங்களையும், உதாஹரணங்களையும், நன்கு போதித்து வந்த காலத்தில் தான் அதன் பெருமை நன்கு விளங்கலாயிற்று.

அச்சமயம் ரிஷிகள் ஒருவருக்கு முக்காலமும் அறிந்து இருந்தபடி யால் அவைகள் பெருமைக்கு எல்லைஇல்லா மதிப்பு இருந்துவந்தது. அதன் க்ரமத்தில் 108 உபநிஷத்துகள் ஒருவருக்கு ஒருவர் பேசுவது போலவும், உபதேசித்தல் போலவும், ஈசனே சிலருக்கு உபதேசம் செய்வது போலவும் இருந்தது காணத்தக்கதாக திகழ்கிறது.

அது ஸமயம் ரிஷிகள் சொல்லிக்கொடுப்பது அன்னியில் நடத்தை யிலும் காண்பித்து வந்தனர். உலகில் அநுஷ்டிக்க மிகுந்த சிரமம் எற்பட்டு பலர் அதையும் கற்றதோடுமன்னியில் ஜீவன் முக்தி விஷயத்தையும் அறியலாயினர்.

ஆகவே சரித்ரத்தில் இவ்வுபநிஷத் தோன்றிய ஜ[illegible] காரணத்தை ஒருவகையாக சொல்லாமல் பலவகையாக உ[illegible] எண்பித்திருப்பது காணலாம். ஆனால் எதை கொள்கிறது. [illegible] விலக்குகிறது என தோன்றலாம். அது நினைக்க தகுந்ததில்லை [illegible]ஹரணம் சொல்லுகிறேன். நம்பிக்கைக்கு இடமாகும் வகையில் ஒ[illegible]வனுக்கு ஓர் இடம்செல்ல பலவழிகள் காண்பித்து அதில் எப்படி வேணுமானாலும் போகலாம் என சொல்வது போல் குறிப்பிட்ட இடம் ஒன்றே என காண்பிக்கிறது. இதைத்தான் உபநிஷதில் பலவழிகளா[illegible] உதாஹரணங்களால் காண்பிக்கப்பட்டுள்ளது.

அறிவுள்ளவர்களுக்கு அடைய இன்ப ஸாதனம், மோக்ஷ ஸாதனம், இரண்டையும், அழகுபெற உபதேசித்திருப்பதை பார்த்தால் யாரும் ஆச்சர்யபட ஹேதுவாகும். அதையே நாம் தர்மம், அதர்மம் இருவழிகளாக பிரித்து அடைவதின் நோக்கம். அதன் பலன்கள் அநுபவிக்க ஹேதுவாகிறான் என்பது. உலகில் உள்ள வஸ்துக்களை உதாஹரணமாககாட்டி ப்ரம்ஹத்தின் லக்ஷ்யத்தை நன்குவிஸ்தரிப்பதை பார்த்தால் நாம் கடைத்து எற வழிக்கே முக்யஹேது என உபநிஷத் சொல்லுகிறது என எண்ண இடமுண்டு. அறிஞர்களில் பலர் உதாஹரணமாக உபநிஷத்துக்களையே எங்கும் எடுத்துக்கொள்ளுகிறார்கள்.

காரணம் யாதெனில், ஜ்ஞான ஸாதனத்திற்கு முக்ய இடமாக திகழ்வதே அதன் பெருமை. உபநிஷத்துக்களில் கதைகள் நன்கு சொல்லப்படுகின்றன. உலகில் கதையாக பாகங்கள் இருந்தால்தான் ரஸிக்கும் என அதன் பெருமையும் நன்கு காண்பித்துள்ளது.

மாயா உருவ ஈசன் சக்தியை விளக்ககூடியதை கேன உபநிஷதில் யக்ஷன் கேள்விகேட்டது என ஈசன் சொல்லியது முற்றுப்பெறும். இதை நினைக்கும்கால் நன்கு விளங்கும். குடும்பத்தில் எற்படும் பாகபிரிவினை விஷயமாக ஒன்பதாவது உபநிஷத் சாந்தோக்யத்தில் விஸ்தாரமாக சொல்லப்பட்டிருக்கிறது. புத்திமான் ஒருவன் இவைகளை நினைப்பானேயாகில், ஜன்மா எடுத்து அடிக்கடி மறிப்பதும், உண்டாகுவதும் போலுள்ள தன்மை அறுத்து உடனே ஜீவன் முக்திதசைஅடைய வழிகளையே கடைபிடிக்கவேணும் என எண்ண ஹேதுவுள்ள விஷயங்களை சொல்லி இருப்பதை கண்டால் யாரும் திகைத்து உடனே ஜீவன் முக்தியே மேல் என எண்ணுவார். இப்பேர்ப்பட்ட

...ரு பே... ... விஷயங்களை எளிதில் அறிய ஈசனுல் வகுத்ததை கண் ... ஷத்... ... ருகும் வகையில் தொகுத்திருப்பது ஆச்சர்யமாகத்தான் ... கைகள் ... கைக ...

... வ நாம் அதை உணர்வோமேயாகில்; இன்பம்தவிர துன்பம் ... து என்பது குறிக்கும் ஹேது அதை அடைதல் நலம் எனவும் ... ம். இப்பேர்ப்பட்டது அரும்பெரும் விஷயங்களை நன்கு ... அப்யஸிக்க ஈசன் அருளிய மொழிகளை நல்ல குருமூலம் ... த்து அதன் பயனை அடைய முயலுவதே மனிதனுக் பிறந்த ... க்ஷணம் என சாஸ்த்ரங்கள் வற்புருத்துகிறது.

... வ்விஷயங்கள் அறிய ஸுலபமான முறையில் சிறியமுறையிலும், ... மாகவும் உள்ளதை என் புத்திக்கேற்ப எழுதி உள்ளேன். அதில் ... கள் ஏதேனும் இருந்தால் அது என்னுடையது என்றும், குண ... ருந்தால் அது எனது ஆசார்யார் அநுக்ரஹம் என்றும், புத்தி மான்கள் நிச்சயித்து என்னை கௌரவிக்க தாழ்மையுடன் கேட்டுக் கொள்ளுகிறேன்.

ப்ரம்மைவ ஸத்யம்.

புராணரத்னம், உபந்யாஸசரபம்
ஸம்ஸ்க்ருத விசாரதா,
**C. S. ஸச்சிதானந்த தீக்ஷிதர்,**
நே. 6, தெற்கு ஸந்நிதி,
சிதம்பரம்.
1—8—51.

உ

ஸ்ரீராமஜெயம்.

மஹாகுருப்யோ நம:

நம: ஸபாப்ய: ஸபாபதிப்யச்சவோ நம:

# முகவுரை.

1. பரம புண்ணியமான பாரதவர்ஷத்திலுள்ள க்ஷேத்திரங்களுக்கு திலகம் போன்ற பூகைலாசமெனப்படும் சிதம்பர க்ஷேத்திரத்தி புராணவசனப்படி ஸ்ரீ நடராஜ மூர்த்திக்கு துல்யர்களான தீக்ஷி குடும்பங்களால் ஆத்மார்த்தமாயும், லோக க்ஷேமத்திற்காகவும், ஆராதித்துவரும் ஸ்ரீ சிவகாமஸுந்தரி ஸமேத ஸ்ரீ நடராஜமூர்த்தியின் பரிபூர்ண கிருபையை அவலம்பித்து, ஷை க்ஷேத்திரத்தில் பரம உதார குணத்துடன் உபன்யாஸரத்னாகரம் என்ற பிருதையும் அடைந்து, மதுரமான வாக்கினால் சாஸ்திரார்த்தங்களையும், சகல புராணங்களில் கூறிய தர்மங்களையும், ப்ரவசனம் செய்து, விசேஷ கீர்த்தியுடன் இருந்த ஸ்ரீ சிவகாமஸுந்தர தீக்ஷிதர் குமாரர் ஸ்ரீ ஸச்சிதானந்த தீக்ஷிதர் அவர் பிதாவைப் போலவே சாஸ்திராப்யாஸம் செய்தும், புராணரத்னம், உபன்யாஸ சரபம், ஸம்ஸ்க்ருத விசாரதா, என்ற பிருதங்களை அடைந்தும், சாஸ்திரார்த்தங்களையும், ஸகல புராணங்களையும், விசாலமான நல்ல மனத்துடன் உபன்யாஸம் செய்து வருவதுடன், இக்கலியில் தர்மப்ரசாரம் குறையாமல் இருக்கவேண்டுமென்ற மனப்பூர்வமான எண்ணத்துடன், சிதம்பர க்ஷேத்திரத்தில் ஸ்ரீ நடன குஞ்சிதபாத ஸபையை ஆரம்பித்து; பலபலவித்வான்களைக் கொண்டு இதுவரையில் முந்நூற்றேழு உபந்யாஸங்களை நடத்தியும், சில புஸ்தக வெளியீடு 21 மூலம் ஸகல ஜனங்களும் படித்து கர்மானுஷ்டானம் செய்யவேணுமென்று செய்து வந்து, இப்பொழுது அஷ்டோத்தர சத உபநிஷத்துக்களை ஸபையின் ஆதரவில் அச்சிட்டிருக்கிறார்கள். இதை ஆஸ்திகர்கள் எல்லோரும் அவசியம் ஒவ்வொரு குடும்பத்திலும் இந்தப் புஸ்தகத்தை வாங்கிப்படித்து, மெய்யின்பத்தை அடைவதுடன், இப்படி தர்மத்துக்குப் பாடுபடும் ஸபையையும், நன்கு ஆதரித்து விசேஷ சிரேயஸ்ஸை அடையுமாறு கேட்டுக்கொள்ளுகிறேன்.

...ரு பே... நா வைதிக (ஹிந்து) மதம் அனாதியாக உள்ளது. இதை ...நிஷத்து...துவிலுள்ள பல மேதாவிகளும் உணர்ந்து ஒப்புக்கொண்டிருக் ...கைகள் நம்மதத்திற்குப் பிரமாணம் இந்தப் பிரபஞ்சத்தை உண்டு ...கைக... ஸ்ரீ பகவானின் ஸ்வரூபமாயுள்ள வேதமே. ஆகையால் வ...ம் பிறந்த நாள் இல்லை. இப்பேர்ப்பட்ட மதத்தில் விசேஷ ...கவ...புவசத்தால் மனிதப் பிறவியை, அதிலும் வேதங்களில் ஞான ஸ்ரீ ...டமாயுள்ள அஷ்டோத்தர சத உபநிஷத்துக்களைப் படிக்கும்படி, ...க்கூடியது கிடைப்பது அரிதிலும் அரிது.

3. இந்தப் பிரபஞ்சம் உண்டாவதற்கு முன் மஹாப் பிரளயத்தில் ...பகவான் ஒருவரே சயனித்துக்கொண்டிருந்தார். அவர் நாபி ...த்திலிருந்து பிரும்மதேவன் உண்டாகித் தான் தனிமையாய் ...ப்பதைப் பற்றி யோசிக்கும்பொழுது "தப தப" என்று சப்தம் கேட்கஉடனே, தபஸ் செய்தார். பிறகு வைகுண்டலோகம் தெரிய ஸ்ரீ பகவான் வேதங்களை பிரும்மதேவனுக்கு அனுக்ரஹித்து உப தேசித்துத், தன் அனுக்ரஹ சக்தியை வைத்துக்கொண்டு, ஜகத் சிருஷ்டி செய்யும்படி சொன்னார். பிரும்ம தேவனும் சராசராத்மக மான ஜீவ ஸ்ருஷ்டியை செய்து, அதிலும் பத்துவிதமாக உள்ள சக்தி யுடன் கூடிய பிராணிகளையும், ஸ்ருஷ்டி செய்தார்.

4. பத்துவிதமான கர்ம சக்தியாவது:— பிராணன், அபானன், வியானன், உதானன், ஸமானன், என ஐந்தும், நாகன், கூர்மன், கிருகலன், தேவதத்தன், தனஞ்ஜயன், என ஐந்தும் ஆகப்பத்து விதங் களேத்தான். அதாவது, சரீரத்திற்குள் இருக்கின்ற ஒரே பிராணன் பத்து விதமான தொழிலைச் செய்வதால், பத்து விதமாகச் சொல்லப் பட்டது. அவற்றுள் பிராணன் நாஸிகையின் நுனியில் விருத்தியை யுடையது. அபானன் குதஸ்தானத்தில் விருத்தியையுடையது. வியானன் ஸர்வ சரீரத்திலும் விருத்தியையுடையது. உதானன் கண்ட தேசத்தில் விருத்தியையுடையது. ஸமானன் உட்கொண்ட ஆகாரத்தை ரக்தமாக்குவது. நாகன் நக்குவது. கூர்மன் கண்களைத் திறப்பது. கிருகலன் தும்மலைத்தருவது. தேவதத்தன் கொட்டாவியைத்தருவது. தனஞ்ஜயன் புஷ்டியைத்தருவது.

5. விராட் ரூபனான ஸ்ரீ பகவானுடைய வாக்கிலிருந்து அக்னி யும், நாக்கிலிருந்து வருணனும், மூக்கிலிருந்து அசுவினி தேவர்களும், கண்ணிலிருந்து ஸூர்யனும், த்வக்கிலிருந்து பிராணனும், காதிலிருந்து

திக்குகளும், ரோமங்களிலிருந்து ஓஷதிகளும், ஆண்கு... பிரஜாபதியும், அபானத்திலிருந்து மித்திரன் என்ற தேவனு... திலிருந்து பிராம்மண ஜாதியும், கைகளிலிருந்து க்ஷத்திரிய ஜா... துடையிலிருந்து வைசிய ஜாதியும், பாதங்களிலிருந்து சூத்ர ஜா... மற்றுமுள்ள இந்திரியங்களிலிருந்து மற்றும் பல சந்திரன் முதலி... உண்டாயிற்று.

6. பிராம்மண ஜாதி, முகத்திலிருந்து உண்டானதால் முகத்... ஞலேயே வேதங்களை ஓதி லோக க்ஷேமத்தைத் தேடி இகபர லாபத்தை... யும், கைகளிலிருந்து க்ஷத்திரிய ஜாதி உண்டானதால் பாஹுபலத்... தால் துஷ்ட நிக்ரஹம் சிஷ்ட பரிபாலனம் செய்து லோக க்ஷேமத்தை... தேடி இகபர லாபத்தையும், துடையிலிருந்து வைசிய ஜாதி உண்டான... தால் துடைகளிஞலேயே அதாவது பெட்டியடியில் உட்கார்ந்து விய... பாரங்கள் செய்து தேசத்தில் பொருளாதாரக் கஷ்டம் வராமற்படிக்குச் செய்து லோக க்ஷேமத்தைத் தேடி இகபர லாபத்தையும், பாதங்களிலிருந்து சூத்ர ஜாதி உண்டானதால் பாதங்களிஞலேயே அதாவது முன் கூறிய மூன்று வர்ணக்காரர்களுக்கும் அனுகூலமாய் இருந்து ஒத்துழைத்து, லோக க்ஷேமத்தைத் தேடி இகபர லாபங்களை அடைய வேண்டுமென்று ஏற்பட்டிருக்கிறது.

7. மனிதனுக்கு இகபரம் இரண்டிலும் ஸௌக்யம் தேவை. அன்ய மதங்களில் கண்டுபிடித்து சொல்லப்படாததான ஓர் அரிய விசேஷமென்னவென்ருல் நம் மதத்தில் பரலோகங்களை கண்டு பிடித்திருப்பதாகச் சொன்னதேயாகும். அதில் இஹத்தில் க்ஷேமங்களை அடையும் மார்க்கங்களே வேதங்களில் "கர்மகாண்டங்கள்" என்ற பாகங்கள் தெளிவாய்ச் சொல்லியிருக்கிறது. பரத்தில் அழிவில்லா ஆனந்தத்தை அடைவதற்குள்ள மார்க்கந்தான்; வேதத்தில் ஞான காண்டங்களாகிற வேத ஸாரமான நூற்றெட்டு உபநிஷத்துக்களில் சொல்லப்பட்டிருக்கிறது. இதைத் தெரிந்து கொண்டால்தான் ஒரு காலத்திலும் நாசமில்லாத ஆனந்தத்தை அடையலாம்.

8. ஸ்ரீ பகவானும் உண்டானவன் அல்ல, அவனுடைய மூச்சுக் காற்ருயுள்ள வேதங்களும் ஒருவனல் உண்டாக்கப்பட்டதல்ல. அப் பெரும் மஹிமைவாய்ந்த வேதத்தைத் தழுவிய நம் வைதிக (ஹிந்து) மதமும் உண்டானதல்ல. இப்படி உயர்ந்த மதத்தில் ஜன்மாவை

...ருடே நாம் அவசியம் வேத சாஸ்திரங்களை விசாரித்து, அதை ...நிஷத்துக்குக் கொண்டுவந்து, உண்மையான பிரும்மத்தை அறிய ...கைகள்'து அத்யாவசியகமாகும்.

9. ஸகல ஜனங்களுக்கும் ஸுகம் வேண்டும். துக்கம் வேண்டாம் ...ற எண்ணம் இருக்கிறது. அதிலும் அழிவில்லாத ஸுகம் ஒன்று ...கவு கிறதென்றும், அதை அடைவதற்கு மார்க்கமும் உபநிஷத்துக் ... தெளிவாய் கூறியிருக்கிறது. என்றும், அதைத் தெரிந்து ...ண்டு; தான் துக்க ரூபமாயுள்ள ஸம்சாரத்தில் இருந்து தான் ...க்தி அடையவேண்டும்.

10. ஸுக துக்கங்களின் பற்றிலிருந்து விடுபடுதல் முக்தி. இது ...ண்மை அறிவினால் கைகூடும். உண்மை அறிவு என்பதும்; பிரும்ம வித்தை என்பதும், ஒரே பொருள்படும். பிரும்மம் என்றால் உண்மை. வித்தை என்பது அறிவு. இந்த அறிவுக்கு இடமாகிய நூல்கள் அனேத்திலும் நம் நான்கு வேதங்களிலுள்ள உபநிஷத்துக்கள் சிறந்தவை. இது பற்றியே வேதங்களின் "ஞான காண்டம்" எனப்படும் இவ்வுபநிஷத்துக்கள் நூற்றெட்டு. மேற்கூறிய பிரும்ம வித்தையை அடைய இந்த நூற்றெட்டு உபநிஷத்துக்களைப் போன்ற ஸாதனம் இகலோகத்தில் வேறில்லை, மேலும் அத்வைத சித்தாந்தத்தை நிலை நிறுத்திய ஸ்ரீ சங்கரபகவத் பூஜ்ய பாதாளும் பல உப நிஷத்துக்களுக்கு பாஷ்யம் செய்து அருள் புரிந்திருக்கிறார்கள்.

11. ஸம்ஸ்கிருத பாஷையின் பயிற்சி இக்காலத்தில் மிகவும் மலினமாய் விட்டது. இதனால் நம்மவர்களுக்கு இந்நூலினிடத்திலே அளவுகடந்த பக்தி விசுவாசம் இருந்தபோதிலும், இதன் ஆராய்ச்சி மிகவும் குறைந்துபோயிருக்கிறது. பிரும்ம வித்தைக்கு ஊன்று கோலாகிய இந்நூல் நம்மவர்களுக்கு பயன்பட வேண்டுமென்ற கருத்துக் கொண்டே சிதம்பரம் நடனகுஞ்சிதபாத ஸபை ஆதரவில் லோகோபகாரமாய் இந்நூலை அச்சிட்டு வெளியிட்டிருக்கிறார்கள்.

12. அவித்தையினால் ஸம்ஸாரத்தில் முடிவில்லாத துக்கங்களை அடைந்தும், உண்மை வஸ்து புரியாமலும், பொய்யாக உள்ளதை பிரமத்தால் உண்மையாக நினைத்தும், திண்டாடாமல் உண்மையை நன்கு உபநிஷத்துக்கள் விளக்கிக் காட்டியிருக்கிறது. இந்தத் தத்துவத்தை ஸ்ரீ சுக்ராசார்யாள் பரம பக்தனான பரீக்ஷித் சக்ரவர்த்திக்குச்

சுருக்கமாயும், தெளிவாயும், சொல்லியிருக்கிறார்கள். ஹே, நீயோ மரிக்கப்போகிறேன் என்ற பசு புத்தியை (அவிவேகத் வாயாக! தேகமானது முன்னர் இல்லாதிருந்து பின்னர் உ பற்றி எவ்விதம் நாசத்தை அடைகிறதோ? அவ்விதம் நீ இல்லாதிருக்கவுமில்லை. ஆனது பற்றி புதிதாக உண்டாகவுமில் ஆனது பற்றி நாசத்தை அடையப்போவதுமில்லை.

13. நீ முதலிலிருந்து பிறகு பீஜத்திலிருந்து முளையான போல, புத்ர பௌத்ராதி ரூபமுள்ளவனாக உண்டாகப்போவதுமில் கட்டையைக் காட்டிலும் எப்படி நெருப்பு வேறுபட்டதோ? இவ்வி நீ (தேகத்திலிருந்து புத்ராதி தேகம் உண்டாகிறதே ஒழிய ஆத் உண்டாகவில்லை என்பது கருத்து) தேகாதிக்களைக் காட்டிலும், வே பட்டவனாக அன்றோ இருக்கின்றாய்! ஸ்வப்னத்தில் தா மே தன்னுடைய சிரச்சேதத்தைக் காண்பது போலவே, ஜாகரணத்திலும் தனது தேகத்துக்கு ஏற்படும் மரணம் முதலியவற்றையும் பிதா முதலி யோரின் மரணத்தைக் கொண்டும் நிச்சயிப்பதால், இந்த ஜனன மரணாதி ஸம்ஸாரமானது ப்ரமையாகும். ஆத்மாவுக்கு ஜனனமோ, மரணமோ, கிடையாது.

14. குடமானது உடைந்து போனதும், ஆகாசமானது. முன் போல ஆகாசமாகவே எவ்விதமாகிறதோ? இவ்விதமே தேகமானது தத்வ ஞானத்தினால் லயமடைந்தும், அதன் மூலம் ஏற்பட்ட ஜீவ பாவத்தை விட்டு பிரும்மமாகவே ஆகிவிடுகிறான், மனமானது ஆத்மா வுக்கு தேகங்களையும், குணங்களையும், கர்மங்களையும் சிருஷ்டிக்கிறது. அந்த மனதை மாயையானது சிருஷ்டிக்கிறது. ஆகவே மாயாதிகளா கிற உபாதி ஸமுதாயத்தினால் ஜீவனுக்கு ஸம்ஸாரம் ஏற்படுகிறது. (உபாதி நிமித்தமாகவே ஜீவனுக்கு ஸம்ஸாரமானது ஏற்படுவதால் உபாதிக்கு நாசமேற்பட்டதும் ஜீவத்வமும் போய்விடுகிறதென்பதை மேலே திருஷ்டாந்தத்துடன் சொல்லப்போகிறார்.) எண்ணெ, ஆகாரம், திரி, அக்னி இவற்றின் சேர்க்கையானது எதுவரை காணப்படுகிறதோ? அதுவரை தான் ஜோதிஸ்ஸுக்கு தீபத்தன்மை ஏற்படுகிறது என்பது எவ்விதமோ? இவ்விதம் (எண்ணெ ஸ்தானத்தில் கர்மமும், அதிஷ்டான ஸ்தானத்தில் மனதும், திரி ஸ்தானத்தில் தேகமும், அக்னி ஸ்தானத் தில் சைதன்யாத்யாஸமும், தீப ஸ்தானத்தில் ஸம்ஸாரமும், எனக் கண்டு கொள்ளவேண்டும்) தேகம் காரணமாகவே ஸம்ஸாரமானது

...ரு வேதங்களின் ஒவ்வொரு சாகையின் கடைசியிலும், ஒவ்வொரு
...ஷத்து உள்ளது. அவ்விதம் பார்க்கின்; ரிக் வேதத்தின்
...கைகள் 21, யஜுர் வேதத்தின் சாகைகள் 109, ஸாமவேதத்தின்
...கைகள் 1000, அதர்வ வேதத்தின் சாகைகள் 50, ஆக மொத்தம்
...வதசாகைகள் 1180, உபநிஷத்துகளும் 1180 ஆகும். அவைகளுள்
...கவும் ஸாரதரமான 108 உபநிஷத்துகள் ஸ்ரீ ராமசந்தரமூர்த்தியால்,
...ஸ்ரீ ஆஞ்சனேயஸ்வாமியின் பொருட்டு உபதேசம் செய்யப்பட்டன.
...வைகளே இன்றளவும் ப்ரசாரத்தில் உள.

அவைகளுள் ஈச, கேன, கட, ப்ரச்ன, முண்டக, மாண்டுக்ய,
தைத்திரிய, ஐதரேய, சாந்தோக்ய, ப்ருஹதாரண்யக, ச்வேதாச்வதர,
...நுஸிம்ஹதாபினீய மென்னும் தசோபநிஷத்துகளுக்கே ஆதி சங்கர
பகவத்பாதாள் அவர்கள் அத்வைத ப்ரதிஷ்டையில் விருப்பங்கொண்டு
மிக உயர்ந்த முறையில் பாஷ்யம் எழுதி உள்ளார்கள். அவைகளில்
விஸ்தாரமாக ப்ரதிபாதனம் செய்யப்பட்டுள்ள வேதாந்த சாஸ்த்ர
தத்வத்தின் ஸாரத்தையும், உபநிஷத் பதநிர்வசனத்தையும், உபநிஷத்
துகளின் ஸூசியையும், தைத்திரிய, ஐததேய, என்னும் உபநிஷத்
துகளின் நாம ஔசித்யத்தையும், சிறிது வெளியிடுவோம்.

வேதங்களின் உண்மையான முடிவை தெரிவிப்பது வேதாந்தம்.
அதை அநுஸரிப்பவர்கள் வேதாந்திகள். அவர்களுக்கு வேதங்களும்,
உபநிஷத்துகளுமே ஆதாரம். வேதத்தின் முக்யகருத்து என்ன
வெனில்; உள்ளது ஒன்று. அதுதான் ப்ரம்ஹம், என்பது. ஒன்றே
உள்ளதானால் நானாவித பேதங்கள் அ-ங்கிய இவ்வுலகம் தோன்ற
காரண மென்னவெனில்; அவித்யையே காரணம் என ஸமாதானம்
கூறுகிறது. ச்நுதி, இந்த அவித்யையினால்தான் மனிதன் ஸச்சி
தானந்த ஸ்வரூபம்தான் என்பதை மறந்து, தான்வேறு, ப்ரம்ஹம்
வேறு, ஈச்வரன்வேறு, உலகம்வேறு, ஜீவன்கள்வேறு, என்னும் பேதஜ்
ஞானத்தை அடைந்து, தான் இல்லாததை தனது என்று ப்ரமித்து
ஸம்ஸார ஸாகரத்தில் ஆழ்ந்து துக்கமுறுகின்றான். அப்பேத
ஜ்ஞானத்தை நிவ்ருத்தி செய்யவே வேதாந்தம் உபதேசிக்கிறது.
காண்பான், காக்ஷி, இவைகள் இரண்டும் ஸத்யமில்லை, காண்பவனே
ஸத்யம், காக்ஷிகள் எல்லாம் காண்பவனிடம் கல்பிதம், இதில் ரஜ்ஜு,
ஸர்ப்பம், சுக்தி, ரஜதம், த்ருஷ்டாந்தம். கயிற்றினிடம்—ஸர்ப்பம்,
இல்லாமல் தோன்றுகிறது. உண்மையில் கயிறுதான் உள்ளது.

கிளிஞ்சலில் வெள்ளி இல்லாமல் தோன்றுகிறது. உண்மை கிளிஞ்சல்தான் உள்ளது. என எவ்விதம் நமது அநுபவத்தில் இ முதலியவைகளால் மறைபட்ட உண்மைப் பொருளில் பொய்மை காண்கிறோமோ? அவ்விதமே ப்ரம்ஹம் என்கிற ஸத்யமான பொருள் இப் ப்ரபஞ்சம்தோன்றுகிறது.

ஆகையால் இப் ப்ரபஞ்சம் பொய்யே. இவ்வுண்மை ஜ்ஞானிகள் அநுபவத்தில் அறிந்துளர். ஆகையால் இப் ப்ரபஞ்ச தின் அபின்னநிமித்த உபாதான காரணமாயுள்ளது ப்ரம்ஹமே. இ நிர்குணப். அதாவது; நாம் அறியும் எந்த குணமும், அதனிடமில்லை அது ஸத், சித், ஆனந்த ஸ்வரூபம், இப் ப்ரம்ஹத்தை தவிர; மற்ற எல்லாம் அஸத். அஜ்ஞானம், துக்கம், ஆகவே ப்ரபஞ்சம் அஜ்ஞான (அவித்யா) ஸ்வரூபம். இந்த அஜ்ஞானம் ஸத்வ, ரஜஸ், தமஸ், ஆகிய முக்குணங்களுள்ளது. அஜ்ஞானத்தை மாயை என்றும் சொல்வதுண்டு. அதனிடம்; ஆவரணம், விக்ஷேபம், என இரண்டுவித சக்திகள் உண்டு. ஆவரணமென்றால்; மறைப்பு. இதுதான் பஞ்சகோசம் என்றும் சொல்லப்படும்.

இந்த சக்தியானது தேஹம், ஜீவன், சாக்ஷி, சைதன்யம் என இவைகளின் பேதம் தெரியாமல் மறைத்து நிற்கும். ஆனால் மாயா ரஹித ஈச்வரனையும், ஜீவன்முக்தர்களையும், மூடாமல் தேஹமேதாம், உலகபோகமேமுக்தி என்று நிச்சயித்துக்கொண்டு இருப்பவர்களையே மறைக்கும். இந்த ஆவரணசக்தியினால்தான்; ஸம்ஸார பந்தம் வ்ருத்தி யாகின்றது. இது மோக்ஷத்திற்கு விரோதி. மற்றொரு சக்தியாகிய விக்ஷேபம் முக்தி அடைய அநுகூலமானது. ஒன்றை வேறொன்றாக அறிதலே விக்ஷேபம் ஒன்று மற்றொன்றாக தோன்றுதல் ஆவரணம். விக்ஷேபத்தினிடத்தில் உணரும் சக்தி இருப்பதால்; ஒரு காலத்தில் பொருளை பொருள் எனவே உணரவும் கூடும். அதனால் துக்கநிவ்ருத்தி உண்டாகும். துக்கநிவ்ருத்தியே முக்தி. ஆதலால்; விக்ஷேபத்தை அறிவு என்றும், ஆவரணத்தை அறியாமை என்றும், கூறலாம்.

இந்த விக்ஷேபசக்தியால் சப்த, ஸ்பர்ச, ரூப, ரஸ, கந்தங்கள் எனும் பஞ்ச தன்மாத்ரைகளும்; ஆகாசம், வாயு, அக்னி, ஜலம், ப்ருதிவீ, எனும் பஞ்சபூதங்களும் அந்தக்கரணமும், ச்ரோத்ரம், த்வக், சக்ஷுஸ், ரஸனை, க்ராணம், என பஞ்ச ஜ்ஞானேந்தரியங்களும், வாக், பாணி, பாத, பாயு, உபஸ்தம், என்கிற பஞ்ச கர்மேந்த்ரியங்களும்,

ந்மக்கு ஏற்படுகிறது. பிறகு ரஜோகுணம், ஸத்வகுணம், தமோ என்ற குணத்ரய ஸம்ஸர்க்க ரூபமான உபாதியினாலேயே புக்கு ஜனனமும், மரணமும், ஏற்படுகிறது.

15. ஆகவே அதில் தோற்றத்தை அடைகின்றவனும், ஸ்வப்ர ானும், கார்ய காரணங்களைக் காட்டிலும் வேறுபட்டவனும், ஆகாசம் பால எங்கும் நிறைந்தவனும், தேஹாதியான ப்ரபஞ்சத்துக்கு ஆதார ும், நிர்விகாரனும், முடிவும், உவமையும், அற்றவனும், விபுவுமான ரொரு ஆத்மாவுண்டோ? அவன் ஜனனத்தையோ? மரணத்தையோ? அடைவதில்லை.

16. இம்மாதிரி உண்மையான உயர்ந்த தத்வத்தை அறிந்து ஜனன மரணம் முதலிய பரம துக்கங்களிலிருந்து விடுபடுவதுதான் மனித ஜன்மா எடுத்ததற்குப் பரம ப்ரயோஜனமாகும். எந்த சிதம்பர க்ஷேத்திரத்தில் ப்ரகாசிக்கும் ஸ்ரீ சித்ஸபேசனுடைய கையிலிருக்கும் டக்கை என்ற வாத்தியத்திலிருந்து வடமொழியின் இலக்கண ஸூத்ரங் கள் உண்டாயிற்றோ? எந்த சிதம்பர க்ஷேத்ரமானது வித்யா ஸ்தானங் களுக்குள் சிறந்ததாய் ப்ரகாசிக்கிறதோ? இன்றைக்கும் நூற்றுக் கணக்கான பண்டிதர்களால் ப்ரகாசித்து வருகிறதோ? அப்பேர்ப்பட்ட சிதம்பர க்ஷேத்ரத்தில் ஸ்தாபனத்தை அடைந்த ஸ்ரீ நடனகுஞ்சிதபாத ஸபை ஆசந்த்ரதாரகமாய் விளங்கிக்கொண்டும், இப்பொழுது நூற்றெட்டு உபநிஷத்துகளை வெளியிடுவதுபோல்; இன்னும் பல பல உயர்ந்த க்ரந்தங்களை வெளியிட்டுக் கொண்டும், அடிக்கடி பல பெரியோர்களைக்கொண்டு உபந்யாஸங்களை நடத்திக்கொண்டும், நீடூழி வாழும்படிக்கும், இதை ஆதரிக்கும் ஆஸ்திக உலகத்துக்கும் விசேஷ இஹபரலாபங்களை கொடுக்கும்படிக்கும், ஸ்ரீ சிவகாமஸுந்தரி ஸமேத ஸ்ரீ சித்ஸபேசனை ப்ரார்த்தித்துக்கொள்ளுகிறேன்.

இப்படிக்கு,
வடகுடி கிராமத்தில் வஸிக்கும்,

**சேங்காலிபுரம், ஸு நாராயண தீக்ஷிதர்,**
ராமகதாவர்ஷக, பாகவதபூஷண.
வடகுடி P. O.
நன்னிலம் வழி. 13—11—51.

ஸ்ரீசித்ஸபேசாயமங்களம்,

# முகவுரை.

---

சாச்வதமான ஸுகம் அடையவேண்டும் என்று விரும்புகிற களுக்கு நமது அனாதியான வேதம் வித்யாத்வைவித்யப்ராதிபாதக தின் வாயிலாக வழிகூறிகிறது. அதாவது, வித்யா இருவகைப்பட பரவித்யா, அபரவித்யா. என அபரவித்யையைப்பற்றி, சிறி கவனிப்போம்.

ப்ரம்ஹபரம்பரையாய் அடையப்பட்ட வேதத்தை வ்யாஸ மஹ முநிவர் ரிக், யஜுஸ், ஸாம, அதர்வ, என்று நான்குவிதமாக, பிரித்து முறையே பைல, வைசம்பாயன, ஜைமினி, ஸுமந்து, என்கிற நான்கு சிஷ்யர்கள் பொருட்டு உபதேசம் செய்தார். அவரவர்களும் தங்கள் தங்கள் சிஷ்யர்களுக்கு அத்யாபனம் செய்தனர். இவ்விதம் இன்ற ளவும் குருபரம்பரையாய் வந்துள்ள வேதமானது அங்கங்களுடன் அத்யயனம் செய்யவேண்டியது அத்யாவச்யகம் என வற்புறுத்துகிறது.

ச்ருதி அங்கங்களாவன; சிக்ஷா, கல்ப்பம் வ்யாகரணம், நிருக்தம், சந்தஸ், ஜ்யோதிஷம், என ஆறு அங்கங்கள். புராணம், ந்யாயம், மீமாம்ஸா, தர்க்கம், என நான்கும் உபாங்கங்கள். ஆயுர்வேதம், தனுர்வேதம், காந்தர்வவேதம், அர்த்தசாஸ்த்ரம், என நான்கு உப வேதங்கள். ஆக பதினாங்குவித்யாங்கங்களாகக் கணக்கிடப்பட் டுள்ளது. இவ்விதம் அங்கங்களுடன் கூட வேதாத்யயனம் செய்து வேத விஹிதகர்மாபரனாக இருந்து பரத்தில் ஸ்வர்க்காதி லோகங்களை அடைந்து அங்கு நிரதிசயஸுகங்களை எய்தி சதுர்முகப்ராம்ஹதேவ னுடன் கூடவேதாந்தவிசாரம் செய்து கடைசியில் ப்ரம்ஹீபூதனாகி விடுகிறான் என்பது அபரவித்யா ப்ரபஞ்சத்தின் ஸாரம்.

இதையேதான் கர்ம மார்க்கமென்றும். சொல்வதுண்டு. இனிபர வித்யையை ஆராய்வோம். பரவித்யா என்பது வேதங்களின் கடை சியில் உள்ள பாகங்களான உபநிஷத்துகளேயாகும். வேதாந்தம்; அத்யாத்மசாஸ்த்ரம், சாரீரகசாஸ்த்ரம், ஜ்ஞான சாஸ்த்ரம், என்று எல் லாம் கூறுவது, உபநிஷத்துகளையே குறிக்கும் முற்குறிப்பிட்டுள்ள ஒவ்

...ண, அபான, வ்யான, உதான, ஸமான, என்கிற பஞ்ச ப்ராணன் ...ம், உள்ள நானாவிதமான சரீரங்கள் அநேகம் உண்டாயின.

இச்சரீரங்களைக் காட்டிலும், வேறானது ப்ரம்ஹம் எங்கும் நிறைந்த ஜ்ஞானப்பொருள். இப் ப்ரம்ஹமே மாயையின் ஸம்பந்தத்தால் ஈசன் என்றும், அவித்யை ஸம்பந்தத்தால் ஜீவன் என்றும் கூறப்படுகிறது. மாயா ஸம்பந்தமுடைய ஈச்வரன் ஸர்வஜ்ஞன், அவித்யை ஸம்பந்தமுடைய ஜீவன் கிஞ்சித்ஜ்ஞன். அவித்யையினால் ஒன்றை மற்றொன்றாக ப்ரமித்து ஜீவன் ஸம்ஸாரபந்தத்தை அடைகிறான். இந்த துக்கமயமான பந்தத்தினின்று விடுபடவேணுமென்றால்; வேதோக்தமான கர்மாக்களை பரமேச்வரார்ப்பணமாக செய்து, சித்தசுத்தி அடைந்து, ஸத்குருவை நாடி, முறைப்படி சுச்ரூஷை செய்து அவருடைய உபதேச பலத்தால் அந்தப்ரம்ஹமே நான் என்றும், ஜ்ஞானத்தை அடைந்து, முக்தி அடையவேண்டும்,

முக்தியானது ஜீவன் முக்தி என்றும், விதேஹ முக்தி என்றும், இருவகைப்படும்; ப்ராரப்தம் தவிர மற்றெல்லா கர்மாக்களும் நசித்து ஸகல பற்றுதலும் ஒழித்து இருக்கும் நிலையே ஜீவன்முக்தி தசை. ப்ராப்தமுடிவில் ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண, சரீரங்கள் நசித்து ப்ரம்ஹமாகவே இருக்கும் ஸ்திதி விதேஹ முக்தி எனப்படும். இது போன்ற பல உண்மைகள் குரு சிஷ்ய, பதிபத்னி, ஸம்வாதரூபமாகவும், ஆக்யானங்கள் ரூபமாகவும், போதிப்பவைகளே உபநிஷத்துகள். உபநிஷத் என்னும் பதம் ப்ரம்ஹ வித்யையை கூறுகிறது.

உப-என்றால் ஸமீபம் என்று அர்த்தம். தனக்கு தன் ஆத்மாவை விட வேறு ஒன்றும் அதிக ஸமீபமாய் இருக்கமாட்டாது. ஆத்மாவை அபேக்ஷித்துதான் மற்ற பதார்த்தங்கள் ஸமீபம்—தூரம் என்றும்; சொல்லப்படுகின்றன. நிஷத்—என்னும் பதத்திலுள்ள ஸத் என்னும் பகுதிக்கு சிதிலமாக்குதல், கொண்டுபோய்விடுதல், நாசம்செய்தல், என மூன்று அர்த்தம் உண்டு அம்மூன்றும் இங்கே பொருந்துகின்றன. ப்ரம்ஹவித்யையை அப்யஸிக்கிறவர்களுடைய ஜன்ம, ஜரா, ம்ருத்யுக்களை, சிதிலமாக்குவதாலும், அல்லது அவைகளை நாசம் செய்வதாலும், அல்லது ப்ரம்ஹத்திற்கு ஸமீபத்தில் உபாஸகனைக் கொண்டுபோய் விடுவதாலும், அல்லது அதில் பரமச்ரேயஸ் இருப்பதாலும், ப்ரம்ஹ வித்யை உபநிஷத் என சொல்லப்படுகிறது.

இப் ப்ரம்ஹ வித்யையை ப்ரதிபாதனம் செய்யும் க்ரந்தத்திற் உபநிஷத் என பெயர் பொருந்தும். இவ்விதம் உயர்வான அத்வ ஜ்ஞானத்தை, புகட்டும் 108 அஷ்டோத்திர சதோபநிஷத்துகளின் நாமாவளியை அகாராதி க்ரமமாகவும், வேதப்பிரிவுடனும், குறிப்பு எண்ணுடனும் தெரிவிப்போம்;

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | அத்யாத்ம | உபநிஷத் | சு. | ய. | 73 |
| 2. | அத்வயதாரக | ,, | சு. | ய. | 53 |
| 3. | அதர்வசிகா | ,, | அ. | | 23 |
| 4. | அதர்வசிர | ,, | அ. | | 22 |
| 5. | அம்ருதநாத | ,, | கி. | ய. | 21 |
| 6. | அம்ருதபிந்து | ,, | கி. | ய. | 20 |
| 7. | அவ்யக்த | ,, | ஸா. | | 68 |
| 8. | அவதூத | ,, | கி. | ய. | 79 |
| 9. | அன்னபூர்ணு | ,, | அ. | | 70 |
| 10. | அக்ஷமாலிகா | ,, | ருக். | | 67 |
| 11. | அக்ஷி | ,, | கி. | ய. | 72 |
| 12. | ஆத்மபோத | ,, | ருக். | | 42 |
| 13. | ஆத்ம | ,, | அ. | | 76 |
| 14. | ஆருணிக | ,, | ஸா. | | 16 |
| 15. | ஈசாவாஸ்ய | ,, | சு. | ய. | 1 |
| 16. | ஏகாக்ஷர | ,, | கி. | ய. | 69 |
| 17. | ஐதரேய | ,, | ருக். | | 8 |
| 18. | கட | ,, | கி. | ய. | 3 |
| 19. | கடருத்ர | ,, | கி. | ய. | 83 |
| 20. | கணபதி | ,, | அ. | | 89 |
| 21. | கர்ப்ப | ,, | கி. | ய. | 17 |
| 22. | கலிஸந்தரண | ,, | கி. | ய. | 103 |
| 23. | காருட | ,, | அ. | | 102 |
| 24. | காலாக்னிருத்ர | ,, | கி. | ய. | 28 |
| 25. | க்ருஷ்ண | ,, | அ. | | 96 |
| 26. | குண்டிகா | ,, | ஸா. | | 74 |
| 27. | கேன | ,, | ஸா. | | 2 |
| 28. | கைவல்ய | ,, | கி. | ய. | 12 |
| 29. | கோபாலதாபினி | ,, | அ. | | 95 |

| | | | | |
|---|---|---|---|---|
| 30. | கௌஷீதகி ப்ராம்ஹண | ,, | ருக். | 25 |
| 31. | ச்வேதாச்வதர | ,, | கி. ய. | 14 |
| 32. | சரப | ,, | அ. | 50 |
| 33. | சாட்யாயனீய | ,, | சு. ய. | 99 |
| 34. | சாண்டில்ய | ,, | அ. | 58 |
| 35. | சாந்தோக்ய | ,, | ஸா. | 9 |
| 36. | சாரீரக | ,, | கி. ய. | 62 |
| 37. | சுகரஹஸ்ய | ,, | கி. ய. | 35 |
| 38. | ஜாபால | ,, | சு. ய. | 13 |
| 39. | ஜாபாலி | ,, | ஸா. | 104 |
| 40. | த்யானபிந்து | ,, | கி. ய. | 39 |
| 41. | த்ரிசிகிப்ராம்ஹண | ,, | சு. ய. | 44 |
| 42. | த்ரிபாத்விபூதிநாராயண | ,, | அ. | 52 |
| 43. | த்ரிபுரா | ,, | ருக். | 82 |
| 44. | த்ரிபுராதாபினீ | ,, | அ. | 80 |
| 45. | தத்தாத்ரேய | ,, | அ. | 101 |
| 46. | தர்சன | ,, | ஸாம. | 90 |
| 47. | தக்ஷிணாமூர்த்தி | ,, | கி. ய. | 49 |
| 48. | தாரஸார | ,, | சு. ய. | 91 |
| 49. | துரீயாதீதஅவதூத | ,, | சு. ய. | 64 |
| 50. | தேஜேபிந்து | ,, | கி. ய. | 37 |
| 51. | தேவி | ,, | அ. | 81 |
| 52. | தைத்திரீய | ,, | கி. ய. | 7 |
| 53. | ந்ருஸிம்ஹதாபினீய | ,, | அ. | 27 |
| 54. | நாதபிந்து | ,, | ருக். | 38 |
| 55. | நாரதபரிவ்ராஜக | ,, | அ. | 43 |
| 56. | நாராயண | ,, | கி. ய. | 18 |
| 57. | நிர்வாண | ,, | ருக். | 47 |
| 58. | நிராலம்ப | ,, | சு. ய. | 34 |
| 59. | ப்ரச்ன | ,, | அ. | 4 |
| 60. | ப்ரம்ஹ | ,, | கி. ய. | 11 |
| 61. | ப்ரம்ஹவித்யா | ,, | கி. ய. | 40 |
| 62. | ப்ராணாக்னிஹோத்ர | ,, | கி. ய. | 94 |
| 63. | ப்ருஹத்ஜாபால | ,, | அ. | 26 |
| 64. | ப்ருஹதாரண்யக | ,, | சு. ய. | 10 |

ருக்-என்பது ருக்வேதம், ஸாம-என்பது ஸாமவேதம், அ-என்பது அதர்வணவேதம், கி-ய-என்பது கிருஷ்ண யஜுர்வேதம், சு-ய-என்பது சுக்ல யஜுர்வேதம், என்றறிக! விக்ரம எண்கள் உபநிஷத்துக்களின் இயற்கை தொடர் எண்களையும், குறிக்கும். 29, 53, 90 இலக்கமுள்ள உபநிஷத்துகளை பூர்வதாபினீ, உத்தரதாபினீ, என இருவகையாகப் பிரித்து 111 உபநிஷத்துகள் என கூறுவதுமுண்டு.

முற்குறிப்பிட்ட உபநிஷத்துக்களுள்; தைத்திரீய, ஐதரேய, உபநிஷத்துளின் நாம ஔசித்யத்தை சிறிது தெரிவிப்போம். வேதவ்யாஸரின் சிஷ்யரான வைசம்பாயனர் யாஜ்ஞவல்க்யர் முதலிய சிஷ்யர்கள் பொருட்டு யஜுர் வேதத்தை கற்பித்தார்.

அப்பொழுது ஏதோ ஒரு காரணத்தால் வைசம்பாயனருக்கு ப்ரம்ஹஹத்தி தோஷம், ஏற்பட்டது. அதை நிவர்த்திக்கும் பொருட்டு வைசம்பாயனர்; யாஜ்ஞவல்க்யரைவிட வேறான வாலிப சிஷ்யனொருவனுக்கு, சிலநியமங்களைச் செய்யும்படி கட்டளையிட்டார். இதை யறிந்த உத்தமாதிகாரியாயும், அதிக வயது உள்ளவராயும், உள்ள யாஜ்ஞவல்க்யர் வைசம்பாயனரைக்குறித்து, ஹேஆசார்ய! இவ் வாலிப சிஷ்யரால் தங்களால் இடப்பட்ட கடின நியமங்களை அநுஷ்டிக்க இயலாது. நானே த்ருட சரீர முள்ளவன். ஆகையால், அந்த நியமங்களை நான் அநுஷ்டிக்க உத்தரவு கொடுக்கவேண்டும் என்று சொன்னார். இதைக்கேட்டு கோபமடைந்த வைசம்பாயனர்; யாஜ்ஞவல்க்யரை பார்த்து ஓ யாஜ்ஞவல்க்ய! நீ மிகவும் கர்வியாய் இருக்கிறாய்! இச்சிஷ்யனை அவமதிக்கிறாய்! ஆகையால் என்னிடம் கற்ற வேதத்தை கக்கிவிடு. இல்லாவிடில்; நீ உடனே மறிக்கும்படி சாபம் கொடுப்

பேன் என்று சொன்னூர். அதை கேட்ட யாஜ்ஞவல்க்யர்; குருசா திற்கு பயந்து வைசம்பாயனரிடம் அத்யயனம் செய்த வேதத்ன யோகபலத்தால் முழுமையும் கக்கிவிட்டார்.

அப்படி கக்கப்பட்ட யஜுர் வேதத்தை வைசம்பாயனரின் ஆஜ்ஞைப்படி மற்றுள்ள சிஷ்யர்கள் தித்திரி (மணிப்புரு) உருக் கொண்டு சாப்பிட்டு விட்டனர். பிறகு யாஜ்ஞவல்க்யர் ஸூர்ய பகவானை உபாஸித்து வாஜி (குதிரை) உருக்கொண்ட ஸூர்யனால் உப தேசிக்கப்பட்டு வேதத்தை க்ருஹித்தார். ஆகையால்தான் யாஜ்ஞ வல்க்யரால் ஸூர்யனிடமிருந்து அடையப்பட்ட வேதபாகத்திற்கு சுக்லயஜுர்வேதம் என்றும், வாஜஸனேயஸம்ஹிதை என்றும், பெயர் வழங்கலாயிற்று. தித்திரி பக்ஷி உருக்கொண்டு க்ருஹிக்கப்பட்ட வேத பாகத்திற்கு க்ருஷ்ண யஜுர் வேதம் என்றும், தைத்திரியசாகை என்றும், பெயர்வந்தது. அதிலுள்ள உபநிஷத்திற்கும், தைத்திரிய உபநிஷத் என்று பெயர் வந்தது. இனி ஐதரேய உபநிஷத்தைப் பற்றி கவனிப்போம்.

ஒரு மஹர்ஷிக்கு அநேக பத்னிகள் இருந்தனர். அவர்களுள் ஒரு ஸ்த்ரீக்கு இதரா என்று பெயர் அவளுக்கு மஹிதாஸன் என்ற பெயர் வாய்ந்த ஓர் குமாரன் இருந்தான். அவனிடம் தந்தைக்கு ப்ரியமில்லை. மற்ற மனைவிகளிடம் உண்டான பிள்ளைகளிடமே அதிக ப்ரியம் வைத்திருந்தார். ஓர் ஸமயம் ஓர் யாகஸபையில் அவர் மஹிதா ஸனை அவமதித்து மற்ற குமாரர்களை தனது மடியில் வைத்துக்கொண்டு கொண்டாடினூர். அதை அறிந்த மஹிதாஸன் மிக வருத்தமுற்று தன் தாயான இதரையை அடைந்தான். வருத்தமுற்ற மஹிதாஸனைக் கண்டு, இதரை, தன் குலதைவமான பூமிதேவியை ப்ரார்த்தித்தாள். அப்பூமிதேவியும், அவளது வேண்டுகோளுக்கிணங்கி, யஜ்ஞஸபைக்கு வந்து திவ்ய ஸ்வர்ண ஸிம்ஹாஸனத்தை மஹிதாஸனுக்கு அளித்து அதில் அவனை உட்காரவைத்து மற்றெல்லா குமாரர்களுக்கும் அவனது பாண்டித்யத்தை வெளியிடச்செய்தாள். அப்பொழுது அவனது வாக் கிலிருந்து வெளிவந்த வேதபாகத்திற்கு அவனது பெயராலேயே உலகில் ப்ரஸித்தி ஏற்படவும், அநுக்ரஹித்துவிட்டு ஸ்வஸ்தானம் எய்தினள். அது முதல் பூமிதேவியின் அநுக்ரஹத்தால் இதரையின் குமாரரால் வெளியிடப்பட்ட வேதபாகத்திற்கு ஐதரேயம் எனப்பெயர் வந்தது. அப்பாகத்திலுள்ள உபநிஷத்துக்கும் ஐதரேய உபநிஷத் என பெயர் வழங்கலாயிற்று.

முற் குறிப்பிட்ட 108-உபநிஷத்துகளும், ஸம்ஸ்க்ருத பாஷையில் ளனவாதலால், தமிழில் தமிழர்களும், படித்து பயன் அடையக்கருதி ஒவ்வொரு உபநிஷத்தின் பொருளையும், ஆராய்ந்து எளிய நடையில் மிக அழகாக தனித்தனியே மொழி பெயர்த்துள்ளதுபற்றி உரை ஆசிரியர் அவர்களை மிகவும் பாராட்டுகிறோம். உரையாசிரியரான புராணரத்னம், உபந்யாஸசரபம், ஸம்ஸ்க்ருதவிசாரதா ப்ரம்ஹஸ்ரீ C. S. ஸச்சிதானந்த தீக்ஷிதர் அவர்கள் பல ஸம்ஸ்க்ருத புஸ்தகங்களை எளிய அழகிய நடையில் மொழி பெயர்த்து இருக்கிறார்கள். ஷை தீக்ஷிதர் அவர்கள் மஹாமஹோபாத்யாய சாஸ்த்ராசார்ய ப்ரம்ஹஸ்ரீ சிவ. தண்டபாணிஸ்வாமி தீக்ஷிதர் அவர்களிடமும் ஷை தீக்ஷிதர் அவர்களின் முக்ய சிஷ்யரான ச்ரௌதமீமாம்ஸா பண்டிதரத்ன ப்ரம்ஹஸ்ரீ ராகவசாஸ்த்ரிகள் அவர்களிடமும் சாஸ்த்ரங்களை அப்ய ஸித்தவர்கள். இவர்களது சாஸ்த்ரஜ்ஞானம் மொழி பெயர்ப்புநூல்களை கண்ணுறும் யாவருக்கும் நன்கு புலப்படும்.

நடன குஞ்சிதபாத சபையின் வாயிலாக இதுபோன்ற உத்தம க்ரந்தங்களை ப்ரசாரம் செய்வதில் ஈடுபட்டுள்ள ஷை தீக்ஷிதர் அவர்களுக்கு. அதிக உத்ஸாஹமும், விசேஷ ஸௌகர்யங்களும், உண்டாக; அருள்புரிய ஸ்ரீ சிவகாம ஸுந்தரீ ஸமேத ஸ்ரீமந் நடராஜரை வேண்டுவோமாக! எல்லாம் ஸ்ரீ நடராஜர் துணை. சுபம்!

இப்படிக்கு,
ந்யாய, வேதாந்த, மீமாம்ஸா, வ்யாகரண, சிரோமணி.
**ஸோம. ஸேது தீக்ஷிதர்,**
ஸுஹ்ருத் ஸபா ஸம்ஸ்க்ருத வித்யாலய
ப்ரதான அத்யாபகர்,
நெ. 72, தெற்குவீதி, சிதம்பரம்.
1—12—'51

உ

# "108-உபநிஷத்துகளின் ஸாரம்."

## 1. ஈசாவாஸ்ய உபநிஷத் விவரணம்.

முதல் மந்த்ரத்தினல் உலகில் நாம் ஆசையற்று வாழ நிச்சயம் செய்து, பின்பு பிறர்பொருளை பெருதவழிக்கு அடிகோல் போட வேணும் என ஆஜ்ஞையுடன் மந்த்ரம் ஆரம்பமாகிறது. பிறகு கர்மாக்களை செய்துகொண்டே ஜீவித்து ஸ்வர்க்கம் முதலியன அடைய இச்சையா? அல்லது எல்லாம்விட்டு ஆஜ்ஞையுள்ள ஆத்மஜ்ஞான மடைய வேலைசெய்து எப்பொழுதும் திரும்பாத உலகம் தேவையா? என்பதை தெரிவிக்கும் விஷயத்துடன் ஆரம்பமாகிறதை கவனித்தால், மநுஷ்யனுக பிறந்தவன் கட்டாயம் ஜன்மாவின் கடைசியில் எல்லாம் துறந்து, பேரின்பவாழ்வு கிட்ட, அடிகோல்தேட, ஆசைப்பட ஹேது வையும் வற்புருத்தி, ஸந்யாஸ ஆச்ரமத்தை நன்கு போதித்து, நம்மை உத்ஸாஹப்படுத்தும் தன்மையில் அறிவுருத்துகிறதை பார்த்தால் உடனே எல்லாவற்றையும்விட்டு ஸந்யாஸம் செய்யவேணும், என்று மனதிற்குகொள்ளும்படி சொல்லப்பட்டிருக்கிறது.

தங்கபாத்ரத்தில் அம்ருதம் வைக்கப்பட்டிருக்கிறது. அதை திறந்து எனக்குகொடு என சொல்வதுபோல், ச்ருதி நமக்கு போதிக்கிறது. அக்னிதான் நம்மை உலகிற்கு அழைத்துச்செல்ல காரணமாகிருன். எனவே அவனை நன்கு உபாஸித்து அடையவேணும் என வற்புருத்தி கூறிஉள்ளது. இதனுல் உலகில் ஆத்மஜ்ஞானம் தான் மிக ச்ரேஷ்டம். அதை அடைய முற்பட வழிகளை நமக்கு போதிக்கிறது இதை கண்டோர் யாவரும் அடைய முற்படுவது இயற்கையே. அதைத் தான் இவ்வுபநிஷதில் விரிவாக சொல்லி உள்ளது. இதை அறிந்தவர்களே அறிவார் என உபநிஷத் முடித்தது.

---

## 2. கேனேபநிஷத் விவரணம்.

ஜ்ஞானமில்லாதவனுக்கு சுத்தமான ச்ரௌத ஸ்மார்த்த கர்மாக்கள் உள்ளது. தக்ஷிணமார்க்கமடைய விஷயங்கள் சொல்லப்படுகிறது.

உண்மையாகவே சாஸ்த்ரமின்றி அநுஷ்டானம் செய்தால் பசு முதலிய ப்ராணிகளுக்கு ஸமானமாவன். குரு சிஷ்யன் வாத ரூபமாக இதில் ஆரம்பித்து சொல்லி உள்ளது. ஸூக்ஷ்ம வஸ்துவின் காரணம் அறிய வேணும் என இவ்வுபநிஷதில் இதையே முக்யமாக சொல்லுகிறது. இவ்விதம் ஆசார்யனால் சொல்லப்பட்டதை சிஷ்யன் ஏகாந்தத்தில் உட்கார்ந்து, மரியாதையுடன் உண்மையாக ஆசார்யன் சொல்லியதை பார்த்து, ஊஹத்தில் நிச்சயம் செய்து, தன் அநுபவஜ்ஞானத்தை கொண்டு, மறுபடி ஆசார்ய ஸமீபம் அடைந்து சொல்லுகிறான்.

நான் ப்ரம்ஹமறிந்தேன் என்றதும், உடனே ஆசார்யன் அனேக அநேக கேள்வி கேட்டும், அசையவுமில்லை. மாறுதலுமடையவில்லை. களங்கமற்று சிக்ஷாதிகள், அங்கங்கள், வேதங்கள், நான்கு சிரஸ் எல்லாம் அதற்கு முக்யமுகமாக ப்ரதிஷ்டை அடைகிறது. தபஸ் முதலிய ப்ரதிஷ்டைகள் ஸத்யப்ரதானம். அநேக ஜன்மாந்தரங்களில் செய்த தபஸ் முதலியன ஸத்வசுத்திக்கு ஸமானஜ்ஞானம் கிடைக்கும். அதற்கு முக்ய பலன் பாபம் துலைவதே. ஜ்ஞானமே புருஷர்களுக்கு கிடைக்கிறது. ப்ரம்ஹத்தை அறிவானாகில், பின்பு மறுபடியும் ஸம்ஸாரபந்த பிறப்பு அடையமாட்டான் என விவரித்து உபநிஷத் சொல்லி முடித்தது.

---

## 3. கடோபநிஷத் விவரணம்.

உசன் என்ற முநிக்கு பிள்ளை நசிகேதஸ் என்றவன் இருந்தான். அவனுக்கு புத்திகூர்மையே கிடையாது. இவ்விதமிருக்கையில் உசன் ஒரு ஸமயம் "ஸர்வஸ்வதக்ஷிணா" யாகம் செய்தார். அதில் தானம் செய்ய யோக்யம்உள்ள ஸர்வ பொருள்களையும் கொடுத்தபிறகு கடைசியில் பிள்ளை நசிகேதஸ் மட்டும் தான் பாக்கியாக இருந்தான். அவன் ஸந்தேஹமடைந்து என்னை யாருக்கு கொடுக்கபோகிறாய்? என கேட்டதிற்கு உன்னை யமனுக்கு கொடுக்கப் போகிறேன் என கோபமாக சொன்னார். வாஸ்தவமான விஷயம் என எண்ணிய பையன், 2, 3, தினங்கள் சென்றதும், ஏன் இன்னும் என்னை யமன் ஊருக்கு அனுப்பவில்லை? என்று உண்மையாகவே கேட்டதிற்கு போய்வா! என தகப்பனார் சொல்லி அனுப்பினார்.

உடனே அவன் யமன் ஊருக்கு சென்றான். அச்சமயம் அங்கு தற்செயலாக யமன் ஊரில் இல்லை. அச்சமயம், அவன் ஸம்ஸாரம்

வனுக்கு உபசாரம் செய்ததை வாங்காமல் அவர் வருகையே எதிர் ார்த்து இருந்தான். அதுவரை ஆஹாரமின்றி இருந்து யமன் வந்த தும் வந்த ப்ராம்ஹணனை கண்டு நீ மூன்று நாள் சாப்பிடாமல் இருந்த தால் உனக்கு மூன்று வரம் கொடுக்கிறேன் பெற்றுக்கொள் என்றார். அவன் முதல் வரத்தினால் என் தகப்பனார் என்னைப்பற்றி வருத்தப் படாமல் இருக்கவேணும். திரும்பி சென்றால் என்னை தப்பாக நினைக்க டாது. இறந்தவர்கள் திரும்புகிறார்களே அதுவரை உள்ள விஷயங் களை விஸ்தாரமாக சொல்லவேணும் என்றதும் ஸந்தோஷத்துடன் ான்காவது வரமாக அவனுக்கு உன் பெயரினால் "நாசிகேதசயனம்" ன்ற சயனயஜ்ஞம் ப்ரகாசிக்கட்டும் என்று வரங்கள் அளித்ததும், ன்றாவது கேள்வியைப்பற்றி இதுவரை யாரும் கேட்டதில்லை எனவே அதைவிட்டு வேறு எதாவதுகேள் கொடுக்கிறேன் என்றதும் முடி யாது என்று அதையே பிடிவாதமாக கேட்டு நின்றான். யமனுக்கு இவனைப்போல் இனி நல்ல மேதாவி கிடைக்கமாட்டான் என உண்மை யே எண்ணி ஆத்மஜ்ஞான தத்வஉபதேசங்களை அவனுக்கு சொன்னான்

ஓங்கார லக்ஷணம் ஆத்மலக்ஷணம் குரு சிஷ்ய க்ரமலக்ஷணம், உலகலக்ஷணம் ஸுகலக்ஷணம் வாழ்வின் லக்ஷணம் கஷ்டத்தில் ஈடுபட்டு தொந்திரவுகொள்ளும் தன்மை, எல்லாவற்றையும் வெகு விஸ்தாரமாக சொல்லி, கடைசியில் அவன் ப்ரம்ஹ ஜ்ஞானியாக ஆகிறதையும் தெரிவித்து இவ்வுலகத்திற்கே உயர்ந்த சக்தியை ஜ்ஞானிகளுக்குதான் என சொல்லியது. இந்த உண்மையை விவரமாக சொல்லப்பட்டிருக் கிறது. உண்மையாக அவனது பெருமையை ஆதாரமாககொண்டு, இவ்வுலகில் என்றைக்கும் ப்ரகாசிக்க, ஹேதுவை தெரிவித்தது என் பதை விரிவாக அதில் சொல்லியதை ஊஹத்தால் அறியலாம். என உபநிஷத் சொல்லி முடித்தது.

---

## 4. ப்ரச்ன உபநிஷத் விவரணம்.

பிப்பலாதர் என்ற மஹர்ஷி ஓர் பெரிய ப்ரம்ஹ ஜ்ஞானி. அவர் உபதேசம் செய்வதில் ஸாமர்த்யமுள்ளவர் என எண்ணி அவரிடம் ஆறு சிஷ்யர்கள் அடைந்து ப்ரம்ஹஜ்ஞானமடைய ஹேதுவை கேள்விகள் மூலம் கேட்கலாயினர். இதைக்கேட்ட பிப்பலாதர் அறுவரையும் பார்த்து ஒரு வருஷம் ப்ரம்ஹசர்யம் வ்ரதம் செய்து வருவீர்களானால் உங்களுக்கு உபதேசம் செய்கிறேன் என்றார்.

அவர்கள் எல்லோரும் ஒருங்கே அவர் ஆச்ரமத்தில் இருந்து ப்ரம்ஹசர்ய வ்ரதம் ஒரு வருஷம் செய்யலாயினர். அவ்விதம் முடித்து பிப்பலாதரிடம் தனித்தனியே கேள்விகளை கேட்கலாயினர்.

அதினுள் முதல் பேர்வழி கபந்தர் என்பவர் கேட்டார். ப்ரஜைகள் எங்கிருந்து உண்டாகின்றனர். என்ற கேள்விக்கு பதில் ப்ரஜாபதியின் தபஸால் ஸோமன் அன்னம், ரயி ப்ராணன், இவர்களின் சேர்க்கையால் ப்ரஜைகள் உண்டாகின்றனர். ஸூர்யன் தான் ப்ராணன் சந்திரன் தான் அன்னம், ஸூர்யன் உதயமாகும் கிழக்கு திக்கில் கிரணங்கள் கிளம்பி நான்கு புறமும் அடைந்து அஸ்தமன காலத்தில் ஒடுங்குகிறது. அதுபோல் இது ஒரு அக்னி. உலகம் பூராவும் அடைவிக்க செய்கிறது. ஸம்வத்ஸரமே ப்ரஜாபதி. தக்ஷிணயணம், உத்தராயணம், அதையே இஷ்டாபூர்த்தம் என ரிஷிகள் உபாஸிக்கின்றனர். அதனால் பித்ருக்களுக்கு, சந்த்ரரூபமானவ்ருத்தி. ப்ரம்ஹசர்யம் முதலான உபாஸனைகளால் ஸூர்யன் மூலம் ப்ரம்ஹலோக மடையப்படுகிறது. இதுதான் ஐந்துருதுஉடைய பாதம். பன்னிரண்டு மாதங்கள். ஸ்வர்க்க லோகத்திற்கு மேல்உள்ளது ஜலத்துடன் கூடியது என விஷயமறிந்த மேதாவிகள் இதையே சொல்லுகின்றனர். எழுகுதிரை, ஆறுருது, ஆத்மா, முதலிய எழு என்று மேதாவிகள் கூறுகின்றனர். க்ருஷ்ணபக்ஷம், சுக்லபக்ஷம், என்ற இஷ்டிகளை ரிஷிகள் செய்கின்றனர். இரவு, பகல், ப்ராணன் பகல், ரயி இரவு, பகலில் ஸ்த்ரீயுடன் சேர்வது முட்டாள்தனம். இரவில் ஸ்த்ரீ சேர்க்கை ப்ரம்ஹசர்யம். இந்த ரேதஸ்ஸில் ப்ரஜைகள் உண்டாகின்றனர். இதுதான் ப்ரஜாபதி வ்ரதம். ப்ரம்ஹசர்யம், ப்ரம்ஹலோக மடைவிக்கும் தன்மை. ஸத்ய லோகத்தில் எப்பொழுதும் இருக்கும் தன்மை. அதுதான் பொய் அற்றது. மாயை அற்றது. குருட்டுத்தன்மை யற்றது. இதுவே முதல் கேள்விக்கு பதில் சொல்லப்பட்டது.

இரண்டாம் பேர்வழி வைதர்பி கேட்டது. தேவர்கள் ப்ரஜைகளை எப்படி கணக்கு இடுகிறார்கள். எவர்கள் ப்ரகாசிக்க செய்கின்றனர். இவர்களுள் யார் உயர்வு என்றதிற்கு பதில் சொல்லுகையில் ஐந்து பூதங்கள், வாக், மனஸ், கண், காது, இவைகள் கார்ய காரண கூட்டங்கள். இதனுள் ப்ராணன் சொல்லியது. மோஹம் வேண்டாம் ஐந்தாக பிரித்து செய்வோம் என்றதும், அவைகள் ச்ரத்தையற்று இருந்தனர். ப்ராணன் போகிறான் என்றதும், எல்லோரும் புறப்பட

எத்தனித்தனர். தேனீக்கள் யஜமானன் போனால் எல்லோரும் போகிறது. யஜமானன் உட்கார்ந்தால் இருந்தால் எல்லோரும் உட்காருகிறது. அதுபோல் ப்ராணன் போகிறேன் என்றதும், எல்லோரும் போகநேரிட ப்ராணனை மற்ற ப்ராணன்கள் ஸந்தோஷத்தினால் ஸ்தோத்ரம் செய்தன. ஸூர்யன், சந்த்ரன், அக்னி, பஞ்ச பூதங்கள், இவை ஸத், அஸத், அம்ருதம், இவைகள் சக்ரத்திற்கு ஆரக்கால் எப்படியோ அவ்விதம் ப்ராணனிலேயே முடிவு. நான்கு வேதங்கள், யஜ்ஞம், பரிபாலனம், எல்லாம் ப்ரம்ஹஸ்வரூபம். அது பிதா மாதா உருவம். ப்ரஜாபதியே கர்ப்பத்தில் இருந்து இவர்களை உண்டாக்க செய்கிறார். ப்ராணனை உத்தேசித்தே எல்லோரும் பலியை கொடுக்க இருப்பிடம் அடைகிறது என இவ்விதம் சொல்லியதும், எல்லோரும் தேவரை ஸ்தோத்ரம் செய்தனர். அக்னி, பித்ருக்கள், ரிஷிகள், அன்னம், கண், முதலியன ஸத்வ ரூபமாக எண்ணப்படுகிறது. இந்திரன் ப்ராணன் ருத்ரன் ஆகாசரூபம் என ஸஞ்சரித்து காப்பாற்றுதல் தொழிலில் நீ ஸூர்யன் ஜ்யோதிஸ்வரூபன் ப்ரஜைகள் உன்னை மழை மூலம் உருவம் என அன்னமடைகின்றனர். அன்னம் உண்டாகவேணும் என்பது கடமை. ஸ்வபாவமாகவே நீங்கள் சுத்தர்கள். நீங்களே பிதா, காற்று, சரீரம், வாக், எல்லாம் உன்னையே இருப்பிடம் அடைகின்றன. கண், காது, மனஸ், இவைகள் எனக்கு உண்டாகுக! என ப்ரார்த்தித்தல் வெளிக்கிளம்பக்கூடாது. இது ப்ராணன் வசமே இம் மூன்று உலகிலும் இருப்பிடம் தாயைப்போல் காப்பாற்று. எனக்கு லக்ஷ்மீகடாக்ஷம் உண்டாக்கச் செய் ப்ராணன் வசமே எல்லாம் இருப்பிடமடைந்து, புத்ரர்களை தாய் காப்பாற்றுவதுபோல், லக்ஷ்மி, ஜ்ஞானம், இவைகளை கொடு என உபதேசம் செய்தார்.

மூன்றும் பேர்வழி ஆச்வலாயனர் கேட்டது. எங்கிருந்து ப்ராணன் உண்டாகிறது. எப்படி உள்புகுந்துள்ளது. சரீரத்தை பிரித்து எப்படி செய்கிறது. எவ்விதம் இருப்பது. எப்படி வெளி, உள், கார்யங்களை கவனிக்கிறது. இவைகளை சொல்ல வேணும் என்றதும், பதிலில் அநேக கேள்விகளை கேட்டதினால் நீ ப்ரம்ஹ நிஷ்டனாகிறாய்! சொல்லுகிறேன் என ஆரம்பித்து ஆத்மாவினின்று ப்ராணன் புருஷனுடன் பொரிபோல் உள்ளவன், மனோவேகமாக சரீரத்தில் புகுகிறவன். அவன் தான் சக்ரவர்த்தி ஸ்தானம். இங்கு போ அங்குபோ என அதிகாரம் செய்து, பிறகு ப்ராணன் கூடவே செல்கிறது. தனித்தனி வேலைகளை அவை செய்கின்றன. ப்ராணன்,

வ்யானன், அபானன், உதானன், ஸமானன், என்ற ஐவர்களும் சேர்ந்து வேலைகளை செய்கின்றனர். ஸமானன் சாப்பிடும் பதார்த்தங்களை ஸரி செய்யும் வேலை. சரீரத்தில் நாடிகள் 72-கோடி 72-லக்ஷத்து 10-ஆயிரத்து 201-என்பது. கடைசியில் உதானன் புண்யபாபங்களை வகுத்துபோக செய்கிறான். ஸூர்யன் வெளி ப்ராணன்கள் மூலம் எல்லாவற்றையும் கொள்கிறான். பூமி அபானன் மூலம். வாயு வ்யானன் மூலம் எல்லாவற்றையும் கொள்கிறான். பூமி அபானன் மூலம், வாயு வ்யானன் மூலம் ஆகாசம் ஸமானன் மூலம், தேஜஸ் உதானன் மூலம் மறுபடி இந்த்ரியங்களுடன் உண்டாகிறான். சித்தத்துடன் ப்ராணன் வருகிறது. ப்ராணன் தேஜஸுடன் சேர்ந்து அடையும் லோகத்திற்கு சேர்க்கும் தன்மை. இதைத்தான் ப்ராணன் தன்மை என வித்வான் அறியவேணும். புத்ராதிகளைவிட்டு ப்ரம்ஹ லோகம் அடையும் தன்மை. உத்பத்தி, வருகை, இருப்பு, ப்ரகாசம், ரஜா, இந்த ஐந்தும் அத்யாத்மம் ப்ராணனுக்கு உள்ளது என அறிந்து, அம்ருதமடையும் தன்மை ஆகலாம் என பிப்பலாதர் உபதேசம் செய்தார்.

நான்காவது பேர்வழி கார்க்யர் கேட்டது. புருஷன் தூங்குகிறது, விழிப்பது, ஸ்வப்னம் பார்ப்பது, ஸுகம், இவைகள் எவ்விதம் ஸர்வ ப்ரதிஷ்டை என்ற கேள்விக்கு, பதில் அஸ்தமனத்தில் ஸூர்ய கிரணங்கள் ஒடுங்குவதும், உதயத்தில் கிரணங்கள் வருகிறதும், எப்படி தெரிகிறதோ? அதுபோல் மனதில் ஒருவிதமே உள்ளது. அப்புருஷன் கேட்பது, பார்ப்பது, முகர்வது, தொடுவது, ரஸிப்பது, சொல்வது, ஆனந்திப்பது, விடுவது, இழுப்பது, தூங்குகிறது இல்லை. எனவும் சொல்லுகிறார்கள் ப்ராணன், அக்னி, இவர்களது பட்டணத்தில் விழித்திருக்கிறான். மூன்று அக்னிகள் மூன்று ப்ராணன்கள் உருவம். மூச்சு விடுதல், இழுத்தல், முதலியவைகளை ஸரி செய்வது ஸமானன். மனஸ் யஜமானன். இஷ்டங்களை செய்வது உதானன். இரவு, பகல் ப்ரம்ஹத்தை அடையச்செய்யும் தன்மை. ஸ்வப்னத்தில் தேவர் மஹிமையை அநுபவிக்கிறான். எல்லாவற்றையும் பார்க்கிறான். ஸ்வப்னத்தினின்று பார்ப்பதில்லை. இச்சரீரத்தில் ஸுகம் அடைகிற தன்மை. பக்ஷிகள் எவ்விதம் மாலை நேரத்தில் மரத்திற்குபோய் வஸிக்கிறதோ? அவ்விதம் ஸர்வமும் ஆத்மாவில் இருப்பிடமடைகிறது. பஞ்ச பூத மாத்ரை முதலிய 32 அவயவங்கள் ப்ராணனுடன் தாரணம் அடையும் தன்மை. ஜ்ஞானம் எல்லாம் ஆத்மாவிடம் இருப்பிடத்தன்மை.

அடையும். அதுதான் அக்ஷர ப்ரம்ஹம். சுத்தமுள்ளது ஸர்வஜ்ஞன். விஜ்ஞான ஆத்மா ஸர்வ தேவர்களுடன் ப்ராணனே ஸர்வபூதங்களுடன் இருப்பு. அதுதான் அக்ஷர ப்ரம்ஹம். அதினின்று ஸ்வர்க்கம். ப்ரவேச தன்மையாய் உள்ளது என சொல்லப்பட்டது.

ஐந்தாவது பேர்வழி ஸத்யகாமர் கேட்டது. மநுஷ்யனிடம் ஓங்காரம் எவ்விதம் த்யானம் அடைகிறது. அவனால் எந்த முதல் தன்மை உள்ள உலகம் ஜெயிக்கப்படுகிறது? என்றதிற்கு பதில் ப்ரம்ஹம் ஓங்காரம் என வித்வான் அறிகிறான். ஒரு மாத்ரையினால் ப்ரம்ஹசர்யம். இரு மாத்ரையினால் ஸோமலோகம். மூன்று மாத்ரையினால் புருஷலோகம். தேஜஸ்ஸான ஸூர்யனுடன் சேர்ந்து மாம்ஸம், ஒரு பாதம் வயிற்று பாகம், முதலியவைகளால் விடுதலை. அது பாபமின்றி ஸாமாக்களால் ப்ரம்ஹலோகமடைய உயர்ந்ததன்மை. புருஷனைக்காட்டிலும் பட்டணத்துள் பார்க்கிறான் என பொருள். மூன்று மாத்ரைகள் ஒன்றுக்கொன்று சேராமல் கார்யங்களால் வெளி, உள், நடு, ஒரு இடமும் அவன் அடைவதில்லை. நான்கு விதங்கள் என கவிகள் அதை சொல்கின்றனர். ஓங்காரத்தினாலேயே அபயம் அடைகின்றனர். என சொல்லப்பட்டது.

ஆறாவது பேர்வழி பரத்வாஜர் கேட்டது. ஹிரண்யநாபர் என்ற கௌஸல்யர் ராஜபுத்ரன் என்னை அடைந்து 16-கலை உடைய புருஷனை அறியவில்லை. அதை எனக்கு சொல்லவேணும்! என்றதும் பதில், தெரியாததை நான் எப்படி சொல்லுவேன் என்றதும், நீ பொய் சொல்லுகிறாய்! என சொல்லி தேரில் ஏறிக்கொண்டு போய்விட்டான். அதை எனக்கு சொல்லவேணும் என்றதும்; பிப்பலாதர் பதில்; சரீரத்தில் 16 கலையுடைய புருஷன் உள்ளவன் ஒருவன் இருக்கிறான். அதினின்று அன்னம், ரேதஸ், புருஷன், வரை. நதிகள் எவ்விதம் ஸமுத்ரம் அடைகிறதோ? அவ்விதம் கலைகள் எல்லாம் புருஷனையே அடைகிறது. நான் இந்த நதி என சொல்லமுடிகிறதில்லை. அது போல் இதுதான் என தெரியாதபடி புருஷனையே அடையும் தன்மை. சக்ரம் புருஷன். 16 கலை ஆரக்கால்கள். இதை அறிந்தால் யமபயம் இல்லை. இதுதான் ப்ரம்ஹம். இதைத்தவிர வேறு ஒன்றும் சொல்ல வேண்டியதில்லை என முடிந்தவுடன் சிஷ்யர்கள் ஸந்தோஷமடைந்தனர்.

பிறகு அறுவரும் ஸந்தேஹம் தீர்ந்து குருவை நீங்கள் தான் எங்களுக்கு பிதா மாதா அவித்யையை நீக்கி கரையை தாண்டசெய்தவர்

என நமஸ்கரித்து ப்ரம்ஹலோகம் அடைந்தனர். அந்த ரிஷி பிப்ப லாதரை நமஸ்காரம் செய்யவேணும் அதர்வவேதம் ப்ரச்ன உபநிஷத் முடிவுபெறுகிறது. அதர்வவேத ஸூக்தங்கள் மொத்தம் 730 என குறிப்பிடவேண்டியது. அதுவே முக்யமாய் அறியவேணும், இம் மாதிரிஉள்ள அபூர்வ விஷயங்களை அறிவானுகில், அவனுக்கு ப்ரம்ஹ லோகம் கட்டாயம் கிட்டும் என்பது நிச்சயம்.

ஸூர்யன் நிமிஷத்திற்கு 2202 யோசனைமைல் சுற்றுகிறுன் என் பவிஷ்யத் புராணம் 53-ம் அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளது.

இரவில் பாதி வேளையை ஸூர்யன் அமராவதியிலும், யமன்கிரி யில் பாதியும், இருந்து வருகிறுன். சந்த்ர பட்டணத்தில் மஹேந்த்ர பர்வதத்தின் பாக அமராவதியில், எழுந்திருக்கிறுன். ஸூர்யனை காலையில் இந்த்ரன் பூஜிக்கிறுன். ஸூர்யனை மாலையில் வருணன் பூஜிக்கிறுன். அர்த்த ராத்ரியில் சந்த்ரன் பூஜிக்கிறுன். ஆகவே இம் மாதிரி உள்ள விஷயங்களை சிஷ்யர்களுக்கு பிப்பலாதர் சொல்லியதை யாவரும் அநுஷ்டித்து இஷ்டஸித்திகளை அடைவீர்களாக என சொல்லி உபநிஷத் முடித்தது.

---

## 5. முண்டக உபநிஷத் விவரணம்.

முன் காலத்தில் ஈசனிடமிருந்து பல ரிஷிகள் வரிசையாக விஷயங்களை அறிந்தார்கள் என சொல்லி பிறகு சௌனகர் கேள்வி யுடன் ஆரம்பமாகி, எதை அறிந்தால் எல்லாம் அறிந்ததாக ஆகுமோ அதை சொல்லவேணும் என்றதும், அதை சொல்ல ஆரம்பித்தார். பரப்ரும்ஹம், அபரப்ரும்ஹம், என இருவிதமாக பிரித்து அதை விமர்ச மாக சொல்ல ஆரம்பித்தார். அதில் பரப்ரும்ஹம் கர்மோபாஸனு ஜ்ஞானம் அபரப்ரும்ஹம் ப்ரும்ஹஸாக்ஷாத்கார லக்ஷணம், என வற் புருத்தி விசேஷமாக கூறியது. பரமாத்மா எங்கும் இருக்கிறுர். அவர் இல்லாத இடம் எங்கும் இல்லை. எப்படி அலைபோலும், அக்னி போலும், நுரை, தேஜஸ், இருப்பது போலும், எங்கும் இருந்து ப்ரகாசிக்கிறது. ஆத்மாவை அடைதலே நலம். தபஸ் முதலிய யஜ்ஞங்கள் ஜ்ஞானிகளால் செய்யப்பட்டு ப்ரம்ஹலோகமடைய அவர் கள் ஸூர்யனை தாண்டி செல்லப்படுகின்றனர் என்றும் வர்ணிக்கிறது. அம்மாதிரி விஷயத்தை வித்வான் அறிந்து செல்வானுகில், அவன் ப்ரம்ஹமாகவே ஆகிறுன்.

இதினின்று ஸர்வ உலகங்களும் உண்டாகின்றன, அழிக்கின்றன. அதுதான் இந்த ஜகத்திற்கு காரண உருவமுள்ளது. இதை அறிந்து வித்யை அடைவானுகில்; அவனே சிறந்தவன் என சொல்லுகிறது. இதை நாணில் இழுத்தல், டங்காரம் விடுதல், மூல பூதமான ஓங்காரம், என பலவிதமாக அதன் அம்சங்களை வற்புறுத்தி சொல்லுகிறது. இதில் குறிப்பு சொல்லுகையில் மரத்தில் இரு பக்ஷிகள் ஒன்று ஆஹாரம் செய்தும், மற்ஒுன்று ஆகாரமின்றியும், இருந்தது. அதில் ச்ரேஷ்டம் இரண்டாவது என வற்புருத்தியது. இதை புத்தியால், சர்ச்சையால், நேரில், பல மில்லாமல், (ஜ்ஞான பல மில்லாமல்) தபஸ் செய்தோ, அடைய முடியாது. ஜ்ஞானத்திருப்தி உள்ளவனே, அடைய முடியும். இது வேதாந்த ஜ்ஞான வித்தாந்த அர்த்தம்.

16 கலைகள். 15 கலை உள் இருந்து 16 வது கலை ஆத்மாவை அடைவிக்கிறது. எப்படி ஸமுத்ரத்தை எல்லா நதிகளும் அடைகிறதோ? அவ்விதமே என்றும் சுத்த மனதுடன் எவன் அதை அறிகிருனோ? அவனே அடைகிருன். இது ஸத்யம் என சொல்லி முடித்தது. ஆகவே ப்ரம்ஹம்தான் எல்லாவற்றிலும் மேலுள்ளது என்பதை நிரூபித்தது. இதை கொள்ளுதல் நலம் என முண்டகோபநிஷத் சொல்லி முடித்தது.

---

## 6. மாண்டூக்ய உபநிஷத் விவரணம்.

தேவர்களை த்ருப்தி செய்ய பல முறையில் உபதேசிக்க சங்கராசார்யர் உபநிஷத் 12-க்கும் பாஷ்யம் செய்துள்ளார். அதில் முதலில் மாண்டூக்ய உபநிஷத்துக்குத்தான் மங்கள ச்லோக பூர்வமாக பாஷ்யம் எழுதியதாக தெரிய வருகிறது. ஓம் என்பதின் தாத்பர்யத்தையும், அதன் அர்த்தம், மாத்ரை, ப்ரயோஜனம், மோக்ஷ ஸாதன உபாயம். எல்லாவற்றையும் எழுதி உள்ளதிற்கு ப்ரயோஜனுர்த்தங்கள் விளக்கப்படுகிறது. கௌடபாதீயவ்ருத்தியும், இதற்கு எழுதப்பட்டிருக்கிறது. எவ்விதம் கயிரைப்பார்த்து ஸர்ப்பம் என விகல்பத்திற்கு இருப்பிடமாகிறதோ? எவ்விதம் பரமார்த்த ஆத்மா இரண்டற்று இருந்து, ப்ராணுதி விகல்ப இருப்பிடமாய், எவ்விதம் காண்கிறதோ? அவ்விதம் எல்லா வாக்ப்ரபஞ்சமும் ப்ராணுதி ஆத்ம கல்ப்ப விஷயம் ஓங்காரமே. ஆகையால் ஓங்கார விஷயம் ஆரம்பிக்கப்

படுகிறது. அதுவும் ஆத்ம ஸ்வரூபமே. இந்த அக்னிசிரஸ், நல்ல தேஜஸ்கண், பெரிய உவரும் ப்ராணன், தனிவழி ஆத்மா, ஸந்தேகம் அநேகம், உள்பாக்ம் சந்த்ரன், பூமி கால்கள், இவை எழு அங்கங்கள்.

ஜ்ஞானேந்த்ரியம் ஐந்து. கர்மேந்த்ரியம் ஐந்து. ப்ராணவாயுக்கள் ஐந்து. மனஸ் புத்தி அஹங்காரம் என பத்தொன்பது மனஸ் முகங்கள். ஓங்காரத்யானத்தால்தான் மோக்ஷமடைய முடியுமென விஸ்தாரந்தமுள்ள அர்த்தம் தோன்றும் என்பதை அறியவேணும். ஓங்கார த்யானம்தான் முக்யஉருவம் என சொல்லி முடித்தது.

---

## 7. தைத்திரீய உபநிஷத் விவரணம்.

ஆத்மா ஸ்வயம் ப்ரம்ஹஸ்வரூபம். அதை அறிந்தால் அறிவில்லாத்தன்மை முறிவு. பின்பு ப்ரம்ஹ வித்யார்த்த உபநிஷத் ஆரம்பம். உபநிஷத் வித்யை சொல்லப்படுகிறது. அவ்வுபநிஷத் ஒழுக்கமடைய கர்ப்பத்தில் உண்டான கிழடுதன்மை நிவர்த்தி. அப்ப்ரகாசம் ப்ரம்ஹம். இவை அடையும ப்ராப்தி, ஸமீபத்தில் இருந்து பரமான ச்ரேயஸை அடைவிக்கிறது. அவ்விஷய நூல் உபநிஷத். ஸூர்யாதி தேவதைகள் ஸஹகார்யம் செய்வித்து வித்யாச்ரவணத்தை தரிக்கும் விநியோகாதிகளை தடங்கலின்றி அவனுக்கு கொடுக்கும். ப்ரம்ஹமறிந்தவன் நமஸ்காரபூர்வம் ப்ராம்ஹமுக கார்யத்தில் வாயு விஷயத்திலும் ப்ரம்ஹவித்யைக்கு உரிய சாந்தி சொல்லப்பட்டது. ஆத்மா த்யாகம். ஆதி பௌதிக, ஆதி தைவிக, வித்யா ப்ராப்தி முதலிய சாந்திக்கே உள்ளது. அர்த்த ஜ்ஞான ப்ரதான உபநிஷத். க்ரந்த பாடத்தில் கஷ்ட முண்டாகாமல் இருக்க சீக்ஷாத்யாயம் ஆரம்பம் சிக்ஷ சிக்ஷிக்கப்படுகிறது. என்பதாக வர்ணாதி உச்சாரண லக்ஷணங்களை ஸ்பஷ்டமாக நிறைய சொல்லப்போகிறோம் என ஸம்ஹிதை உபநிஷத் சொல்லப்படுகிறது. பின்பு அத்யயன லக்ஷண விதானம் ஆரம்பித்து முக்ய க்ரந்தத்தில் உண்டாகும் புத்திக்கு வரமுடியவில்லையே என உடனே அர்த்தஜ்ஞான விஷயத்தில் அவதாரம் செய்ய ஸம்ஹிதோபநிஷதின் ஸம்ஹிதை விஷயம். இதை ப்ரதானமாக சொல்லப்போகிறோம். உபாஸனா சாஸ்த்ர ப்ரகாச ப்ரஸித்தமுள்ள உபாஸனை சப்தார்த்தம் என மேதாகாமன், ஸ்ரீகாமன், இவர்களுடைய ப்ராப்தி ஸாதன ஜப ஹோமம் பின்பு சொல்லப்படுகிறது. லோகம்,

தேவர், வேதம், இவைகளை அறிய ஸாரத்தை க்ருஹிக்க ப்ரம்ஹன் தபஸினின்று ஓங்காரம் ஸாரமாக கிடைத்தது. ஆத்மஞான யோக்ய கார்யகாரண கூட்டம் மேதை உண்டாக்கவே ப்ரார்த்திக்கப்படுகிறது.

ஜபத்திற்கு பொருத்தமுள்ள இம்மந்தரங்கள் மேதை அடைய ஸாதன முள்ளது. ஹோமம் ஸ்ரீகாமனுக்கு மந்த்ரம் அதிகாரத்தால் ஓங்காரமே சேர்க்கை. ஸ்வாஹா முதலிய ஹோம உருவமந்த்ரங்களை ஞாபகப்படுத்தும் தன்மை. ஸ்ரீகாமன் வித்யாப்ரகரணத்தில் சேர்ந்து பணம் முதலியன அடைய ஸாதனம். இக் கர்மாவினுல் கஷ்டம் சீக்ரமாக தொலையும். அதுவே முக்ய ஸாதனம்.

ப்ரம்ஹத்தின் உண்மையான உபாஸனம் ஸ்வாராஜ்ய பலனடைய ஹேது என சொல்லப்படுகிறது. ஸாளக்ராமத்தில் விஷ்ணுவை த்யானம் செய்வதுபோல்; ப்ரம்ஹம் ஹ்ருதய ஆகாசத்தில் இருக்கும். ஆகவே அப் ப்ரம்ஹத்தை உபாஸிக்க தகுந்த மனோமயாதி தர்ம விசிஷ்டம் என எண்ணவேணும். ஸர்வ ஆத்ம பரிபாலனமடைய மார்க்கம் செய்யவேண்டியது. ஹ்ருதயம் தாமரை போன்ற உருவ முள்ள மாம்ஸ கூட்டம். ப்ராணனை அடுத்து அநேக நாடிகளுடன் சுத்தமாய் நீளமுள்ள வளைவு அடைந்துள்ளது. அது தலைகீழாக ப்ரகாசித்து பசுவின் காம்புபோல் தெளிவாய் இருக்கும். இவ்வித லக்ஷணமுடைய ஹ்ருதய ஆகாசத்தில் ஸாக்ஷாத்தாக உள்ளதை வித்வான்கள் ஆத்மபூத இந்த்ர உருவம், ஸ்வரூபமார்க்கம், என எண்ணுகின்றனர். ஹ்ருதயத்திற்குமேல் ப்ரவேசித்த ஸுஷும்னை என்ற நாடி யோக சாஸ்த்ரத்தில் ப்ரஸித்தி உள்ளது அதன் தன்மையே காணும். உலக தேவகாபூத பாங்க்தங்கள், மூன்றுவிதம். வாயு, இந்த்ரியம், தாது; பாங்க்தங்கள் மூன்றுவிதம். ஓங்கார பூர்வமாக ஆரம்பிக்கப்பட்டது. அது ஸமஸ்த கார்யங்களுக்கும் பலம். ஓங்காரத்தை ப்ரம்ஹமாக உபாஸித்தல் என அர்த்தத்தை அது விளக்கும்.

இவ்விதம் ச்ரௌத, ஸ்மார்த்த, நித்யகர்மாக்களும் சேர்ந்து காமனை அற்ற ப்ரம்ஹரிஷிகளால் அறியவேண்டி அவர்களுக்கு தனிமையில் காண்பிக்கப்பட்டுள்ளன. ஆத்ம வித்யாதி விஷயங்கள் சொல்லப்படுகின்றன. பதம் வ்யாகரணம், ஸாதுத்வவிசாரம். வாக்யம் மீமாம்ஸா, வேதவாக்ய விசாரம் ப்ரமாணம், த்யாகம், ப்ரதான மாக ப்ரத்யக்ஷப்ரமாணம், மந்தபுத்தி உள்ளவர்களுக்கும்கூட தானகவே

ஸமஸ்த பதார்த்த நினைவு உற்பத்திக்கு காரணம் என உபநிஷத்தில் எல்லா பதார்த்தங்களுக்கும் ஸந்தேஹமின்றி உள்ளது. ஜ்ஞானம் எவர்க்கு கஷ்டமாக தோன்றுகிறதோ? அவர்களுக்கு உபகாரமாகவே. இது ஜன்மாந்தரம், ஜன்மம், இவைகளில் அநுஷ்டித்த குறைந்த பாபத்திற்கு சுத்த மனமுடைய கர்மாநுஷ்டானம். ப்ரயோஜனம் படிப்பின்மையாய் அடைந்த பரிஹாரமே முக்தி அடைய ஸாதனம் என இப்பொழுது உபநிஷத்தில் ப்ரம்ஹவித்யையுடன் நிரூபிக்கப் படுகிறது. ஸ்வர்க்கத்தினின்று வரும் வழியில் இவ்வுலகில் அழகிய பாதமுடையவர்கள் எப்புண்ய கர்மாக்களை செய்கிறார்களோ? அக் கர்மாக்கள் மூலம் நல்ல ப்ராம்ஹண ஜன்மமடைந்து, தன் கர்ம பலன் அநுபவித்து, பின்பு மிச்சமுள்ள கர்மாவின் ஸத்பாவத்தை காண் கின்றனர். ப்ரம்ஹவித்யையே முக்திஸாதனமுள்ளது என எண்ணி உபநிஷத் விஷயம் அறிவது வாஸனா விஷய ஜ்ஞானம். அதை அறிய ஆசார்ய சிஷ்ய க்ரமமாக சொல்லும் விஷய வாஸனை ஜ்ஞானம் அது ஆசார்ய சிஷ்யர்களுக்கு முக்யமானது. மேதாகாமனுக்கு மேதா ஸாதன ஜபம் ஸ்ரீகாமனுக்கு ஸ்ரீப்ராப்தி ஸாதனஹோமம், இவை சொல்லப்படுகிறது. பசுக்களுள் ப்ரதானமாக ரிஷபம் எப்படியோ? அவ்விதமே வேத மத்தியில் ப்ரணவம் உயர்வு என்று அறியவேண்டியது.

எவ்விதம், உலகில் அரசஇலைகள் அநேக கோடுகளுடன் ப்ரகாசிக் கிறதோ? அவ்விதம் ஓங்காரம் சப்தாத்மகமாக ப்ரகாசிக்கிறது. ப்ரம்ஹா வேதத்தையும். உலகத்தையும். காச்சினார். மூன்று வித்யைகள் உண்டாயின. அதை மறுபடியும் காச்சியதில் பூ: புவ: ஸுவ: என்ற பதங்கள் உண்டாயின. அதை மறுபடியும் காச்சினார். ஓங்காரம் அ உ ம என்ற எழுத்துக்கள் உண்டாயின. மூன்று வேதங்கள் எனவும் சொல்வதுண்டு. பத்னீயம் யஜமானன், புத்ரன், தேவர், மநுஷ்யன், பணம், இவை ஐந்தும் சேர்க்கை தைவவித்த உபாஸனம். மாநுஷ்ய வித்தம், பசுக்கள் என பிரிவு. இவ்விதம் விஷயங்களை வெகு விஸ்தார மாக ப்ரம்ஹ ஆனந்த ப்ருகுவல்லிகள் மூலம் சொல்லி உபநிஷத் முடித்தது.

---

## 8. ஐதரேய உபநிஷத் விவரணம்.

அவித்யையை ஆசைப்பட்டால் கர்மாநுஷ்டான துக்கத்தில் ரோக மாகிற ஜலம் கிழட்டுத் தன்மையையும், யமபயத்தையும் உண்டாக்கும்.

பெரிய முதலையை தள்ளி, அனுதியுள்ள கரைபுரளும் படிப்பை அடைந்து, இந்த்ரிய விஷய ஸுகங்களை அநுஷ்டித்துள்ளதை அறுத்து பஞ்ச இந்த்ரிய தாகத்தால் உண்டான காற்றின் அசைதலால் அநேக ஆனந்தமடைந்து பெரிய கடலில் விழாமல் அடைவதுதான். அப்படி இல்லாமல் கர்மேந்த்ரியங்களால் உண்டானது ஹா, ஹா, என்ற சப்தத்துடன் பெரிய த்வனிகளால் அநேக மஹாபாதகங்களாலுண்டான கார்யங்கள் கஷ்டங்கள் யஜ்ஞம், தானம், தபஸ், தயை, அஹிம்ஸை, மதம், கொழுப்பு, தொடாமை, முதலிய ஆத்மகுணவழி. கர்மா பூர்ண ஜ்ஞானம் என்ற தோணியில் ஸத்ஸங்கம் ஸர்வத்யாக மார்க்கத்தில் மோக்ஷமாகிற கரை பெரிய கடல். வித்யை, அவித்யை, என்ற உபாஸகர்கள் மூழ்கினவர்கள் இருந்து வருகின்றனர். அதை விட்டு ப்ரஜ்ஞானஸத்வம் அடைய ஆத்ம ஜ்ஞானமடைதல். மோக்ஷ இச்சை அடையும் தன்மை.

ஜகத் உத்பத்தி, ஸ்திதி, ப்ரளயம், இவைகளை செய்யும் ஸம்ஸாரி அற்ற ஸர்வஜ்ஞன், ஸர்வசக்தியாய் ஸர்வத்தையும் அறிந்த இந்த ஸர்வ ஜகத்துகளில் தானுகவே வேறு வஸ்துக்களை உண்டுபண்ணுமல் ஆகாசாதி வரிசைக்ரமமாக ஸ்ருஷ்டி செய்து தனது ஆத்மாவை போதனம் செய்வதற்காகவே ஸர்வ ப்ராணுதிகளான சரீரங்களை தானே ப்ரவேசிக்க செய்வதாய் ப்ரவேசித்தும், தனது ஆத்மாவை முன் போலவே இந்த ப்ரம்ஹமாகிறேன் என உண்மையாக விழிக்க செய்ய சொன்னுர். அக்காரணத்தால் தனது சரீரங்களில் தானே உள்ள ஆத்மா ஒன்று தான் அது தவிர வேறில்லை. இதரத்திற்கும் ஸமமானது ஆத்மா. ப்ரம்ஹமாகிறேன் என இவ்விதம் நினைத்தார். ஆத்மாதான் இக்காணப்படுகிற ப்ரபஞ்சத்தில் ஒன்ருகவே முதலில் இருந்தது. அது தான் ப்ரம்ஹம், சிரேஷ்டம். அவித்யை காமன்ய ஜ்ஞாதி கர்மாக்களை செய்து இந்த லோகத்தினின்று புகை மார்க்கமாக சந்திரலோகமடைந்து குறைந்த கர்மாக்களால் மழை உருவமாக இப்பூலோகமடைந்து அன்ன உருவமாக புருஷ அக்னியில் ஹோமம் செய்யப்பட்டவனுகவே மறுபடி பிறக்கிருன்.

ஆகையால் முக்யமாக ஆத்மாவை அறிகிறவனுக்கு பிறப்பில்லை. எல்லாவற்றிலும் ஸுகதுக்கமின்றி ஸமமாகிருன். அதுதான் உபநிஷத்தை விளக்கும் மந்த்ரம் என சொல்லி முடித்தது.

———

## 9. சாந்தோக்ய உபநிஷத் விவரணம்.

ப்ராணாதி தேவதையை அறிவதுதான் அர்ச்சிராதி மார்க்க ப்ரம்ஹ மடைய காரணம். கேவல மநுஷ்யனுக்கு புகைமார்க்கமாக சந்திர லோக ப்ராப்தி. ஸ்வபாவ வ்ருத்தி உள்ளவர்களுக்கு மார்க்கம். இரண்டுமின்றி தள்ளப்பட்டவர்களாகி கஷ்டமுள்ள அதோகதிதான் சொல்லப்படுகிறது.

உத்கீத உபாஸனே உபதேசம் அநேக விதம் காணும். ப்ரம்ஹசாரி, க்ருஹஸ்தன்; வானப்ரஸ்தன், ஸந்யாஸி இவர்களுக்கு கர்மாக்களை போதிக்கும் உபாஸனை விஷயங்கள். அமராவதி பட்டணத்தில் உதய. அஸ்தமனங்கள், கிடையாது. அவ்விடத்தில் உதய, அஸ்தமனங்கள், ஜனங்களுக்கு தெரியாது. அமராவதியில் எல்லா திக்குகளிலும் ஸூர்யன் உதயம், அஸ்தமனம், இதை எப்பொழுதுமே காணும், இவ்விதம் ப்ரம்ஹமறிந்த வித்வானுக்கு உதய, அஸ்தமனங்கள் தெரியாது. இது நித்யமே பிறக்காமல் ப்ரம்ஹமாகவே ஆகிறான். அநேக சந்தஸ்களில், காயத்ரீயினாலேயேதான் ப்ரம்ஹஜ்ஞானமடைய வழி. உபாதானம், ப்ரதானம், ஆறுவித காயத்ரீ ரூபம் கீழ்க்கண்ட வாறு ப்ரகாசிக்கிறது. வாக், பூதம், பூமி, சரீரம், ஹ்ருதயம், ப்ராணன். முதலிய ஆறுவிதம் கண், காது, வாக், மனஸ், ப்ராணன், என இவ் வைந்தும் த்வாரபாலகர்கள். ப்ரம்ஹத்திற்கு காரணபூதமான அடையும் வழி. 116 வருஷம் ப்ராதஸ்ஸவனம், மாத்தியந்தினஸவனம், த்ருதீயஸவனம் என்ற மூன்றுவித யஜ்ஞகர்மாக்களையும், ஜபங்களையும், ஹோமங்களையும், எவன் செய்துகொண்டு இருக்கிறானோ? அவன் ஜீவித்திருந்து புண்ய உலகம் 116-வது வருஷத்தில் அடைகிறான், அப்புருஷனுக்கு 116-வருஷங்கள் ஆனவுடன் அவப்ப்ருதஸ்நான யாக ஸ்மாப்தி.

இவ்விதம் ஒருவன் யஜ்ஞஸம்பந்த உபாஸனையை அறிகிறவனானால், அவன் இவ்விஷயங்களால் அறியப்பட்டவன் என ப்ரம்ஹலோகத்தில் உள்ளவர்கள் இவனை உபசரித்து, ப்ரம்ஹத்துடன் சேர்க்க செல்கிறார் கள். இது முக்ய கருத்தான விஷயம். ஆகையால் இவ்வுபாஸனையால் ப்ரம்ஹமடைய முக்ய மார்க்கம் என நன்கு தெரியவருகிறது. ஸயுக்வா ரைக்வர் க்ருதாயர். (க்ருதாயர் என்பது நான்கு யுகங்கள் 1, 2, 3, 4 இந்த நான்கும் எண்ணிக்கையால் 10 ஆகிறது.) இவைகளை ஜெயித்தவர், ரைக்வர், ப்ரம்ஹ உபாஸகதத்பரர், அர்ச்சிராதி

தேவதையை ஸம்பந்தித்து உபாஸனையால் ப்ரஹ்ம மார்க்கமடைய தேடுகிறவர். இதினால் உண்டாகி செல்கிற ப்ரம்ஹத்தை மநுஸம்பந்தமுடைய மநுஷ்யன் ஸ்ருஷ்டி லக்ஷண சமயத்தில் திரும்பவும் வருகிறதில்லை. இந்த ஜனன, மரண, ப்ரபந்தமுடைய சக்ரத்தில் எறிய இரும்பு சகடை வண்டி மறுபடி, மறுபடி, திரும்புகிறது போல் வருகிறதில்லை. ஆகையால் ப்ரம்ஹத்துடன் தானும் ப்ரம்ஹமாகவே ஆகும் தன்மை. யஜ்ஞப்ராணன் யஜமானன். எந்த யஜ்ஞத்தால், மநுஷ்யன் இவ்விதம் உண்மையாக வ்யாஹ்ருதி ஹோம ப்ராயச்சித்தங்களை அறிந்து செய்கிறானோ? அவன் ப்ரம்ஹரித்விக் ஆகிறான். அதுதான் யஜ்ஞம், மலம், மூத்ரம், வாதம், பித்தம், ச்லேஷ்மம் இவைகளை பூர்ணமுடைய தாயின் சரீரத்தில் அதனுடன் சேர்ந்து கர்ப்பத்திற்கு ஜராயுவுடன் சுத்த வஸ்த்ரம் போல் சூழ்ந்து, சிவப்பு ரேதஸ் சத்தி அடைந்து, கர்ப்பம் தாயிடம் சாப்பிட்டு இருக்கும், குடிக்கப்படுகிறது. இதன் ரஸத்துடன் ப்ரவேசித்து வ்ருத்தி அடைவதால் தடுத்த சக்தி பலம், வீர்யம், தேஜஸ், ப்ரஜ்ஞை, சேஷ்டை, இவைகளுக்கு சேர்க்கை உண்டாகிறது.

பின்பு யோனித்வாரத்தினின்று கஷ்டப்பட்டு வெளிவந்து, ஜன்மா அடைகிறது. வைராக்யமடையாமல் இருக்கிறது. ஒரு முஹூர்த்த காலம் ஸஹிக்கமுடியாதபடி, 9 மாதமோ, 10 மாதமோ, ஜாஸ்தி நீளமுள்ள காலமோ, உள்ளே படுத்திருக்கிறது. பூர்வ ஜன்மங்களது அநுபவவாஸனை அடைந்து அது நிற்கும். குரங்கு ஜன்மம் ஆரம்பித்து குரங்கு பிடி, பிறந்த மாத்திரத்திலே தாயினது கார்யம் போல் கிளைக்கு கிளை தாண்டும் தன்மை உண்டாகிறது. தாயின் விலாவில் ஒட்டிக்கொண்டு கட்டிக்கொள்வதுபோல், இந்த ஸாமர்த்யமடைகிறது. இந்த ஜன்ம அப்யாஸ மின்மை அதற்கு தெரிகிறதில்லை. ஆகவே பலனை வாஸனையால் அறிந்து, ஸமஸ்த கர்மாக்களையும் துலைத்தல், முக்யம் என அறிக.

ஸத்தினின்று உண்டான ஜகத் ஆத்மரூப தேஜஸ், அன்னம், இவைகளுடன் சேர்ந்து தேஹமாகிற காட்டில் வாதம், பித்தம், கபம், ரத்தம், கொழுப்பு, மாம்ஸம், எலும்பு, ஊந்தண்ணீர், சுக்லம், க்ருமிகள், மலம், மூத்ரம், சீதம், உஷ்ணம், இவ்வித அநேக ஸுக துக்கங்கள் மோஹாஸ்த்ரத்தால் கட்டுண்டு அடைந்து ஸம்ஸாரம், புத்ரன், ஸ்நேஹிதன், பசு, பந்துக்கள், இவர்களது பார்வை. பார்வை

யின்மை முதலிய அநேக விஷயங்களுடைய ஆசையால் சாப்பிடப்பட்டு புண்ய, பாபம், என்ற திருடர்களால் ப்ரவேசிக்கப்பட்டு நான் என் புத்ரன், இந்த பந்துக்கள், ஸுகி, துக்கி, மூடன், பண்டிதன், பணக்காரன், என்றும் உறவு நிறைந்து உண்டாய் மரணமடைந்து துலேந்த பணம்போல் எல்லாம் நஷ்டமடைகிறது.

ஹா! கொல்லப்பட்டவனுகிறேன். எப்படி ஜீவிக்க போகிறேன். என்ன கதி காப்பாற்றுபவர் யார் என அநேக ஆயிரம் வநஷங்கள்தான் பணங்களே எண்ணிக்கொண்டு கஷ்டப்பட்டே புண்ய மேலீட்டால் பரம கருணேயுடன் கட்டுதலேவிட்டு, ப்ரம்ஹநிஷ்டனே எப்பொழுது அடைகிருனே? அப்பொழுது அந்த ப்ரம்ஹவித்தால் கருணேயுடன் காண்பித்த ஸம்ஸார விஷய தோஷ தர்சன மார்க்கத்தினின்று விடுபட்டவனுகி, ஸம்ஸார விஷயத்தில் இனி இருக்கமாட்டேன். இந்த ஸம்ஸாரம், புத்ரன், தர்மம், எங்கே? என ஸத்தின் தத்துவம் அறிந்து, அவித்யா மோஹத்தை வேஷ்டி உருவம் போல் துலேத்து, மோக்ஷமடையும் தன்மை. எவ்விதம் கந்தாரதேச புருஷன் தனது கட்டு அவிழ்க்கப் பட்டதும், அறிந்தவனே அடைந்து, தெரிந்துகொள்கிருனே? அவ்விதம் தன் ஸத்தான ஆத்மாவை அடைந்து ஸுகியாகி திரும்புகிருன். அதற்கு ஆசார்ய புருஷனேயே அடைந்து தெரிந்துகொள்ளவேணும் என இதனுல் புலப்படுகிறது. அறியாதவன் ஸத்தினின்று உண்டாய், முன் உண்டான புலி முதலிய தேவ மநுஷ்யாதிகளே ப்ரவேசிக்கிருன். வித்வான் சாஸ்த்ர விஷயம், ஆசார்ய உபதேசத்தாலுண்டான ஜ்ஞானம், என தீபத்தால் ப்ரகாசிக்கும் ஸத் ப்ரம்ஹ உருவம் ஆத்மா, என ப்ரவேசித்து அவன் திரும்புகிறதில்லே.

ஸத்தில் உண்டாகிறதிலும், அடைவதிலும், உள்ளவிஷயம், கர்ம மார்க்கங்கள் சிரவிலுண்டான நாடியினின்று வெளிக்கிளம்பி ஸூர்ய த்வாரமார்க்கமாக, ஸத்தை அடையும் என சொல்லுகின்றனர்.

பொய் சொல்லாதவன் எப்படியும் நல்ல மார்க்கமடைய வழி தேடுவான் என்பது நிச்சயம் என நாரதருக்கு ஸனத் குமாரர் உபதேசித்த விஷயம். ஒவ்வொன்றிலும் ஒவ்வொன்றும் மேல், மேல்; என ஸுலபமாக அறிய உபதேசித்த விஷயத்தால் புலனுகிறது. ஸனத்குமாரர் மஹேச்வரனது சிஷ்யர்களுள் ஒருவர். அவர் தக்ஷிண மூர்த்தி அவஸரத்தில் சிஷ்யராய் இருந்தவர். அவர் மஹேச்வரனிடம் உபதேசம் முதலியன அடைந்து யாவும் முடித்து ஸமாவர்த்தனத்திற்கு பிறகு ஈச்வரனிடம் வீட்டுக்குபோக அனுமதி கேட்டார்.

அப்பொழுது ஈசன் அவரை குருதக்ஷிணை கேட்க ஸனத்குமார் எது வேணுமானாலும் தருகிறேன் என்றதும், அதற்கு மஹேச்வரன் நீ மிகுந்த புத்திசாலி எனக்கு மற்றுமோர் ஸமயம், உபதேசம் செய்யும் ஸமயம், எனக்கு குருவாவாய்! என அருள் புரிந்தார். பின்பு அவர் பார்வதியை மணம் செய்துகொண்ட காலத்திற்கு பின்பு அஸுரர்களது ஹிம்ஸையை தாங்காது கஷ்டப்படும் தேவர்களது வேண்டுகோளுக்கிணங்கி, ஸுப்ரமணியரை உத்பத்தி செய்தார். ஓர் ஸமயம் ப்ரவண வார்த்தத்திற்கு அர்த்தம் ப்ரம்ஹாவை கேட்க தெரியாது, நிற்கும் ப்ரம்ஹனை சிறையில் அடையுங்கள் என்ற ஸுப்ரமணியரது ஆஜ்ஞையால் அடைத்து, பிறகு அவர் ஈச்வரனுக்கு குருவாக இருந்து, ப்ரணவ அர்த்த தத்துவத்தை உபதேசித்தார் என்பது புராண ப்ரஸித்த விஷயம். ஆகையால் அவ்வித மஹிமை பொருந்திய ஓங்கார ஸ்வரூபமுள்ள ஆத்மா ப்ரம்ஹமறிய முயலுவோர்க்கு ஸர்வ இஷ்டங்களை கொடுக்கிறது. ஆகையால் தான் ஸ்கந்தரை ஸனத் குமாரர் எனவும், ஸனத்குமாரரை ஸ்கந்தர் எனவும் சொல்வது.

ஹ்ருதய புண்டரீக மத்தியிலுள்ள ஆத்மாவை த்யானம் செய்து கொள்ள கார்யம் முக்தி அடையும் தன்மை. எவ்விதம் அறிகிறவனாகவோ? அறியாதவனாகவோ? ஸர்வ ஜகத்துகளும் ஸத்தான ப்ரம்ஹத்தையே தத்வமஸி என்ற வாக்யத்தால் அடைகிறானே? அவன் ஸத்தாகவே ஆகிறான். அஸுர ராஜன் விரோசனன், தேவராஜன் இந்த்ரன், இருவர்களும் பிரம்ஹாவிடம் ஆத்மோபதேசம் கேட்கவேணும் என கேட்கையில் சரீரத்தில்தான் ஆத்மா இருக்கிறது. அதைத்தான் அறிய வேணும் என்றதும் அஸுரராஜன் சரீரமே ஆத்மா, என்று ஜலத்தில் எவ்விதம் ப்ரதிபிம்பம் சரீரத்திற்கு தெரிகிறதோ? அதுதானே ஆத்மா, என நான் ஆகிறேன் என சொல்லி புத்தியில்லாமல் அஸுரர்களுடன் போய் பேசினான். பிறகு அவமானம் அடைந்தான் இந்த்ரன் பூராஸந்தேகத்துடன் அடிக்கடி கேட்டு ஆத்மாவை அறிந்தான். அதுபோல் ஆத்மாவை அறியவேணும் என சொல்லி முடித்தது.

---

## 10. ப்ருஹதாரண்யக உபநிஷத் விவரணம்.

அச்வமேத குதிரை நிமித்தம் ஸம்பந்த ப்ரகரணம் ஆரம்பித்து அதன் உருப்புகளை அப்படியே ப்ராணி இந்த்ரிய உருவங்களாக

த்யானம் செய்யும் ஆஜ்ஞை உருவம். யஜ்ஞத்தை யோக்ய அம்சமாகச் செய்து உபாஸனு விஷயமாகக் கூறியது இது முக்ய விஷயம். ப்ரம்ஹ லக்ஷணம் இது எனக் குறிக்கிறது. அதற்கு உலகம் பூராவை யும் ஜ்ஞான ஸாதன உருவ விஷயமறிதல் என தத்வ உபதேசம் செய்யப்படுகிறது. பிறகு பஞ்ச பூதங்களது ஸ்ருஷ்டியை விவரமாகக் கூறியது. அஸுரனும், தேவனும். உத்கீத உபாஸனே செய்ததினுல் ச்ரேயஸ்-தேவர்களுக்கு இது கடைசியில் கிடைத்தது எனக் கூறியது, ஒவ்வொரு இடமாக வேத பாகங்களே ம்ருத்யு பாபத்தால் அடைந்தது. அதைத் தாண்டி. தாண்டி உயர்வாக அடைந்தன எனவும் கூறியது. கண் முதலான இந்த்ரியங்களே காட்டி ஆத்மஜ்ஞான உபதேசங்களைக் கூறியது. பின்பு ப்ரம்ஹதத்தன், சேகிதானன் என்ற அரசர்கள் கேள்வி கேட்டதாகக் குறிப்பு ஆரம்பித்து உலகம் பூராவும் ஆத்மாவையே காரணமுடையதாக உபாஸித்தன என ப்ரகரணம் சொல்லிற்று.

ஸ்த்ரீ புருஷர்கள் ஸ்ருஷ்டியால் கர்மாவை விஸ்தாரமாகக் கூறியது. முதல் ஸ்ருஷ்டியில் பசு உண்டாயிற்று என வர்ணித்தது. எல்லாம் ஆத்மாவுக்கே ப்ரியமுள்ளது எனவும். ச்லாகித்துக் கூறியது இதைத்தான் ப்ரம்ஹவித்யை என உபாஸிக்கவேணும். ப்ரம்ஹமே முதலில் உண்டானதாகவும், பிறகு எல்லாம் உண்டாயிற்று எனவும், விஸ்தாரமாகச் சொல்லியது. பிறகு ப்ராம்ஹண, க்ஷத்ரிய, வைச்ய, சூத்ரர்கள் உண்டாயினர் எனவும், பிறகு அநேக ஸ்ருஷ்டிகள் உண்டான தாகவும் விஸ்தரித்தது.

கடைசியாக ஸூர்யன் முகமாக நல்லுலகம், போகவழிகள், அர்ச்சிராதிமார்க்க உபாஸனே விஷயத்தை. விசேஷமாகச் சொல்லியது. அடுத்தது கார்க்யர், ஜனகர், என்ற வர்ணனே ஆரப்பித்து ஸூர்யனிட முள்ள ஓர் உருவம் ஆத்ம ஸ்வரூபம் எனவும், சந்த்ரனிடமும், நக்ஷத்ர மிடமும், ஆகாசத்தினிடமும், வாயுவினிடமும், அக்னி, ஜலம், கண்ணுடி, திக், நிழல், ஜாக்ரத், ஸ்வப்ன, ஸுஷுப்தி, முதலியவை களிடமும், ப்ரம்ஹமே என உபாஸிக்க வேணும் என விவரித்துக் கூறியது.

அக்னியில் எவ்விதம் பொரிகள் உண்டாகிறதோ? அவ்விதமே ஆத்மாவிடமும் எல்லாம் உண்டாகிறது என வர்ணித்தது. ஆதி பௌதிக, ஆதிதைவிக, ஆத்யாத்மிக, வித்யா உபாஸனேகள் விரிவாகச்

சொல்லியது. பிறகு யாஜ்ஞவல்க்யரிடம் அவரது மனைவிகள் இருவர் காத்யாயனீ, மைத்ரேயி, பாக உருவ ப்ரம்ஹஜ்ஞான மறிதல் செய்யும் விஷயம், ஸூசனை செய்யப்பட்டது. எல்லாம் ஆத்மாவினின்றே உண்டாய் ஆத்மாவிடமே லயமடைகிறது. எனவும், விஸ்தாரமாகச் சொல்லியது. இதையே இவ்வுலகங்களில் விஸ்தாரமாக உதாஹரணம் காட்டிச்சொல்லும் தன்மை. இந்த வித்யை வந்த விதத்தை, வரிசை க்ரமமாக ரிஷிகளின் பெயரையும் குறித்துச் சொல்லியது.

ஜனகர் ஒரு பெரிய மேதாவி. யஜ்ஞம் செய்து ப்ராம்ஹணர்களுக்கு தக்ஷிணை கொடுத்தார் என ஆரம்பித்து விஸ்தாரமாக ப்ரம்ஹத்தின் லக்ஷணத்தைக் கூறுகிறவர்களுக்கு நூறு பசுமாடு கொடுக்கப்படும். என்ற பரிசுடன் விஷயம் ஆரம்பமாகி, விவரித்தது. ஸமஸ்த ரிஷிகளும், விவாதித்துக் கடைசியில் ஜனகர் பதில் சொல்லுகையில்; பிறகு யாஜ்ஞ வல்க்யர் ஜனகரிடம் அடைந்து கேட்டார் என்றும் முடித்தது. யாஜ்ஞ வல்க்யருக்கு ஜனகர் சொல்லிய த்ருஷ்டாந்தங்களில் த்ருப்தி அடைந்து, ஆத்மாவை ஸ்தோத்ரித்து சரீரத்தால் ஆத்மா, ஜீவாத்மாவுடன் பாபத்துடன் இருந்து, பிறகு அந்த பாபத்துடனேயே வெளிக்கிளம்புகிறது. ஸ்வப்பனத்திலும், தூங்குகையிலும், எவன் தூங்காமல் இருக்கிறானோ? அவன்தான் ஆத்மா. அவனைத்தான் எல்லோரும் போற்ற தன்மை அடையவேணும். எனச்சொல்லியது. கஷ்ட நிவர்த்திக்காக எவன் உபாஸிக்கிறானோ? அவன் நல்லுலகம் அடைகிறான் எனவும் விசேஷமாகச் சொல்லியது.

ஜாக்ரத், ஸ்வப்ன, ஸுஷுப்திகளின் யோக்யதைகளை விஸ்தாரமாகச் சொல்லியது. ஸ்தூல ஸூக்ஷ்ம, ப்ராணனது உபயோகத்தையும் விவரித்துச் சொல்லியது. ஐந்து கோசங்களின் வ்யவஸ்தைகளை விஸ்தரித்துச் சொல்லிற்று. காமனைகள் ஒழிந்தால் தான் பிறகு அகாமனையால் ஈசன் ஸத்யமடையும் தன்மை என வற்புறுத்திச் சொல்லுங்கால்; இதர உலகங்களால் அடைய முடியாத் பாபக்கூட்டம் இதற்கும் இருப்பிடம். இதை எவன் அறிந்து ப்ரம்ஹலோஹம் செல்கிறானோ? அவன் ப்ரம்ஹத்தை அறிந்தவன். எனப் பெயர் அதை அடையும் தன்மை. அவன் ஒரு பாபங்களிலும் ஸம்பந்திக்காமல் சேருகிறான் என விஸ்தரித்தது. அவன்தான் அபயமடையும் தன்மை. தேவர், அஸுரர், சேர்ந்து கொண்டு அக்ஷரப்ரம்ஹத்தை அடைய இச்சித்தனர் என ஸ்தோத்ரம் செய்தது. ச்ரேஷ்டம், ஜ்யேஷ்டம், என

உபாஸனே செய்ய வேணும் எனவும் விஸ்தரித்துச் சொல்லியது. இந்த்ரியங்கள். 32.ம், நான்தான் ஒவ்வொன்றிலும் பெரியவன் எனக் கூற ஒவ்வொன்ருக இல்லாமல் இருந்தால் எதுவோ அத்தன்மையை விஸ்தரித்தது. பிறகு ப்ராணன் முக்யமாக உள்ளவன் என நிரூபிக்க, அது போகிறேன் என்றதும் எல்லாம் புறப்பட்டது. எவன் இல்லாமல் ஒன்றும் நடவாதோ? அதுவே ப்ரம்ஹ உருவ ப்ராணன் என விஸ்தாரமாக விடாமனதுடன் கூறி ஸ்தோத்தரித்தது.

இவைகளை வைத்துக்கொண்டு யஜ்ஞம், தானம், தபஸ் இவைகளை எவன் அகாமனேயில் உபாஸிக்கிருனே? அவன் நல் உலகம் அடைபவன் என விஸ்தரித்தது. ரிஷிகள் வம்சம், பெயர், முதலானவைகளைச் சொல்லியது. கடைசியாக இனி பாப ரூபமான உலகில் பிறப்பு அற்று, ஸ்த்ரீ கர்ப்பத்தில் செல்லாமல் ப்ரம்ஹமாகவே ஆகவேணும் என உபாஸனேயை சொல்லி முடித்தது. செய்தவனே ஸத்பாத்ரன், அவன் தான் வீரபுத்ரன், எனவும் வற்புறுத்தியது. ப்ரம்ஹவர்ச்சஸை அடையவேணும். அதற்கு ஸத்குருவை அடைந்து, அவர் உபதேச மூலம் ப்ரம்ஹ ப்ராப்தி அடைவதே முக்யம். மற்றது நாசமுள்ளது எனச்சொல்லி ப்ருஹதாரண்யக உபநிஷத் அஜ்ஞான நிவ்ருத்திக்கு லக்ஷணத்தையும் கூறியது என நாம் அறிந்து நல் உலகமடைய வழி தேடுவோமாக! அப்படி அடைந்தால் மறுபடி திரும்பவேண்டியதில்லை என வற்புறுத்தி முடித்தது.

---

## 11. ச்வேதாச்வத்ர உபநிஷத் விவரணம்.

ப்ரம்ஹம் எங்கிருந்து உண்டாகிறது? என கேள்வி கேட்கப்பட்டு மேற்கொண்டு அவர்கள் த்யான யோகமடைந்து, தேவாத்ம சக்தியை, கண்டனர். தனது சரீரத்தை அரணிக்கட்டையாக த்யானம் செய்து கடைவதினுல் உண்டான அப்யாஸம், மறைந்த ஈச்வரனைப் பார்ப்பது தான் கடமை எனகண்டது. எப்படி எள்ளினின்று எண்ணே உண்டாகிறதோ? தயிரில் நெய் உண்டாகிறதோ? தண்ணீரில் அலே உண்டாகிறதோ? அவ்விதமே அரணிக்கட்டையிலும், அரணி அது ஆத்மா ஒன்றுதான். இது ஆத்மாவிலும் கொள்ளப்படுகிறது. இதை தபஸ் செய்து நன்கு எவன் பார்க்கிருனே? அவன் ஸர்வவ்யாபி. ஆத்மாவைப் பார்க்கிருன். பாலில் நெய்போல்; ஆத்மாவையே தபோமூலம்,

அடைவதுதான் பரப்ரம்ஹ உபநிஷத். ப்ரம்ஹம் என்ற ஓடத்தில் ஏறி வித்வான் அலைகளைத் தாண்டி கரையை அடைய பயமூலங்களைத் தள்ளுகிறான். நிறைந்த ஐச்வர்யம், தர்மம், லக்ஷ்மி, ஜ்ஞானம், வைராக்யம், என்ற ஆறுகுணங்கள் ஈச்வரனுக்கு உள்ளகுணங்கள் என சொல்லப்படுகிறது.

வேதம், யஜ்ஞம், யஜ்ஞஸாதனம், வ்ரதம், நடப்பு நடக்கிறது. நடந்தது என இவைகளைச் சொல்லுகின்றனர். இதினின்று மாயை உண்டாகி உலகம் பூராவும் சுற்றிக் கடைசியில் மாயையால் தடுத்தது. விஸ்தரித்தது. மாயையை ப்ரகிருதி என அறியவும். இதற்கு ஒரு ரூபமுமில்லை. என்றும் சொல்லியது.

எந்த சரீர மெடுத்துள்ளதோ? அதினாலேயே காப்பாற்றப்படுகிறது. அதற்குக் கார்ய காரணங்கள் மற்றது எதுவும் கிடையாது. ஸுக, துக்கங்கள், எல்லாம் ஸமமே. இதன் சக்தியை அதிகமாகச் சொல்லுகின்றனர். ஸ்வபாவமாகவே ஜ்ஞான வைபவ கார்யம் பல உருவமுள்ளது என ப்ரம்ஹாவை முதலில் ஸ்ருஷ்டித்து அம்ருத ஸேதுவை முக்யமாக அவருக்கு சொல்லியது. விவரமாக அக்னி எப்படி எரிகிறதோ? அதுபோல் பாபத்தை ஒழிக்கிறது. ஜ்ஞான பலம் எனவும் கூறுகிறது. தபஸ் ப்ரபாவம், தேவப்ரஸாதம், ப்ரம்ஹா என்று ச்வேதாச்வதர என்ற வித்வான் அத்யாச்ரமிகளுக்கு சுத்தமானதைச் சொன்னார். ரிஷிக்கூட்டங்கள் கேட்டு திருப்தி அடைந்தது. முட்டாள்களுக்கு இதை உபதேசிக்கக்கூடாது என்றும் வற்புறுத்தினர். ஆகையால் குரு, ஈசன், இந்த பக்தி செலுத்தி யார் இருக்கிறார்களோ? அவர்கள் அதை அடைகிறார்கள். அஜ்ஞானத்தில் மூழ்கினவனுக்கு ஜ்ஞானத்தைச் சொல்ல ச்ருதிவந்தது. ஸூர்யன் எவ்விதம் ப்ரகாசிக்கிறானோ? அவ்விதமே இவனும் ப்ரகாசிக்கிறான் என ப்ரம்ஹ வாதிகள் சொல்லுகிறார்கள். அதை அடைய முயலவேணுமென உபநிஷத் கூறி முடித்தது.

---

## 12. ந்ருஸிம்ஹதாபனீய உபநிஷத் விவரணம்.

இதின் முதல் பாகத்திற்கு சங்கராசார்யர் உரை எழுதி யுள்ளார். பின் பாகத்திற்கு வித்யாரண்யாள் உரை எழுதியுள்ளார். தீர்த்தத்தினின்று தான் எல்லாம் உண்டாயிற்று என ஜகத் ஸ்ருஷ்டி க்ரமத்தை

முதலில் சொல்லியது. எல்லாமறிந்த கவிகள் கடைசியில் நரசிம்ம உருவத்தைக் கண்டனர். பால் ஸமுத்ரத்தில் படுத்துக்கொண்டு நரசிம்ம உருவமடைந்து யோகி மத்தியில் காணும் பரம பதம் ஸாமம் என எவன் அறிகிறானோ? அவன் அம்ருதத்வம் அடைகிறான். இந்த மஹோபநிஷத்தை புறச்சரண வித்யையால் எவன் உபாஸிக்கிறானோ? அவன் மஹாவிஷ்ணுவே ஆகிறான். மிக உக்ர உருவத்தை த்யானம் செய்யவேணும். அவரே வீரர் எனச் சொல்லுகிறார்கள். இந்த ஸர்வ உலகங்களையும் அவர் அடர்ந்து இருக்கிறார். தேவர்கள் நரசிம்ம மந்த்ரம் சொல்லவேணும் எனக்கேட்டனர். அதற்கு அம்ருதத்தன்மை உண்டு எனவும், வர்ணித்துக் கூறினர்.

தேவர்கள் பாபத்தைத் துலைத்து விடுகிறதாகச் சொல்லினர். அதற்கு ஆறு சக்ரமுடைய மந்த்ரத்தை த்யானம் செய்யவேணும். இதற்கு ஸித்தி குருப்ரஸாதத்தினால் தான், உண்டாகும். அநுஜ்ஞை யுடன் உபதேசிப்பவனை அடைந்து, கற்றுக்கொண்டால் எப்பேர்ப்பட்ட விஷயம், கஷ்டம், தரித்ரம், எல்லாம் உடனே துலைந்துவிடும். அதைப்பற்றி விசாரிக்க வேண்டியதில்லை. நரசிம்ம மந்த்ரம் ரொம்ப வும் உயர்வு. அதை அடைவதில் ஸிதானமே பெறும் ப்ரம்ஹாவினால் எழு கோடி மந்த்ர ராஜனை அடைந்து அது பார்க்கப்பட்டது. 32 அக்ஷரமுள்ளது. ஸ்த்ரீ, சூத்ரன், இவர்களுக்கு உபதேசங்கள் செய்யக் கூடாது. உபதேசித்தால், அபகீர்த்தி, வ்யாதி, மரணம், நாகஜன்மா, நாய்ஜன்மா. அவனுக்கு இவைகள் கட்டாயம் கிடைக்கும். நரசிம்ஹம் எனது மஹா வாக்ய லக்ஷண அர்த்தமுடைய உருவம் என்று அறிய வேணும். அந்த மந்த்ர ஸித்தி ஆகுமானால், அவனுக்கு நேரே எல்லா உலகங்களும் ஸமீப மடைதல் உண்மை, என சொல்லி உபநிஷத் முடித்தது.

---

## 13. ஜாபால உபநிஷத் விவரணம்.

காசி க்ஷேத்ரத்தைப்பற்றி ஆரம்பித்து குருக்ஷேத்ரம் என்று வர்ணித்து அங்கு இருந்து ஒருவன் மரணம் அடைவானாகில்; அங்கேயே அவனுக்கு ஸாயுஜ்ய முக்தி அடையும் தன்மை கிடைக்கிறது என விஸ்தாரமாக வர்ணித்தது. ஆகவே அதையே உபாஸிக்க வேணும். வேறு ஒன்றையும் அடையக்கூடாது. என வற்புறுத்திக் கூறியது. அதுவே முதல் தன்மை என விஸ்தரித்தும் கூறியது.

யாஜ்ஞ்ய வல்க்யரை; அத்திரி கேட்டதற்கு பதில் அளித்த விஷயத்துடன் ஆரம்பமாகி, உபதேசித்தது. மூக்குக்கும், புருவத்திற்கும், மத்தியில் ஒரே உருவமாக த்யானம் செய்ய வேணும். எனவும் வற்புறுத்தப்பட்டது. இதை அடைந்து, அநேக ரிஷிகள் அநுஷ்டித்து, பக்தி அடைந்தனர் என முக்யமாகச் சொல்லிமுடித்தது. சரீரமே குரு க்ஷேத்ரம், முகமே காசி, என எவன் உபாஸிக்கிருனே? அவன் ஆத்ம பதம் அடைகிருன் என சொல்லி உபநிஷத் முடித்தது.

---

## 14. கணபதி உபநிஷத் விவரணம்.

கணபதி ஓங்கார உருவ அர்த்தமுடையவர். மண் உருவமுடையது. மிக விசேஷம், தேஹம் அழியும்வரை அப்யாஸம், பூஜை, முதலியன செய்தால் பயமின்றி ப்ரம்ஹ பாவமடைவிக்கும் தன்மை உண்டாகும். கணபதி லக்ஷணம் அறிந்து செய்தல், அநுஷ்டித்ததை, பிறர்க்கு உபதேசித்தல், உத்தமம். புராணங்களில் கணபதியைப் பற்றிய கதை ஒன்று உண்டு. கணபதி, ஸ்கந்தர், இருவருக்குமாக, ஓர் மாம்பழம் கொடுப்பதாக ஈசன் சொல்லி, யார் முதலில் பதினன்கு உலகங்களேயும் சுற்றி வருகிருர்களோ? அவர்களுக்கே அளிப்பது என வாக்களித்தார் ஸ்கந்தர். 14. உலகம் சென்று திரும்பி வருவதற்குள் கணபதி பரமேச்வரனேயே எல்லா உலக உருவம் என புத்திசாலித்தனமாக எண்ணி, அவரை ப்ரதக்ஷிணம் செய்து, மாம்பழத்தை வாங்கிக்கொண்டார். வெகு நேரம் கழித்து சுற்றி வந்ததாகச் சொல்லும். ஸ்கந்தருக்கு, உனக்கு முன்பே கணபதி சுற்றிவந்து விட்டதாகவும், நான் அவனுககே கொடுத்தாய் விட்டதாகவும், சொன்னர். அது எவ்விதம்! அவனே நான் பார்க்கவில்லேயே! என்றதும்; அஜ்ஞானத்தினல் நீ உலகம் சுற்றச் சென்றாய்! ஜ்ஞானத்தால் அவன் என்னேயே சுற்றிவிட்டான். இதுதான் வித்யாஸம். ஆகவே அவனே அடைந்தான். இதைக் கேட்டதும்; வெட்கமடைந்த குகனது கர்வம் நிவர்த்தியாயிற்று. கல்யாணம் செய்ததும் சித்தி, புத்தி இவர்களே கணபதியே அடைந்தார் என்பதும், அதுவும் ஓர் ரஹஸ்யமே. த்ரிபுர ஸம்ஹாரத்தில் தேவர்கள் அஹங்காரத்தால் ஈசன் அஸுரர்களேக் கொல்லமுடியாது நிற்கையில்; விக்னேச்வரர் பூஜை செய்யவில்லேயே! என ஞாபகமேற்பட்டதும், விக்னேச்வரருக்கு பூஜை செய்து விட்டால் எல்லாம் பூர்த்தியாய் விடும் என எண்ணி, ஈசன பூஜித்தார். உன்னே யார் பூஜை செய்யாவிட்டாலும் கார்யங்கள்

ஒழுங்காக அடையாது; என கணபதிக்கு அநுக்ரஹம் செய்ய, உனது பூஜையே விசேஷம் எனவும் வரமளித்தார்.

ஜ்ஞான கணபதி லக்ஷணம், பராபர ப்ரம்ஹஜ்ஞான அடைதலுக்கு உபாயமுள்ளது. முன்பு பாரதம் எழுதி முடிக்க ஒருவரும் வ்யாஸருக்குக் கிடைக்காது போகவே, அதற்கு எழுத கணபதியே முனைந்து வ்யாஸருக்கு உபகாரமாக தனது கொம்பை ஒடித்து அதன் நுனியால் பாரதம் எழுதினர் எனப் புராணம் கூறும். இது முதலிய காரணங்கள் மிக்க மேன்மையை கணபதிக்குக் கொடுக்கிறது தெளிவாய் இதை அறியவேணும் எனச் சொல்லி உபநிஷத் முடித்தது.

---

## 15. கர்ப்ப உபநிஷத் விவரணம்.

ஈசன் குழந்தைக்கு தைர்யமிருக்கிறதா? என்பதிற்கு அடையாளமாக ஒருமாலே நாடியால் போட்டு விடுகிறார். அதை சில குழந்தைகள் தைர்யமாக எடுத்து விடும். சில குழந்தைகள் எடுக்கமுடியாமல் தவிக்கும். காரணம் யாதெனில்; குழந்தை கைகூப்பிய வண்ணம் வெளி வரும் வரை இருக்கும். அந்த கை எடுபட முடியாமல் இங்குமங்கும் ஆட்டியே தவித்துவிடும், முடியாது. அதினுல் தான் கொடிசுற்றி, பிறந்த குழந்தை அதற்குப் பரிகாரம் செய்யவேணும் என சாஸ்த்ரங்கள் கூறும். அதைச் செய்தால் தான் தோஷம் நீங்கும். அதைப் பற்றி ஸ்ம்ருதிகளில் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளதை பார்த்தவர்கள் தான் அறியமுடியும். இந்த விவஸ்தையை நாம் அறியவேண்டும். மற்றொன்று;

குழந்தைக்கு தலையில் இரண்டு வயது பூர்த்தியாகும் வரை ஓர் நாடி அடித்துக்கொண்டு, ஒரு இடம் பள்ளமாகக் காணும். அதுதான் ப்ரம்ஹம் ப்ரவேசித்த த்வாரம். அதன் வழியே ஈசன் போன வழி. அந்த இடம் சிரோபாகத்தில் மண்டையை உடைத்துக் கொண்ட காரணத்திற்காக 8-வது மாதத்தில் ஸிமந்தம் என்ற ஓர் கர்மா சுபமாக செய்வது வழக்கம். அதன் அர்த்தம் என்னவெனில்; ஸீமந்தம், வெகுடு பிளத்தல் என பொருள். அத்தினத்தில் வெகுடு பிளத்தல் முள்ளம் பன்றி முள்ளினுல் வெகுடு பிளக்குதல் இதன் பெருமையைத் தான் சாஸ்த்ரங்கள் அதிகமாக விவரிக்கின்றன. இது 40 ஸம்ஸ்காரங்களில் ஒரு முக்ய கர்மா.

அதுதான் ப்ரம்ஹம் ப்ரவேசித்த த்வாரத்தை அடைக்கச் செய்தல் கர்மா. அதை உயர்ந்தது என வர்ணிக்கின்றனர். கர்ப்பம் என்றால் செல்வது, தாங்குவது என்பது பொருளடையும். ரேதஸ் போய் தாங்குகிறது என அர்த்தம். வெகுடு கர்மாவுடன் ஸ்த்ரீகளுக்கு சர்மா முடிதல் என அர்த்தம். அதை பும்ஸவனம் என்றும் சொல்வது. புத்ரனைப்ரஸவித்தல் என்ற அர்த்தம் அப்பதத்திற்கு கிடைக்கும். கர்ப்பத்தினின்று விலக்கு, பந்தத்தினின்று விலக்கு, இவை அடைந்து ப்ரம்ஹஜ்ஞானம் அடைதல் என அர்த்தமும் தரும். புத்ரன் என்பவன் பிறந்தால், உடனே புத் என்ற நரகத்தில் கிடக்கின்ற அநேக பித்ருக் களை கரையேறச் செய்யும் சக்தி உடையவன் என அர்த்தம். கர்ப்பத்தி லிருக்கும் குழந்தைக்கு வெகுடு பிளக்குதல் என்றே அர்த்தம் விளங்கும். அதைப்பற்றி கர்மாக்களை ஸரியாகச் செய்தாலே குழந்தைக்கு வெகுடு சரியாக இருக்கும் என சாஸ்த்ரம் கூறும்.

40 ஸம்ஸ்காரங்களில் இதுவும் ஒரு கர்மா. இந்த உபநிஷத் திலும், சங்கீத ரத்னகரத்திலும் இதுபற்றி நன்கு விவரிக்கப்பட்டிருக் கின்றன. நாதப்ரகரணத்தில் இதையே வற்புறுத்திச் சொல்லிஉள்ளது. வீட்டு விலக்கு நாட்களில் நடந்துகொள்ளவேண்டிய நியமங்கள், நிலைமைகள், செவ்வனே விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. இந்த விதி விலக்குகளை மாற்றினால் கஷ்டப்படும் நிலைமை ஏற்படும்.

கர்ப்பத்தினுள் இக்கஷ்டங்களை அடைந்து, தொந்தரவு நேருகை யில்; இனி கர்ப்பவாஸமே வேண்டாம் எனவற்புறுத்திச் சொல்லியிருக் கிறது. முன் ஜன்மாவில் ஏற்பட்ட கஷ்ட ஜ்ஞானங்களை அநுபவித்து திண்டாடுதல் கஷ்டம். ருதுகாலங்களில் அதாவது வருஷத்தில் சுமார் 18 நாட்கள் தான் ஸ்த்ரீ போகம் என வற்புறுத்தி உள்ளது. அதை அறிந்து எவன் நல்ல நாளில் புணர்கிறானோ? அவனே, ஸௌக் யம் அடைகிறான் எனவும், நல்ல குழந்தைகள் பெறுகிறான் எனவும்.

கர்ப்பாதான மந்த்ரம் சொல்லுகிறது. விஷ்ணு, ஸத்ப்ரஜையை கற்பிக்கட்டும். த்வஷ்டா, நல்ல உருவத்தை கொடுக்கட்டும் என ப்ரார்த்திப்பது. ப்ரஜாபதி, நல்ல ப்ரஜையை உண்டாக்கட்டும். தாதா கர்ப்பத்தை தாங்கட்டும். ஸிநீவாலீ, கர்ப்பத்தை தாங்கட்டும். ஸரஸ்வதி, கர்ப்பத்தை கொடுக்கட்டும். அச்வனீ தேவதைகள், கர்ப்பத்தை தாங்கட்டும். தேவர்கள், குறைவில்லா ஜன்மஸாபல்ய

மடைவிக்கச்செய்யட்டும். இதையே கேட்கிறது எனவும், சொல்லிற்று. இவ்விதம் கர்ப்பத்தில் இருந்து வாமதேவர் சொன்னார்.

முதல் ஜன்மா கர்ப்பம் அடைதல், தாங்குதல், இரண்டாவது ஜன்மா, பிறவியேற்படுகிறது. மூன்றாவது ஜன்மா எனவும், இனிப் பிறப்பு இருக்கக்கூடாதெனவும், அவரே கர்ப்பத்திலிருந்து ஒரு ஸமயம் பார்த்து சொன்னார். ஐதரேய உபநிஷத்தின் நடுப்பாகம் வாசிக்கை யில் கர்ப்ப ஸ்த்ரீகள் இருக்கக்கூடாது. இருந்தால் கர்ப்பம் நழுவி விடும். ஆகவே இப்பொழுதும் ப்ரஸவிக்கக் கஷ்டப்படுவார்களே யானால் இம்மந்த்ரத்தை சொன்னால் உடனே சீக்ரம் ப்ரஸவிக்க முடியும் என அம்மந்த்ரம் கூறுகிறது.

கர்ப்பாதான காலத்தில், அதாவது ருது ஸ்நான தினத்திலிருந்து 16 நாள் கர்ப்பம் ஏற்பட அதிகாரம். அதில்தான் புணரவேண்டும். இல்லாவிடில் இவனது இந்த்ரியம் வீணாகுவதோடும் அன்றி பாபமும், நேரிடும். நற்காலத்தில் சேர்வது நல்ல ப்ரஜை உண்டாகிறது. இல்லா விடில் அஸத்தான குழந்தைகள், உண்டாகும். இதன் விஷயத்தை உலகிலேயே பார்த்துக்கொள்ளலாம். அதுபற்றி விசாரிக்கத்தேவை இல்லை. அப்படி ஸத்காலத்தில் புணர்வதால் நல்ல வீர்யமுள்ள குழந்தைகள் பிறக்கின்றன. என்ற மந்த்ரம் சொல்லியபடி, செய்வ தால் கட்டாயம் நல்ல ஸௌக்யம் உண்டாகும். அதன் சேர்க்கையே ஸுகமளிக்கும் என்றும் உரைப்பது. பித்ருக்கள் மேல் உலகத்தி னின்று நல்ல பேரன்கள் உண்டாகவேணும் என்று ஸதாப்ரார்த்திப்ப வர்கள். அப்படி அவர்கள் செய்ய நாம் அவர்களுக்கு நிரம்ப உபகாரம் செய்யவேணும். உலகில் யாரேனும் நமக்கு ஸௌக்யம் செய்ய வேண்டி மற்றவர்களுக்கு உபகாரம் செய்தால் தான், அவர்கள் திரும்பவும் கவனிப்பார்கள், என்பது போல், அதையே வேதமும் வற்புருத்துகிறது. அதன்படியே நடந்து கொள்ளவேணுமென்பது விதி. அதினால் பித்ருக்கள் திருப்தி அடைகிறதோடு அல்லாமல், அவர்கள் மேல் உலகமும் அடைய ஹேது. ச்ருதி தாயார் உருவமாக, நமக்கு புத்தி சொல்லி, ப்ரம்ஹபதமடைய வயமளிக்கிருள். அதன் ஸ்வரூபத்தை, நமக்கு போதிக்கிருள்.

இதைப்பற்றி விஷ்ணு புராணத்தில் இரண்டாம் பாகம் 8-ம் அத்தியாயத்தில் காயத்ரீ உருவமுள்ள ஒரு குதிரையின் பெயரை வர்ணிக்கிறது. திலீப மஹாராஜன் குழந்தைக்காக ப்ரார்த்திக்கையில்

நடந்த வ்ருத்தாந்தம் அதில் தெளிவு படுத்தி உள்ளது. கர்ப்பம் கஷ்டமடையப்படுகிறதை நிவர்த்திக்க கட்டாயம் ப்ரார்த்திக்க வேணும், புத்ரோத்பத்திக்கு "நேஜமேஷ பராவத புத்ரன்" மறுபடி திரும்பி வந்தான் என மந்த்ரம் நமக்கு உபதேசிக்கிறது. தேவதைகளை ப்ரார்த்தித்து அதன் கர்ப்ப சிசுவை காப்பது தான் அது என்பதை வற்புருத்துகிறது.

ருதுஸ்நான தினம் முதல் ஒத்தைப் படை நாளில் புணர்வதால் பெண் குழந்தை பிறக்கும். இரட்டைப்படை நாளில் புணர்வதால் புருஷப்ரஜை உண்டாகும் என கௌதம தர்ம ஸூத்ரத்தில் சொல்லப் பட்டுள்ளது. இது கர்ப்பத்தின் நழுவுதல், இது கர்ப்பத்தில் இருக்கை, அது உண்டானது என்பது. பேசாத பிண்டம் 8, மாதம் வரை இருக்கும். ப்ரவேசிக்கும் தன்மை ப்ரம்ஹ மேற்பட்டதும், அதன் ப்ரவ்ருத்தி, அதைத்தான் இது என சொல்வது வழக்கம். இதையே வேதமும் கூறும்.

கர்ப்ப லக்ஷணம் கவனிக்கவும். ஒரு நாள் கர்ப்பமடையும் காலம். அதாவது ஸ்த்ரீ புருஷர்கள் சேர்ந்தவுடன் சுக்ல சோணிதங்கள் சேர்ந்து ஒரு நாளும் தாங்கும் காலம். அப்பொழுது கர்ப்பப்பை ஆடாது, அசையாது, நிற்கும். அதிலிருந்து வ்ருத்தி அடையும். ஒரு நாளில் பலவித விபரீத பாவனை அடையும். எழாம் நாள் புத்புதம் என்ற பெயரடையும். 15 நாளில் கர்ப்பம் பிண்டம் எனப் பெயர் அடையும்.

ஒரு மாதத்தில் கடினத்தன்மை அடையும். இரண்டாம் மாதத் தில் சிரஸ்பாகம் வ்ருத்தி அடையும். மூன்றும் மாதத்தில் கர்ப்ப மாகிறது. நான்காம் மாதத்தில் வயிறு பின் பாகம், விலாப்புறம், அவை உண்டாகும். ஐந்தாம் மாதத்தில் பின்பாகம் பூராவும் உண்டா கும். ஆறும் மாதத்தில் மூக்கு, கண், காது இவை தெரிகிறதாக உண்டாகும். எழாம் மாதத்தில் ஜீவன் இருக்கிறதாக உண்டாகும். எட்டாம் மாதத்தில் ஸர்வ அவயவங்களும் பூர்த்தியாகி, ப்ரம்ஹம் ப்ரவேசிக்கும். பிதா வீர்யம் அதிகமானல், புருஷப்ரஜை. தாயார் வீர்யம் அதிகமானல், ஸ்த்ரீப்ரஜை. இரண்டும் ஸமமாக இருந்தால் அலிப்ரஜை; ரேதஸ் விழுகையில் கெட்ட எண்ணம், துக்கம், எற்படுமானல், நொண்டி, பொட்டை, குள்ளம் உள்ள உருவங் கள் உண்டாகும். ரேதஸ் விழுகையில் இருவருக்கும் அபான வாயு எற்

படுமானல், அப்பொழுது இரு கர்ப்பமாக ஆகி இரட்டைக் குழந்தை யாகப் பிறக்கும். எட்டாம் மாதத்தில் ஜீவன் ப்ராணபஞ்சகத்துடன் பழைய ஜன்மாவின் வ்ருத்தாந்த மடையும். ப்ராணன், க்ரியாசக்தி, ஜீவன் ஜ்ஞான சக்தி, பிண்டம் இச்சா சக்தி, ஒன்பதாம், மாதத்தில் ஸர்வ ஸம்பூர்ணமாகும். பத்தாவது மாதத்தில் வெளிவரும் ஸமயம் தலைகீழாக வருகிறது. விழும் காலத்தில் வைஷ்ணவ வாயுவால் தொடப்பட்டு விழுகிறது.

ஹ்ருதயம் 8 பலம், நாக்கு 12 பலம், பித்தம் 1 படி, கபம் 1 மரக்கால், குடயம் $1\frac{3}{4}$ படி, மேதஸ் 2 படி, மலமூத்ரம் 4 படிகள், ஸ்நானம் பானம் 4 படிகள், பஞ்சாத்மகலக்ஷணம் $17\frac{3}{4}$ அளவு உள்ள பாகம். அது யமனது கயிறுக்குப் போகும் காலம்வரை, பெரிய அலைகள்போல் கூர்மையாக நிற்கும். அதைத்தலைத்து கூடியவரை தேஹத்தில் எதுவரை இருப்போ அதுவே நிச்சயத்தன்மை என கர்ப்ப உபநிஷத் சொல்லி முடித்தது.

---

## 16. அதர்வசிர உபநிஷத் விவரணம்.

தேவதைகள் கூட்டமாக வந்து பரமேச்வரனிடம் கேட்டது. பசு, பாசம் இவை நிவர்த்திக்க என்ன உபாயம் செய்யலாம் என்றதும்; ருத்ரன் என்னல் தன்னைக்காட்டிலும் ருஜுவான விஷயங்களைக் கொடுக்கிறவர் எனத் தெரிவிக்கிறது. ருத்ரன் சைவசித்தாந்த ஜ்ஞானங்களை நன்கு தெளிவு படுத்தும் விஷயத்தை முக்கியமாகத் தெரிவிக்கிறவர். அதை விரிவுபடுத்தும் விஷயம் முக்கியமாக சொல்லியது. தேவர்கள் கூடிக்கேட்டது என்பதினலேயே நம் போன்றவர்கள் கட்டாயம் கேட்க வேணுமென்பதையும் வற்புருத்துகிறது.

முன்பு ருத்ரனை அறியாமல் 34 மந்திரங்களால் ஸ்தோத்தரித்தனர். ருத்ரன் ஒருவனே இருக்கிறார். மற்றொருவர் இல்லை என அது சொல்லியது. உலகம் பூராவும் அவரது அவயவங்கள், 32-ம் அடங்கி வேலைசெய்கிறது. அவர் ஒருவரே இருந்து, ஆக்கவும் அழிக்கவும், சக்தி அடைந்து இருக்கிறார். பாசுபத வ்ரதம் ப்ரதானமாக வைத்து அநுஷ்டிக்கும் முறை எற்படுத்தினர். ஓம் சத்யமடையச்செய்யும் விஷயஜ்ஞானஸம்பத் சொல்லுகிறது. தேவர்கள் ஸ்வர்க்கமடைந்

தனர். ருத்ரனைக் கேட்டனர். நீங்கள் யாரெனக் கேட்டதிற்குப் பதில் நான் ஒருவனே முதலில் இருக்கிறேன். பிறகு அநேகரை உற்பத்தி செய்கிறேன். என்னைக்காட்டிலும் வேறு ஒருவரும் உலகில் இல்லை என பாசுபத வ்ரதலக்ஷணம் சொல்லியது. தனது அஜ்ஞானத்தை நிவர்த்திக்க தபஸ்செய்துதான் அடையவேணும் எனவும் வற்புறுத்தியது. அக்னி, வாயு, ஜலம் எல்லாம் விபூதி உருவம் என உபாஸிக்க வேணுமென்றும் வற்புறுத்துகிறது. உலகம், மனஸ், கண், அக்னி, இவைகளை விட்டு, அங்க உருவமடைந்து, பாசுபத வ்ரதமடைய வழிதேடுதல். சைவபுராணத்தில் ருத்ரஸம்ஹிதையில் பசுத்வம், ஜடத்வம், இவை நிவர்த்திக்க தேவர்கள் ப்ரார்த்தித்து நிற்கையில், பரமேச்வரன் சொல்லியது. பாசுபதம் எவன் அநுஷ்டிக்கிறானோ? அவன் மோக்ஷமடைகிறான். இது உங்களுக்கு உண்மையாகவே சொல்லப்பட்டது. ப்ரதிஜ்ஞை அடையுங்கள்! சீக்கிரம் உண்டாகப் போகிறது. அதில் ஸந்தேகமில்லை. தபஸ், சுச்ரூஷை முதலியவை உடனே செய்யுங்கள். கட்டாயம் சீக்கிரம் அடைவீர்கள் என்றதும்; ஸரி என ஆரம்பித்து அடைந்தனர். ஆகையால் பசுத்வமுள்ளவர்கள், உடனே நிவர்த்திக்க, பாசுபத வ்ரதமநுஷ்டித்தல் கட்டாயம் வேண்டும் என வற்புறுத்திச் சொல்லி முடித்தது.

---

## 17. கைவல்ய உபநிஷத் விவரணம்.

சந்த்ர மார்க்கமில்லாமல் ஸூர்ய மார்க்கம் போவதை வற்புறுத்துகிறது. மறுபடி திரும்புதல் இல்லாததையே குறிக்கும் விஷயம். ஆச்வலாயனர் ப்ரம்ஹாவைக் கேட்டதிற்கு பதில்சொல்லியது விஷயம். சீக்ரமாக ப்ரம்ஹலோக மடையத் தன்மை சொல்லியது, ச்ரத்தை; பக்தி, ஜ்ஞானம், யோகம், இவைகளினால்தான் அது கிடைக்கும். கர்மாவினால் அது கிடைக்காது. பரமேச்வரனை அடைந்தால்தான் அது கிடைக்கும் என வற்புறுத்துகிறது.

வ்ரதமுடையவர்கள், காமிகள். வனவ்ருத்தியுடையவர்கள், ஆச்ரமிகள், தான் அடைய முடியுமென்பது. அதைத்தாண்டி துரீய ஆச்ரமத்தில் இருப்பவர்கள், அத்யாச்ரமிகள், அவர்கள் ஹ்ருதய புண்டரீக மத்தியில் சுத்தமாய் இருக்கும் ப்ரம்ஹமறிபவர்கள், தத்வமஸி வாக்ய லக்ஷணமறிபவர்கள், கைவல்யபதமடைகிறவர்கள், ஜ்ஞானத்

திஞலேயேதான் கைவல்யம் கிட்டும் என்று எவன் சதருத்ரியம் முதலானதை அத்தியயனம் செய்கிருஞே? அவன் ருத்ரனேயே அடைகிருன். ஆகவே ஸூர்யத்வார மடைபவர்களுக்குத்தான் அடைய வித்தி எனக் கைவல்ய உபநிஷத் சொல்லி முடித்தது.

---

## 18. அக்ஷமாலிகா உபநிஷத் விவரணம்.

ப்ரஜாபதி ருத்ராக்ஷமாலேயைப்பற்றி பலதடவை பலவிதமாக குஹனேக்கேட்டது. பதில்; மாலேகள் பரமேச்வரனதுகண் உருவமாக உடையது என பொருள். 51 அக்ஷரங்களேயும் கண் உருவமாக த்யானம் செய்ய, முறைப்படி ஒவ்வொரு அக்ஷாத்திற்கும் இன்னது இன்னது பலன் எனக்குறிக்கும். குஹனிடம் ப்ரஜாபதி, ஒரு ஸமயம் 5 தலேகளுடன் வந்தபொழுது தகப்பஞரைக்காட்டிலும் நீ கீழுள்ளவன் தானே. உனக்கு மட்டும் என் ஐந்து தலே! என ஒரு தலேயைக் கிள்ளியது. அன்றைய தினமே ப்ரணவார்த்தத்தை பரமேச்வரனுக்கு குஹன் உபதேசித்தது. அதிலிருந்து உபதேச காரண மஹிமையை மேலாக ஸ்கந்தர் சொல்லக் காரணமாயிற்று. பவழம் முதல் ருத்ராக்ஷம்வரை, பத்து லக்ஷணங்கள் உள்ளது என விஸ்தரித்துக் கூறியது. ப்ரம்ஹம், வைஷ்ணவம், ஸரஸ்வதி, காயத்ரி, வித்யை, ப்ரகிருதி, வெள்ளே, சிகப்பு. கருப்பு, ஸத்வரஜஸ், தமோ, குணங்கள் இவை பத்தும் அதற்கு முக்கிய பூதமுள்ளது. 51 அக்ஷரங்களும் இதஞல் விசேஷ பலன்களே விஸ்தரித்தது.

பித்ருக்கள் மங்களங்களுக்கு ஸந்தோஷத்தை அநுமோதனம் செய்யட்டும்! அக்ஷமாலேகளே பஞ்சாமிர்த ஸ்நானம், பூஜாதிகள், செய்து தரிசிக்கவேணும். தனது உபாஸகஸாக ஸம்பத்துகளேச் செய்யட்டும்! இது எனக்கு ப்ரார்த்தனே.

அக்ஷமாலா உபாஸனே வஸிஷ்டரால் ஆராதிக்கப்பட்டது விச்வாமித்ரரால் உபாஸிக்கப்படுகையில், மஹத்வ விஷயம் ஏற்பட்டது. ப்ரம்ஹத்தைக் காட்டிலும் வேறு ஒன்றும் கிடையாது. இது தத்வ ஸத்வ, சித்திக்கே அர்த்த அநுஸந்தானம், மந்த்ராநுஷ்டானம், என கட்டாயம் செய்யவேணும் இதை விரிவாகக்கூறி ருத்ராக்ஷப் பெருமையை விளக்கியது. அணிபவர்களுக்கு பரமேச்வர ப்ரஸாதம் கிட்டும். ஆகவே ருத்ராக்ஷமணிபவர்கள் மிகுந்த ச்ரேயஸ் அடைகிருர்

கள். அநுஷ்டித்தால் மிகுந்த நலனடைந்து மேலுலகமடைய ஹேது வாகும் என விவரமாக உபநிஷத் கூறி முடித்தது.

---

## 19. ஜாபாலி உபநிஷத் விவரணம்.

விபூதி தாரணத்தைப்பற்றி விரிவாகச் சொல்லுகிற உபநிஷத். அதன் விவரணத்தில் ஜாபாலியை பிப்பலாதர் பிள்ளை கேள்விகேட்டது என்ற விஷயம் வாக்கிற்கும், மனதிற்கும் எட்டாதது. அதன் விஷயத்தை இந்த நூலில் விஸ்தரித்துக் கூறுகிறது. ஜீவன், சிவன், சிவன் ஜீவன், அந்த ஜீவன் கேவலம் சிவன் எனவும் கூறுகிறது. என்னைக் காட்டிலும் உலகில் ஒருவரும் கிடையாது என அர்ஜுனனைப் பார்த்து கிருஷ்ணன் சொல்லும் விஷயம். பிறகு ஸனத்குமாரர் கேட்டது. ப்ரமாணமே; ஜீவன் யார், பசு யார், ஈசன் யார், எது மோக்ஷ உபாயம், என்பதை எல்லாம் முக்யமாக அறியவேண்டியது. அதற்குப் பதில் சுப்ரமண்யரால் அறியப்பட்டது. அவர் தான் உலககுரு. அவருக்கு யார் சொல்லியது எனக் கேள்வி? பரமேச்வரனல் சொல்லப் பட்டது என கேள்விக்கு பதில் அவர் எப்படி அறிந்தார்? எனக் கேள்வி உபாஸனையால் எனப் பதில். ரஹஸ்யம் சொல்லவேணும் எனக் கேட்டதிற்குப் பதில். தத்வம் என்னவெனில், பசுபதி, அஹங்கார ரூபம் ஸம்ஸாரி ஜீவன். அது தான் பசு ஸர்வஜ்ஞர். ஐந்து கார்ய முடையவர். ஸர்வ ஈச்வரன் ஈசன் பசுபதி. எவை பசுக்கள் எனக் கேள்வி. ஜீவன் பசு என பதில் அதற்கு. அதிபதி பசுபதி எனவும், பதில். ஜீவன் எவ்விதம் பசுக்கள் எப்படி நாயகர் ஈசன் எனக்கேள்வி. பதில் புல் தின்னும் விவேகமின்றி பிறரால் ஏவப்பட்டு, வேலை முதலிய உழவுக்கு லாயக்குள்ளதுகளாகி ஸகல துக்கத்தையும், ஸஹிக்கும் தன்மை. கேள்வி அதினின்று ஜ்ஞானம் எப்படிக்கிடைக்கும்? பதில் விபூதி காரணத்தினல் தான் க்ஷேமம் அஜ்ஞான நிவ்ருத்தி.

அது எங்கு? எப்படி? எவ்விடத்தில்? பூசிக்கொள்ளுதல் வேண்டும்? விபூதி அநுஷ்டான மந்த்ரங்களை உபாஸித்து தரித்தால் மோக்ஷம் கிட்டும். அவனுக்கு மறுபடி பிறப்பில்லை. மூன்று கோடு, முதல் கோடு, கார்ஹபத்ய அக்னி. உள் கோடு தக்ஷிணக்னி. மூன்றும் கோடு ஆஹவனீய அக்னி என அதற்கு அர்த்தம் விளக்கும் இதைத் தரித்தவன் ஸகல மந்த்ர, ருத்ர ஜபம், செய்தவனகிருன். மூன்றும்

ஸத்யம் உருவமாக ஆகிறது. ஆகவே விபூதி தாரணம் தான் உலகில் முக்யமாக ஜ்ஞான மோக்ஷங்களுக்கு ஸாதனம் என வற்புருத்தி கூறி உபநிஷத் முடித்தது.

---

## 20. திரிபுரோபநிஷத் விவரணம்.

இவ்வுபநிஷத் ஸ்ரீ வித்யை மந்த்ரத்தை ரொம்பவும் உயர்த்திச் சொல்லும். ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண, என்ற மூன்று சரீரம் த்ரிபுரத்திற்கு உள்ளது. தேவயானம், பித்ருயானம் என்பதை இதில் விவரிக்கிறது. கர்ம உபாஸனே ஜ்ஞான காண்ட பேதங்களுடையது. ஜீவப்ரம்ஹரூப ஐக்ய ஜ்ஞானமுடையது. அகாரம் முதல் க்ஷகாரம் வரை 51 அக்ஷரங்களே முடிவு பீடமாக உடையது. அதற்கு ஒன்பது த்வாரம். யமாதிகள் ஒன்பதும், ஒன்பது சக்திகள், ஒன்பது பூமிகள். ஜ்ஞானேந்த்ரியம், ஐந்து அந்தக்ரணம், ப்ராண பஞ்சகம். கர்மேந்த்ரியம், ஐந்து ஆக பேதங்கள் பல உள்ளது. அஜடா சுக்ரத்வஜ்ஞானம் அதாவது மோக்ஷமார்க்க மடைய மார்க்கம்) முட்டாள் தன்மை தள்ளுதல், இதில் பல லக்ஷணம் விவரித்தது. உசதீ: என்பது தனது ஆத்மஜ்ஞானத்தில் உண்டானது. காமனே என இதைத் தெரிவிக்கிறது.

ஜாக்ரத், ஸ்வப்ன, ஸுஷுப்தி, லக்ஷண முடையது. அவர் வீடுகள் பரிவார ஆவரண தேவதைகள் 15. 50 அக்ஷரங்கள் மந்த்ர உருவங்கள், சித்சக்தி அதில் ப்ரகாசிக்கிறது. மோக்ஷமடைய இச்சை உடையவர்கள் சிவகாமஸுந்தரியை த்யானம் செய்ய வேணும். இதையே முக்ய பூதமாக விவரித்து அவளுடைய ஸ்வரூப ஸாக்ஷாத்காரத்தை நன்கு வர்ணித்துக் கூறியுள்ள முடிவுள்ளது. அதையே அநுஷ்டித்து மிக்க மேன்மைப் பதம் அடைய வேணும் என வற்புருத்தி உள்ளது. ஆகவே சக்தியின் பெருமையே மிகப் பெரியது என உபநிஷத் விஸ்தாரமாகச் சொல்லி முடித்தது.

---

## 21. ஏகாக்ஷர உபநிஷத் விவரணம்.

ஓம் என்ற நிருபண லக்ஷணம் விவரிக்கப்பட்டுள்ளது. ஓங்கார ஸ்வரூப வர்ணனேயை மிக அழகாக இதில் வர்ணிக்கிறது. ஓங்கார ஸ்வரூப வர்ணனேயே மிகவும் சொல்லுகிறது. அ. உ. ம. பூரணம்

என்பதை மிக விசேஷமாக விளக்குகிறது. ஓம் என்பது ஏகாக்ஷர ப்ரம்ஹஸ்வரூப லக்ஷணம். ஓங்காரம் புருஷோத்தமம் எனவும் வர்ணிக்கிறது. ஸத்வ, ரஜஸ், தமோகுண உருவமுடைய ஓங்கார உபாஸனேயே முக்யமாகச் சொல்லுகிறது. ப்ரம்ஹாவைப் பார்த்து ஸ்கந்தர் ப்ரணவார்த்த விசாரணை செய்தது. பரமேச்வனுக்கு ஓங்கார அர்த்தத்தை சொல்லியது. நாதலய உருவமுடையது ஓங்காரம். அகாரம் விஷ்ணு. உகாரம் பரமேச்வரன். மகாரம் ப்ரம்ஹம். பூர்ணம், ப்ரமானந்த ஸுகம் எனவும் விளக்குகிறது.

இதன் வ்யதிரிக்தமான விதானம் ஸமம். இதைக் காட்டிலும் ஒன்றும் உயர்வு கிடையாது. ஓம் என ஸாமகானம் செய்பவர்கள் நன்கு கூறுகின்றனர். ஸர்வத்தையும் அடையக்கூடியது, கொடுக்கக்கூடியது என்றும் விவரிக்கிறார்கள். அதையே உபாஸிக்கவேணும். அதையே அடையவேணும் என்பதை வற்புருத்திச்சொல்லி உபநிஷத் முடித்தது.

---

## 22. கோபாலதாபினீ உபநிஷத் விவரணம்.

இதில் பூர்வதாபினீ, உத்தரதாபினீ, என இருபாகங்கள். முநிகள் ப்ரம்ஹாவை கேள்வி கேட்டனர். எவர் உயர்ந்தவர்? எவரிடம் யமன் பயமடைகிறான்? எவரை அறிந்தால் எல்லாம் அறிந்ததாகும்? எதினல் உண்டாகிறது. அழிக்கிறது, இருக்கிறது என கேட்டதிற்கு.

பதில் ப்ரம்ஹா சொல்லியதில், க்ருஷ்ணன் பரமதைவதம். க்ருஷ்ணன், கோவிந்தன், கோபீஜனவல்லபன். ஸ்வாஹா எனசொல்லுதலால் கோபீஜனவல்லபன் எனச்சொல்லவேணும். ப்ராம்ஹணர்கள், எந்த ரூபம்? எந்த பஜனம்? என்ற கேள்விக்குப்பதில் ஸ்வர்ணமயமுள்ள கல்பக வ்ருக்ஷ அடியில் கோப வேஷத்துடன் கூடியவர். ஸ்ருஷ்டியாதிகளை செய்பவர் என அவரது பெருமையை விசேஷமாகச் சொல்லியது என பூர்வபாகம் விஷயம் முடித்து உத்தரபாகம் ஆரம்பித்தது.

அதில் ஒரு நாள் கோபிகள் ஏகாந்தமாக மணலில் விளையாடுகையில் கோபாலனை கேள்வி கேட்டனர். யாருக்குப் பிச்சை அளிப்பது? என்றதும், பதில் க்ருஷ்ணன் துர்வாஸருக்குத்தான் அளிக்கவேணும் என்றார். யமுனை நதியை எப்படித் தாண்டிப் போகமுடியும்? எனக்

கேட்டதற்குப் பதில் க்ருஷ்ணன் என்றும், ப்ரம்ஹசாரி என்றும், சொல்லினால் உடனே யமுனை வழியைக் கொடுப்பதில் தடை இருக்காது. பள்ளம், பள்ளமில்லை. சுத்தம், அசுத்தம், வ்ரதமில்லாதது, வ்ரதம் என இவ்விதம் என்னை நினைத்தால், காமனை அற்றும், ச்ரோத்ரியன் ஆகலாம். ஆழமும் ஆழமில்லை. நதி மடுவாகிறது என்றதும் உடனே கோபிகள் பார்த்து துர்வாஸரை நினைத்தனர். அந்த வாக்யத்தால் அவர்கள் யமுனையைத் தாண்டி, புண்ய ஆச்ரமத்திற்கு முநியைத் காணச்சென்று, நமஸ்கரித்து, அவர் ஸுகமநுபவித்து, ஸ்நானம், ஆசீர்வாதம், அநுஜ்ஞை, இவை எல்லாம் அவர் கொடுத்தார்.

மறுபடி துர்வாஸரைப் பார்த்து எப்படி க்ருஷ்ணனை அடைவோம் என்றதும், க்ருஷ்ணனை நினைத்து மார்க்கத்தைக்கொடு? என யமுனையை கேளுங்கள். உடனேவழி கொடுக்கும் என்றார். உடனே துர்வாஸரிடம் விடைபெற்றுச் சென்றனர். அவர்களுள் காந்தர்வீ என்றவள் அவரைக்கேட்டாள். க்ருஷ்ணனைப்போல் துர்வாஸரும் ப்ரம்ஹசாரி ஆகமுடியுமா? என்றதும், மற்றவர்கள் பேசாமல் இருந்தனர். அவர்களைப்பார்த்து மறுபடி துர்வாஸர் பதில் உரைத்தார். ப்ரம்ஹா தபஸ் செய்து வருகையில், நாராயணர் அவருக்கு வரமளித்தார். இஷ்டமளிக்கப்பட்டதும், ஸம்ஸார உத்தரணம் எப்படி? என்றதும் நாராயணர் ஸ்ரீமேரு சிகரத்தில் எழு உலகங்கள் உள்ளது. அதன் மத்தியில் ப்ரம்ஹத்தின் கோபால பட்டணம் உள்ளது. சக்ரத்துடன் மதுராஉள்ளது என இதன் மூலம் ஸர்வ விஷயத்தையும் நாராயணன் ப்ரம்ஹத்திற்குச் சொல்லிய பின்பு அவர் மறைந்தார்.

அவர் நாரதருக்கு சொல்லியது என்றதும், அதைக்கேட்ட காந்தர்வீ நதியைத் தாண்ட எல்லோரையும் அழைத்துச் சொன்னாள், இதனால் என்ன தெரிகிறதென்றால், க்ருஷ்ணன் 60 ஆயிரம் ஸ்த்ரீகளையும் தப்புக் கார்யத்திற்கு இழுத்து அநுபவிக்கவில்லை என்றும், ப்ரம்ஹசர்யம் காப்பாற்றினார் என்றும் தெரிகிறது. இதை அறிந்து ஒவ்வொருவரும் க்ருஷ்ணனை ஸேவித்தால் உடனே முக்தி உண்டாகும். இது தான் உபாஸனை எனச்சொல்லி உபநிஷத் விஸ்தாரமாக முடித்தது.

---

## 23. கலிஸந்தரண உபநிஷத் விவரணம்.

உலகம் சுற்றிய நாரதர் கலியைத்தாண்ட என்ன செய்யலாம் என எண்ணினார். ஒரு ஸமயம் ப்ரம்ஹாவைக் கேள்விகேட்டார்.

அதற்கு பதில் அளிக்கையில், நாராயண ஸ்மரணத்தினலேயே, அது உண்டாகிறது எனச் சொன்னர். ஹரேராம, ஹரேக்ருஷ்ண, என 16 நாமாக்களை சொல்லுகிறவன் இதற்கு மேலாக வேதங்களிலும் ஒன்றும் கிடையாது என நினைக்கவேண்டும். சுத்தமான ஆகாசத்தில் மேகம் இல்லாமல் ஸூர்ய கிரண மண்டலமாக எங்கு காண்கிறதோ? அங்கேயே 16 கலையுடைய பரப்ரம்ஹம் இருக்கிறது. அதன் விதி கேட்க, அதற்கு விரிவாகபதில் சொல்லப்பட்டது. சுத்தமாகவோ, அசுத்தமாகவோ, படிக்கலாம். அவன் ஸாலோக்யம் முதலான பத மடைகிருன். ஸதா ஆரோக்ய ஆராமமாகிருன், என்று நான் அறி கிறேன்.

தத்வார்த்தங்களை எவர்கள் சொல்லுகிருர்களோ? அவர்கள் கட்டா யம் ஸம்ஸாரிகள் இல்லை. ராமனே ஆகிருர்கள். அதில் ஸந்தேஹ மில்லை. பகவான் நாமாவை நினைத்த மாத்திரத்தினலேயே, புண்யம் என்ற கத்தி பாபத்தை வெட்டி, தனக்கும், அதற்கும், வேறுபாடு இல்லாமல் மேகமில்லா ஆகாசத்தில் சந்த்ரன் போல் ப்ரகாசமடையச் செய்கிறது. பரப்ரம்ஹமே ஆகிருன். அதுவேதான் எனச்சொல்லி முடித்தது. இதை அறிந்து அநுஷ்டித்துள்ளவன் அப்பதவி அடை கிருன். இது ஸத்யம் என உபநிஷத் சொல்லி முடித்தது.

---

## 24. தாரஸார உபநிஷத் விவரணம்.

யாஜ்ஞவல்க்யரைப் பார்த்து சொல்லப்பட்ட விஷயம். காசிதான் ரொம்பவும் உயர்வா? அல்லது குருக்ஷேத்ரம் உயர்வா எனக்கேட்ட விஷயத்திற்கு பதில் அளித்தது.

வேறு எங்கும் போகவேண்டாம். குருக்ஷேத்ரம் யஜ்ஞஸ்தலம். காசியில் இறந்தவர்களுக்கு ருத்ரன், தானே தாரகப்ரம்ஹ மந்த்ரத்தை உபதேசம் செய்கிருர். அதினல் முக்தி அடையப்படுகிறது. அதைக் கைவிடாதே என்றதும், யாஜ்ஞவல்க்யர் ஸரி எனச் சென்று உபாஸித் தார். ஒரு ஸமயம் பரத்வாஜர், யாஜ்ஞவல்க்யரைக் கேட்டார். தாரகம் என்ருல் என்ன? தாரணம் எப்படி? என்றதும், யாஜ்ஞவல்க்யர் பதிலில் ஓம் நமோ நாராயணய! என்பதுதான். அதுதான் தாரக ஸ்வரூபம். ஓங்காரம் ஒரே அக்ஷரம். ஆத்மஸ்வரூபத்தை போதிக்கிறது. இரண்டு அக்ஷரம், ப்ரகிருதிஸ்வரூபம். நாராயணய ஐந்து அக்ஷரம்

ப்ரம்ஹஸ்வரூபம். எட்டு அக்ஷரங்கள், ஓங்காரம். இதை அறிந்தவன் ஆத்ம ப்ரக்ருதி, ப்ரம்ஹமறிந்தவன். அவனே மோக்ஷமடைகிருன். ஓம் ப்ரம்ஹம், ந. விஷ்ணு, ம. ருத்ரன், ந. ஈச்வரன், ர. அண்டவிராட், ய. புருஷன், ண. பகவான், ய. பரமாத்மா. (ப்ரம்ஹ, விஷ்ணு, ருத்ர, அண்ட விராட், புருஷன், பகவான், பரமாத்மா) என அர்த்தம்.

அ, உ, ம பிந்து, நாதம், கலை, கலாதீரம், பரம், தாரகப்ரம்ஹம், என இவைகளை உபாஸிக்கவேணும். அ. ப்ரம்ஹா-ஜாம்பவான், உ. உபேந்திரன்—ஹரிநாயகர், ம—சிவன்—ஹநுமான், பிந்து—ஈச்வரன்—சத்ருக்னன், நாதம்—விராட்—பரதன், கலா—புருஷன்—லக்ஷ்மணன், கலாதீரம்—ஸீதா, பரன்—பரமாத்மா—ராமர், இவ்விதம், ஓம் என்ற இந்த அக்ஷரத்தையே ரிக்வேதம், யஜுர்வேதம் என்பது, யாஜ்ஞவல்க்யரை பரத்வாஜர் கேட்டதும் இதுவே.

எந்த மந்த்ரத்தால் ஈச்வரன் ப்ரீதி அடைகிருன் என்றதும், யாஜ்ஞவல்க்யர் சொன்னுர். பரமாத்மா, நாராயணர், ஜாம்பவான், ஹநுமான், சத்ருக்னன், பரதன், லக்ஷ்மணன், ஸீதை, ராமன் இவர்களை நமஸ்கரிக்கிறேன். எனச் சொல்லவேணும். இதுவே எட்டுவித மந்த்ரமாக உள்ளது. இதை எவன் அத்தியயனம் செய்கிருனே? அவன் அடைகிருன். அக்னி பயத்தினின்று நீங்கி பரிசுத்தமடைகிருன். நாராயண என்ற எட்டு அக்ஷரமந்திரத்தினுல் ஆயிரம் ருத்ர ஜபம் செய்த புண்யமடைகிருன். ஆயிரம் காயத்ரீ பலன், கோடி ப்ரணவ ஜபபலன், நாராயணபத மடைகிருன். இதுதான் பரமபதமான விஷ்ணு பதம், என எப்பொழுதும் வித்வான்கள் அறியவேநன்ருகப் பார்க்கிருர்கள். மிதிலையில் ஜனகர் ப்ராம்ஹணர்களை ஜயித்து யாஜ்ஞயவல்க்யரையும். ப்ருஹஸ்பதியையும் கேட்டு இதையே சொன்னுர்

ஜ்யோதிர்லிங்கத்தை புருவ மத்தியில் எவன் நித்யம்த்யானம் செய்கிருனே? அவன் ஸதா ஸந்யாஸி ஆகிருன். எனச்சொல்லி உபநிஷத் விஸ்தாரமாக முடித்தது.

———

## 25. த்ரிபாத் விபூதி மஹாநாராயண உபநிஷத்விவரணம்.

பரமதத்வமறிய ப்ரம்ஹா தேவமானப்படி 1000-வருஷம் தபஸ் செய்தார். மஹாவிஷ்ணு ப்ரஸன்னமாகி. ப்ரம்ஹனே நீங்கள் தான்

எல்லாம் என்றதும். விஷ்ணு ப்ரம்ஹனுக்கு உபதேசம் செய்தார். இதை தேவதர்சீ என சொல்லுகிறது. குரு, சிஷ்யன், கேள்வி, பதில், உருவமாக இது சொல்லப்படுகிறது. கேட்ட மாத்ரத்திலேயே அவனது ஸம்ஸாரபந்த துக்கங்கள் துலேகிறது. எந்த ரஹஸ்யமறிகிருனே? அதினுலேயே ஸர்வரஹஸ்ய மறிந்ததாக ஆகிறது. அது ஸாகாரம், நிராகாரம், என இருவகைப்படும். விரோதமோ என ஸந்தேஹமடைய வேண்டாம், சரீரத்தில் வாயு, தொடுதல் என்றது மந்த்ரத்தினுலேயே உண்டாகிறது. விரோதமில்லே. ராமக்ருஷ்ண அவதார உருவமாக, விருத்தமில்லை என எண்ணப்படுகிறதைப் பார்த்த எவரும் மறுக்கமுடியாது.

ஸாகார, நிராகாரம், என்பது ஸ்வபாவமே உள்ளது. விழித்தல், மூடுதல், என்ற தன்மை மூல வித்யைக்கு உதய உருவங்கள். மழை காலத்தில் தவளே உண்டாவது போல், அவித்யை ஒழிந்து, மறுபடி உபாஸனேத் தன்மையும் உதயமாகிறது. மோக்ஷமடைய இச்சை உடையவனுக்கு போகும் வழியில், விஷ்ணு தூதர்கள் அவனுக்கு ஹம்ஸமந்த்ர உபதேச உச்சாரணம், செய்கிருர்கள். உபசாரம் செய்கின்றனர். போகிறவன் நாராயண உருவமடைந்து, ப்ரணவ உருவமென்ற கருடனே ஏறி, மஹாவிஷ்ணு உருவமடையாள மடைந்து சைவப்ரம்ஹ உலகங்களே அடைந்து, ஸூர்யத்வாரத்தை பேதித்து, துருவமண்டலமடைந்து, பரமான பதம் அடைகிருன். மஹாவிஷ்ணு கை ப்ரதேசத்தில், அனந்தகோடி ப்ரம்ஹாண்டங்கள் ப்ரகாசிக்கின்றன. நான் ப்ரம்ஹமாகிறேன் என. அவர் போலவே ஆகி, அடைந்து ஜ்ஞான உருவமுள்ள புருஷனுக்கு, எல்லோரும் வந்து அபிஷேகம் உபசாரம் முதலியன செய்கின்றனர்,

என்னேத்தவிர மற்ருென்று உலகில் ஒன்றும் கிடையாது. மஹா விஷ்ணு விவாத உருவத்தையே முக்யம் இது என எவன் அத்தியயனம் செய்கிருனே? அவன் ப்ரம்ஹ நிஷ்டனுகவே ஆகிருன். இது ஸத்யம், என உபநிஷத் விஸ்தாரமாகச் சொல்லி முடித்தது.

---

## 26. ஹயக்ரீவ உபநிஷத் விவரணம்.

இதில் நாரதர், ப்ரம்ஹா, கேள்வி, பதில், உருவமாக ஜ்ஞான உற்பத்தியே விசேஷமாகச் சொல்லும் விஷயமடைந்துள்ளது.

பரமேச்வரியின் அவதாரம் அநேகவித அக்ஷரமுடையதாக, ஆகாசத்தில் தோன்றி, சத்ருக்களான அஸுரர்களைக் கொன்று, ஜயக்கொடி நாட்டியது. ஹயக்ரீவ அவதாரம் எதற்காக? எனக்கேட்கையில்; ஹயன் என்ற அஸுரனைக் கொலை செய்து ஹயக்ரீவர் ஒழிவடைந்தார். அச்வானனர் பெரிய யுத்தத்தில் ஸர்வ சாஸ்த்ர ஸாமர்த்யமடைந்தவர், என அகஸ்த்யரால் சொல்லப்பட்டது. ஹயாஸுரன் கொலை செய்யப்பட்ட பிறகு, நாண், வில், எல்லாம் தூங்கியது. ஓர் ஸமயம் அண்டம் எல்லாம் தூங்கினதாக ஆயிற்று. அந் ஸமயம் எழுப்ப உத்தேசித்த தேவர்கள், முடியாதவர்களாக தேவியை ஸ்தோத்தரித்தனர் அப்பொழுது பண்டாஸுரன் முதலிய அஸுரர்களது ஹிம்ஸையைத் தாங்க முடியாது அங்கு ப்ரார்த்தித்தனர். தேவி அவர்களுக்கு வேண்டியதைச் செய்ய திருப்தியுடன் சார்ங்கம் என்ற வில்லை ஞாண் சேர்த்து, உயரத்தூக்க நினைத்தார். அதினுல் விழுந்தவரானுர். உடனே அஸுரனைக் கொல்ல சார்ங்க வில்லும், மலர்பாணமும், உபயோகப்படுத்தப்பட்டது என இம்மந்த்ராதிகளில் சொல்லப்படுகிறது. ஆகவே ஹயக்ரீவ அவதாரம் செய்து அஸுரர்களை ஒழித்தது என இவ்வுபநிஷத்தில் தெளிவுரத் தெரிகிறது. ஆகவே, அவ்வுருவ த்யானம் அடைந்தால் தான் நமக்கு க்ஷேமங்கள் உண்டாகும் என விஸ்தரித்து உபநிஷத் சொல்லி முடித்தது.

---

## 27. காலாக்னிருத்ர உபநிஷத் விவரணம்.

விபூதி தாரணத்தைப் பற்றி முக்யமாக உபதேசிக்கும் விஷயமுள்ளது. ஸனத்குமாரர் காலாக்னி ருத்ரரை ஒரு ஸமயம் கேட்டபொழுது சொல்லிய விஷயம். இது ஜபார்த்த விஷயங்களை நமக்கு போதிக்கிறது அதை அறிய முற்படவேணும். இதை அறிய ஸனத்குமாரர் த்யானத்திலிருந்து அஜ்ஞானம் விலக நினைக்குகையில்; காலாக்னி ருத்ரன் ஆவிர்பவித்து, விபூதி மஹிமையை விஸ்தரித்துச் சொல்லியது. ப்ரம்ஹ பாவம் அடைந்து, இந்த யதி மறுபடி உண்டாகிறதில்லை. என ச்ருதி வாக்யம் சொல்லியது. அதை அறிய முற்படல் வேண்டும். இந்த சரீரம் எடுத்தற்கு மூல காரணமாகும் என வற்புருத்துகிறது. இவ்விதம் விபூதியின் மஹிமையை விஸ்தாரமாக உபநிஷத் சொல்லி முடித்தது.

---

## 28. அவ்யக்த உபநிஷத் விவரணம்.

முதலில் ஒன்றுமில்லே. ஆனல் ஆனந்தமயம் ப்ரம்ஹம் மட்டும் இருந்தது. அது இரண்டு விதமாகியது. ஒன்று பச்சை உருவம், மற்ருென்று ரக்த உருவம். ரக்தம்—புருஷன், பச்சை—மாயை, இரண்டும் வருகின்றது. இரு வீர்யங்களும் கொடுத்தது. அது வ்ருத்தி அடைந்தது. பிறகு ஆண்டம் உண்டாயிற்று. அது ஸ்வர்ண உருவம் அது மாறுதலினுல பரமேச்வரத் தன்மை அடைந்தது. அதுவும் மாறுதலடைந்து நினைத்து என்ன குலம்? என்ன கார்யம்? எனவே வாக் உண்டாயிற்று. அது ஆயிரம் வருஷம் தபஸ் செய்து ரிக்வேத மறிந்தது. அதன் மேல் ரக்தம்—மாயை கேட்டது. பிறகு தபஸ் செய்து நரஸிம்ஹத்தைப் பார்த்து, அதை ப்ரம்ஹா நமஸ்கரித்துக் கேட்டது. அது உக்ரம், வீரம், மஹா விஷ்ணு என பதில் சொல்லிற்று. இந்த ஆகாச, பூமி, அளவு உள்ளது. நரஸிம்ஹ சரீர மடைந்தது. பயங்கரமானது, என்றதினுல், காற்று முதலியன இதற்கு பயந்து நடக்கிறது என்றர்த்தம்.

நான் யஜுஸ், உருவம் எனச் சொன்னவுடனேயே ப்ரஜாபதியைப் பார்த்து வரமடை! எனச் சொல்லிற்று. உங்கள் அவ்யக்த உருவம் காணபியும்! நீர், வ்யக்தமானதை எனக்கும் சொல்லும்! என்றதும், உலகமெல்லாம் சுத்த முள்ளது. வ்யக்தம் இல்லாததும் நானே, என உரைத்தது. அதை அறிய முடியவில்லே, ஸ்ருஷ்டி உபாயம் சொல்ல வேண்டியதும் ஸரி என்று மனதை ஆத்மாவில் செலுத்தி ஹோமத்யான யஜ்ஞும் மூலம் செய்யச் சொல்லிற்று.

மஹோபநிஷத் என்றும், அதை தேவர்களுக்கு ரஹஸ்யமுள்ளது என்றும். அறிவிக்கின்றனர். ஸாமமோ, யஜுஸ்ஸோ, அறிய முடியுமா? என்பது ஆகாது. இதை அறிந்தால் மறுபடி வருகிறதில்லே. இதை ப்ரம்ஹா த்யானம் செய்து. ஸ்ருஷ்டி முதலியன செய்தார். த்யான ஜ்ஞானம் செய்வானுகில் ஸர்வ கர்த்தாவாகிருன். இந்த்ரன் ப்ரம்ஹா, ருத்ரன், விஷ்ணு, ஸூர்யன் எல்லாம் இதிலே என்பது. 12 அக்ஷரம் ப்ராம்ஹணன், 10 அக்ஷரம் க்ஷத்ரியன், 10 அக்ஷரம் வைச்யன், 10 அக்ஷரம் சூத்ரன், ஆகவே ப்ராம்ஹணன்தான் முக்யம். பேசாமல் ஸ்ருஷ்டியை செய்து இருந்தது என்றதினுல் சூத்ரன். வித்யை இன்றியே உண்டானுன், ரிக்கானம் செய்து கொண்டு இருந்தல்

கருப்புத் தன்மை. நரசிம்ஹ விததம். பிராகி ஸ்த்ரீகளுள் ஸ்த்ரீ, புருஷர்களில் புருஷன்.

இந்த்ரனுக்கு தேவர்கள் கலசத்தினல் அபிஷேகம் செய்வித்து ஆதிபத்யம் செய்வித்தனர். பாஞ்சஜன்யம் என்ற சங்கத்தினல் வலது கையும், அவருக்கு ப்ரகாசிக்கிறது. அது நன்கு காப்பாற்றப்பட்டதாயிற்று. எல்லோருக்கும் ஆதிபத்யம் முதலியன செய்வித்து, ஸ்வராட் இருந்தது. உலகங்களை எப்படி நான் ஜயிப்பேன் என இருந்தது. அஷ்டகஜங்கள், அஷ்டதிக்பாலர்கள், அஷ்டநாகங்கள், இவை ஆமை உருவம் போல் இந்த்ரனை நாகம் முதலியன அழகிய ஆஸனமாக அடைந்தது. பூமியை ஜயித்தது. பிறகு இரு உலகத்திற்கும் அதிபதியாயிற்று. அது பூமியை ஜயித்தது என எவன் அறிகிருனே? அவன் அவ்வுபாஸனையுடைய நரஸிம்ஹ உருவம் எனவும், விராட் எனவும், ப்ரகாசிக்கும் தன்மை. எப்படி அறிந்தால் அவன் மறுபடி பூமி வாஸமடையப் பார்க்கிருனில்லையோ? அதைத்தான் அறியவேணும், என விஸ்தாரமாகச் சொல்லி ப்ரீதியுடன் முடித்தது. இதினல் என்ன கிடைக்கிறதென்ருல் தானகவே நரஸிம்ஹ உருவத்தை நன்கு அறிந்து, யார் உபாஸிக்கிருனே? அவன் மோக்ஷமடைகிருன் என்பது முக்ய தாத்பர்யம். என உபநிஷத் விஸ்தாரமாகச் சொல்லி முடித்தது.

---

## 29. அதர்வசிகை உபநிஷத் விவரணம்.

அதர்வா என்றவரை ஒரு ஸமயம், ஆங்கிரஸ் என்ற பிப்பலாதர் கேள்வி கேட்டது. இது ப்ரச்ன உபநிஷத் கேள்விபோல் ஸங்க்ரஹமுள்ளது. எதைச் சொல்லி த்யானம்? எது த்யானம்? எது த்யேயம்? என கேள்வி கேட்டது. ஓங்கார ஸ்வரூபமே, பரப்ரம்ஹம், ரிக், யஜுஸ், ஸாம, இவைகள் மூன்று மாத்ர உருவம். ஸூர்ய ரூபம், நானகாவது உருவம்.

ப்ரம்ஹ, விஷ்ணு, ருத்ரன், தைவ உருவங்கள். 4-வது மாத்ரை புருஷ தைவ உருவம் மூன்று தடவை ஓம் எனச் சொல்லி, நான்காவதை ஆத்மாவாகக் கொள்ளல் வேண்டும். அதுவே ஆத்மஜ்யோதிஸ் எனச் சொல்லப்பட்டு அது பிரகாசிக்கிறது. ஜாக்ரத், ஸ்வப்ன, ஸுஷுப்தி உருவங்கள், பரஈசன் சிவன் என ஒரே த்யேயரூபம் எல்லாம் மங்களத்தைக் கொடுக்கும் வல்லமை. மற்றவை தள்ளி

இதையே கவனிக்கவேணும். இதை ஒருவன் அத்யயனம் செய்வானேயாகில்; அந்த ப்ராம்ஹணன் கர்ப்ப வாஸத்தினின்று விடுபட்டவனாகிறான். இது ஓம் ஸத்ய உருவமுள்ளது, என கேள்விக்குப் பதில் சொன்னார். ஆகவே ஈசனை அடைய பல வழிகளில், இதுவும் ஒன்று. அநுஷ்டிப்போர்க்கு அக்கதி அடைந்து, ஈசனுடனே ஸாகமடைந்து எப்பொழுதும் இருக்கும் தன்மை. அதை அடைய முயற்சிக்க வேணும் என உபநிஷத் விரிவாகச் சொல்லி முடித்தது.

---

## 30. வாஸுதேவ உபநிஷத் விவரணம்.

விஷ்ணுவை நாரதர் கேட்டது. ஊர்த்வபுண்டரக் குறியோடு இருக்கிறதைப்பற்றி விசேஷமாகக் கேட்டது. பகவான் சொன்னார். விஷ்ணு சந்தனம், கோபிகளினால் அவலம்பிக்கப்பட்டது. அது கோபிசந்தனம், எனப் பெயர் அடைந்தது. சக்ர தீர்த்தத்தில் சக்ரத்துடன் சேர்ந்து மஞ்சள் வர்ணமாக ஆகியது. அது முக்திக்கு ஹேது உள்ளது. ப்ரம்ஹசாரி, வானப்ரஸ்தன், கைஅடியில் தாரணம் செய்ய வேணும். க்ருஹஸ்தன், சங்கம், சக்ரமுடைய கைகளில், நெற்றியில், முதலிய பன்னிரண்டு பாகங்களிலும் தாரணம் செய்யவேணும்.

யதி ஆள்காட்டி விரலினால் சிரஸ், நெற்றிகளில் ப்ரணவ மந்த்ரம் சொல்லி எடுக்கவேணும். ஊர்த்வபுண்டரக்குறி ஓங்கார உருவம். ஸத் உருவம். மேலாக நிமிர்ந்து போடுகிறதால் ஓங்கார அதிகாரியாக ஆகிறான். ஊர்த்வபுண்ட்ர லக்ஷணம் பரமஹம்ஸ உருவம். அவதுாதாள் ப்ரணவத்தை முன்னுடையதாக அதன் மத்தியில் அக்னி சிகைபோல் ஊர்த்வபுண்ட்ரம் போடவேணும். நீல நிறமான ஜலமத்தியில் இருப்பதுபோல் எண்ணவேணும். விஷ்ணு த்யானம், தாமரைத்தண்டு நாளம்போல், நடுவில் பரமாத்மா இருக்கிறார்.

எள்ளில் எண்ணைபோல், கட்டையில் அக்னிபோல், பாலில் நெய் போல், புஷ்பங்களில் வாஸனைபோல், பூதங்களில் ஆத்மாபோல், ஊர்த்வ பதமான ப்ரம்ஹலோக மடைவதில் கார்யம் கோபிசந்தனம், அகப்படாமல்போனால் துளஸிக்கட்டை உள்ள மண்ணை, வைஷ்ணவ காயத்ரியால் த்யானம்செய்து இடவும், என வாமதேவரினால் சொல்லப் பட்டது.

கோபிசந்தனம், ஸாக்ஷாத்தாக வைகுண்டலோகத்தினின்று க்ருஷ்ணனாலேயே கொண்டுவந்து கொடுக்கப்பட்டது. விபூதி இல்லாத நெற்றி பாழ். அக்னி உருவம் விபூதி. கோபிசந்தனம் போட்டுக்கொண்டு அதற்குமேல் விபூதியை, உத்தூளனம் செய்துகொள்ள வேண்டியது. இது விஷ்ணுவின் ஆஜ்ஞை. இதை அநுஷ்டிப்போர் விஷ்ணு உலகமடைவதே. திரும்பவும் கர்ப்பவாஸம் வரவேண்டியதில்லே, என வற்புருத்தி விரிவாகச் சொல்லி முடித்தது.

---

## 31. க்ருஷ்ண உபநிஷத் விவரணம்.

ரிஷிகள் ஆச்ரமத்தில் ராமனைக்கண்டு, ஆலிங்கனம் செய்யவேணுமெனக்கேட்டனர். அதற்கு அடுத்த அவதாரம் க்ருஷ்ண அவதாரம். அதில் நீங்கள் ஸ்த்ரீகளாய்வந்து என்னை ஆலிங்கனம் செய்யுங்கள் என்றார். கோபிஸ்த்ரீகள் உருவமாக வந்து, சேரவும் எனச்சொன்னார். அதுபடியே க்ருஷ்ணவதாரத்தில் ஒருவர்க்கொருவர் உருவமுடையராய், க்ரீடை வர்ணிக்கப்பட்டது. வஸு முதலான தேவர்கள் எல்லோரும் கூடி பூமியில் இறங்க உத்தேசித்து, கோபிகளானார்கள். ராமசந்திரனுக்கு க்ருஷ்ணவதார ப்ரதிஜ்ஞை ராமாவதாரத்திலேயே சொல்லப்பட்டது. முக்ய பயன் உள்ளது. புருஷ உருவத்திற்கு புருஷ ஆலிங்கனம் எற்பட்டது. வேண்டாம் என ராமசந்த்ரன் நினைத்து க்ருஷ்ணவதாரத்தில் ஸ்த்ரீ உருவம் நிச்சயம் செய்து, நான் ஆலிங்கனம் செய்கிறேன், எனச் சொன்னார். தேவர், ரிஷி, இவர்களது ப்ரார்த்தனையை முன்னுடையதாக ஸத்யத் தன்மையை ஞாபகப்படுத்துகிறதாக, க்ருஷ்ண உருவமாக பூமியில் அவதாரம் ராமசந்த்ரர் செய்தார். யசோதா தனது பக்தர்களுக்கு யசஸ் க்யாதி என்ற ஜ்ஞானத்தைக்கொண்டு தருபவள் போல் என்பதினாலேயே அவள் பெயர் அறிவிக்கப்பட்டது.

அது நிர்விசேஷ ப்ரம்ஹவித்யை உருவம். புல்லாங்குழல் ருத்ர உருவ அவதாரம். அது ஸப்தஸ்வர உருவமுடையது. 60108 ஸ்த்ரீகள் உபநிஷத் ரிக்குகள், உருவங்களாக அவதாரம் செய்தன என விரிவாகச்சொல்லி முடித்தது.

---

## 32. கருட உபநிஷத் விவரணம்.

கச்யப ப்ரஜாபதிக்கு புத்ரிகள் கத்ரு, வினதா என்ற இருவர்கள் இருந்தனர். வினதை பிள்ளை கருடன். கத்ரு பிள்ளைகள் ஸர்ப்பங்கள். ஒரு ஸமயம் உச்சைச்ரவஸ்ஸுக்கு சரீர லக்ஷணங்களில் விபரீத பாவனையால் கருப்பு, சிகப்பு, என்ற பாவம் உண்டாகி ப்ரதிஜ்ஞையால் விபரீத மேற்பட்டது. தோற்றவர்கள் மற்றொருவருக்கு அடிமைவேலை செய்யவேண்டியது என ப்ரதிஜ்ஞை செய்தனர். அப்படி செய்கையில் கத்ரு தோற்றுபோனாள். அதன் மூலம் கருடனுக்கு அம்ருதத்வ ப்ராப்தி அடைந்தது. அதன் மூலமாக கருடனுக்கு மஹாவிஷ்ணுவின் வாஹனஸ்தானமடைதல், தபஸ் செய்து அடைந்த கதை முக்ய முள்ளது. கத்ரு பிள்ளைகள் தோற்றுப்போனதால் பாதாளலோக மடையப்பட்டது. கருடனிடம் பயமடைந்து, அநுவாதமேற்பட்டது. அதன் மூலம் விஷவிநாச கதை எற்பட்டது. கருடபாவனையால் மந்த்ரம் எவன் உச்சாடனம் செய்கிறானோ? அவன் கருடனாகவே ஆகிறான். அதன் பல உருவங்களும் சொல்லப்பட்டது. மந்த்ரப்ரபாவமும் லக்ஷணமும், விரிவாக சொல்லப்பட்டது. ப்ரம்ஹ விதியை நன்கு உபதேசிக்க ஜ்ஞானம், என்றது இதனால் ஸம்பாதிக்கப்பட்டது. விஷத்தைப் பறக்கச்செய்யும் சக்தி கருடனுக்கு உள்ளது என்ற விசேஷ விவரணங்களையும் நன்கு சொல்லி உபநிஷத் முடித்தது.

---

## 33. தக்ஷிணாமூர்த்தி உபநிஷத் விவரணம்.

சௌனகாதி ரிஷிகள் மார்க்கண்டேயரைக் கேட்ட விஷயத்துடன் ஆரம்பமாகிறது ப்ரம்ஹாவர்த்தத்தில் பெரிய வடவ்ருக்ஷ அடியில் பாண்டீர வனத்தில் பெரிய யஜ்ஞம் செய்து மஹர்ஷிகள் கூடி ஸமிதி அடைந்தவர்களாகி தத்வமறிய அசை அடைந்து சிரஞ்சீவியாய் உள்ள மார்க்கண்டேய மஹரிஷியைக் கண்டு கேள்விகள் கேட்கலாயினர். அதற்கு பதில் அளிக்கையில்; சிவனே குரு, சிவனே வேதம், சிவனே தேவர், சிவனே ப்ரபு, சிவனாகவே நான் ஆகிறேன். அவனே உலக கர்த்தா. நானும் சிவன். சிவன் எல்லாம். சிவனைக் காட்டிலும் வேறு ஒன்றுமில்லை. தக்ஷிணாமூர்த்தி மாத்ரம், மேதா தக்ஷிணாமூர்த்தி, தெற்கு முகம் உள்ள மூர்த்தி, வீணா தக்ஷிணாமூர்த்தி, ஆகவே அபரோக்ஷ, ஸாக்ஷாத்கார ஜ்ஞான ஸித்தியை கொடுப்பது. இதைக்

காட்டிலும் வேறுமார்க்கம் இல்லை என அதை விஸ்தரித்துச் சொல்லியது. இவ்விதம் எவன் சொல்லி அநுஷ்டிக்கிறானோ? அவன் நற்பதமடைகிறான் எனச் சொல்லி உபநிஷத் முடித்தது.

---

## 34. ராமதாபினீ உபநிஷத் விவரணம்.

இதில் பூர்வதாபினீ, உத்தரதாபினீ என இருவிதம் விவரிக்கப் பட்டிருக்கிறது. ஆனந்தத்தை கொடுக்கக்கூடியவர். ராமர் பதத்திற்கு அர்த்தம். மற்றொரு அர்த்தம் ராக்ஷஸர்கள். மரணமடையும் தன்மை வாய்ந்தவர். ப்ரம்ஹ, விஷ்ணு, சிவன் என்ற மூன்று அர்த்தங்களையும் அப்பெயர் விளக்குகிறது. இவ்விதமாக மந்த்ர த்யான புரஸ்ஸரமாக யார் உபாஸிக்கிறானோ? அவன் ராமனது அநுக்ரஹம் பெறுகிறான், என பூர்வதாபனீயால் விவரிக்கப் பட்டிருக்கிறதைக் காணலாம். அடுத்த விவரணத்தில், யாஜ்ஞவல்க் யரைப்பார்த்து ப்ரஹஸ்பதி, சொல்லியது. காசிதான் உயர்வுஎன அந்த மாஹாத்மிய விவரணத்தை நன்கு கூறியது. யாஜ்ஞவல்க்யரை பரத் வாஜர் கேட்டது. தாரக மந்த்ரமே அதன் வித்தி, என ப்ரணவ அர்த்தத்தை அது விளக்குகிறது. மறுபடி யாஜ்ஞவல்க்யரை அத்ரி கேட்டது. பூர்ண ஸ்வரூபத்தை உபதேசிக்கிறார், எனச் சொல்லி அவிமுக்தம் காசியேதான் என்றும் உரைத்தது.

பரமேச்வரன் காசியில் ஸ்ரீராமனுக்கு மநுவை உபதேசித்தார். எத்தனையோ மநுயுகங்கள் அடைந்தது. பிறகு சங்கரரை ராமர் கேட்டது. ராமனை ஈச்வரன் மறுபடி கேட்டது. மணிகர்ணிகையில், எப்படி முக்தி உண்டாகிறது? என கேட்கையில்; ராமன் பதிலளிக்கை யில், எந்த இடத்தில் இறப்பதாலும், வாரணஸீ புண்யம் அடைவிக்கும் ப்ரதேசம். இவ்விதமே ராமனால் சொல்லப்பட்டது. யாஜ்ஞவல்க்யரை பாரத்வாஜர் கேட்டது. எந்த மந்த்ரம் ராமனுக்கு ப்ரீதியுள்ளது என ப்ரம்ஹன் கேட்டதிற்கு ராமசந்த்ரனேஉயர்வு எனச் சொல்லப்பட்டது.

யாஜ்ஞவல்க்யரை பரத்வாஜர் அணுகிக் கேட்டதிற்கு ஆறு அக்ஷரம் உடையது. விஷ்ணுவின் எப்பதமோ? அதுவே ஓம் ஸத்யம் என விரிவாகச் சொல்லப்பட்டது. இவ்விதம் வித்வான்கள் அவனது குணங்களை எப்பொழுதும் பார்க்கின்றனர். அதை அநுஸந்தானம் செய்யவேணும். தசரதருக்குப் பிள்ளையாகப் பிறந்தார் என்றது

முதல் ஆரம்பம். அதையே கொண்டு அவரைப் பூஜித்தால்; ஸர்வ க்ஷேமம் அடையலாமென உத்தரவை வற்புருத்துகிறது. இவ்விதம் விரிவாக உபநிஷத் சொல்லி முடித்தது.

———

## 35. நாராயண உபநிஷத் விவரணம்.

இது நான்கு பாகமுடையது. ரிக், யஜுஸ், ஸாம, அதர்வ என்ற உருவமுடையது. குரு, சிஷ்ய, ஸம்வாத உருவமாக இல்லாமல் ஆரம்பிக்கப்பட்டுள்ளது. விஷ்ணு, வித்யா, ஸ்தோத்தரிக்கவே உபதேசிக்கிறது. வித்வான்கள் ஆசைப்படவில்லை என்பதினுலேயே, அந்த அதிகரணத்திற்கு முக்ய காரணமுடையவர் என அர்த்தம். ஸத்து மாத்ர உருவ ஸ்ருஷ்டி. ஸகல ப்ரபஞ்ச ஸ்ருஷ்டி. அஷ்டாக்ஷர உருவத்யானத்தின் ப்ரச்ன ப்ரசம்ஸையை உரைப்பது. ஓம் நமோ நாராயண என்றது, அதன் நான்காம் பாதத்தில் அகார, உகார, மகார, விஷயம். மந்த்ரீ உருவமாக எவ்விதம் நிஷ்களங்க உருவத்துடன், ஜ்ஞான உருவராஜ்ய பாரத்தை வஹிக்கிருனே? அதுபோல் அஜ்ஞான நிவ்ருத்தி, உருவமுடைய ஜ்ஞான வித்தியின் பலன். துரீய ஜ்ஞானமடைதல் பலம். அதுதான் விதேஹமுக்தி.

பூர்ணம்தான் ப்ரம்ஹம். அதுதான் மிச்சமடைகிறது. ஒன்றே தவிர, இரண்டில்லை ப்ரம்ஹம், அதையே அத்யயனம் செய்வதாலேயே ஸமஸ்ததோஷமும் நிவ்ருத்தி. ஸார்வ பௌமத்வ ஜ்ஞானமும் உண்டாகும். அதுவே முக்யபொருள். அதை அடைவதே உபநிஷத்தின் நோக்கம், என உபநிஷத் விரிவாகச் சொல்லிமுடித்தது.

———

## 36. தத்தாத்ரேய உபநிஷத் விவரணம்.

நாராயணனை ப்ரம்ஹா, தாரக ப்ரம்ஹ ஸ்வரூபத்தில் ஸாத்விக ரூபம் எது? எனக்கு சொல்லவேணும்? எனக்கேட்டது. என் இருப்பிடத்தை ஒருவன் ஸேவிப்பானேயாகில்; அவனுக்கு நான் ஸாயுஜ்யம் கட்டாயம் கொடுப்பேன் என்ருர். யார் உபாஸிக்கிருனே? அவன் ஸம்ஸாரி இல்லை. அவன் மோக்ஷமடைகிருன், இது நாராயணனுல் சொல்லப்பட்டது. ப்ரம்ஹா; தத்தாத்ரேயரான நாராயணனை

மறுபடியும் உபாஸித்ததும், ஸத் மறுபடி சொல்லிற்று. தம், முதலிய மந்த்ரங்களை உபாஸித்து நீ அடை என உபதேசித்தார். ப்ரம்ஹ, நாராயணர், ஸம்வாதம் உருவம் இது உள்ளது கங்கா, யமுனு, உள்ள ஸர்வக்ஷேத்திர மத்தியில் ப்ரம்ஹா ஒரு ஸமயம் தபஸ் செய்தார் தபஸின் பலமடைய ஆசையால் இதைக்காட்டிலும் ஒன்றும் இல்லை என எவன் நினைக்கிருனே? அவனை கர்ம மனுஷ்யன் எனச் சொல்லமாட்டார்கள். கண் உருவமாக உடையவர் நாராயணர். என அவரைச் சொல்வது. அவரை ஸம்ராட் எனச் சொல்லவேணும் என்று நாராயணன் உபதேசித்தது. இதை ப்ரம்ஹா அடைந்ததினுல் நாராயணர் கொடுத்தார். தத்தாத்ரேயர் என்ற பெயரும் அடைந்தார். இதை அறிந்தவன் ஸம் ஸாரியாகமாட்டான். இவ்விதம் சொல்லியதை ப்ரம்ஹா அடைந்து, தபஸ் செய்து, அத்ரி பத்னி பலமான தபஸ், த்யானம் விஷ்ணுவை செய்ததும் ப்ரம்ஹா நேரில் நின்ருர், த்ருட வ்ரத மடைந்த தத்தாத் ரேயரைப் பார்த்து, தம் என்ற மந்த்ர ராஜனே உபதேசம செய்யக் கேட்டதும், மோக்ஷ மார்க்கத்தைக் காண்பித்தார். அவர் அடைந்தார். ப்ரம்ஹ நிஷ்டத் தன்மை என இதை அறிவானுகில் அவன் ஜீவன் முக்தனுகிருன்.

பாகவதத்தில் சொல்லுகையில்; எனது அம்ச உருவமுடைய மநுஷ்யர்கள் உலகத்தில் கேள்விப்படத்தக்கவர்களாக உண்டாகப் போகிருர்கள். கீர்த்திகள் அடையப்போகிருர்கள். ப்ரம்ஹ அம்சமாக சந்த்ரன் உண்டானுன். விஷ்ணு அம்சமாக தத்தாத்ரேயர் லோக ப்ரஸித்தராக உண்டானுர். துர்வாஸர் சங்கரர் அம்சமாக உண்டானுர். அங்கிரஸ் ப்ரஜை உருவம் என நீ அறி எனச் சொல்லப்பட்டு; அத்ரி தபஸில் மூன்று புத்ரர்கள், அநஸூயைக்கு உண்டானுர்கள். ஸோமன் தத்தாத்ரேயர், துர்வாஸர், உண்டானுர், கார்த்தவீர்யார்ஜுனனுக்கு அநுக்ரஹம் செய்ததால் தபஸ் பலமடைந்தது. தத்தாத்ரேய கீதை என ஒன்றுள்ளது. இவ்விதம் விஸ்தாரமாக உபநிஷத் சொல்லி முடித்தது.

---

## 37. ராமரஹஸ்ய உபநிஷத் விவரணம்.

ஹநுமான் ஸாக்ஷாத் பரமேச்வர அவதாரம் என இதில் உரைத்தது. பிறந்த மாத்ரத்திலேயே ப்ரஹ்லாதன், ஸனகாதிகள், இவர்களால் கேட்கப்பட்டது. ஹநுமாரை ஸனகாதிகள் கேட்டது.

ஹநுமான் ராமனது குணங்களைச் சொல்லி, அதினால் ராமன் ப்ரஸன்னமானார். விபீஷணன் ராமனைப் பார்த்துச் சொல்லியது. ப்ரம்ஹஹத்தி பாபங்களைப் போக்க, ராம நாமாவை நவகோடி தடவை, எவன் உச்சரிக்கிறானோ? அவன் என் பாவனையாகவே ஆகிறான்.

விபீஷணன் ராமனை அது முடியாதவன் என்ன செய்யலாம்? எனக்கேட்கையில், ராமகீதையை முதன்மையாக எவன் பாராயணம் செய்கிறானோ? அவன் என் உருவமாகவே ஆகிறான். மறுபடி ஹநுமாரை ஸனகாதிகள் கேட்டனர். வளையல் முதலிய ஆபரணங்கள் மணிகளால் இழைத்து ப்ரகாசமடைந்த ஸதாபருவகாலகோடி சந்த்ரனுக்கு ஸமான சாந்தியுடைய ராமஉருவத்தைப் பிடித்து ப்ரகாசிக்கிறார். ஆயிரக்கணக்கான ஸ்வர்ண ஸ்தம்பங்களால் ப்ரகாசிக்கிற பதினாறு ஆயிரம் கலையடைந்து, மஹா மண்டபத்தில் தேவேசனை பரதாதிகளுடன், கூடின ச்யாமள உருவரான ராமனை நமஸ்கரிக்கிறேன் என எவன் ராமன் ஸத்யம், பரப்ரும்ஹம், எனவும், ராமனைக் காட்டிலும் வேறு ஒன்றுமில்லை எனவும், தத்வமஸி வாக்ய உருவம் எனவும், பெயரடைந்து எவன் உபாஸிக்கிறானோ? அவன் ராமனாகவே ஆகிறான். அவன் ஸதா ராமனாகிறேன் என நினைத்துச் சொல்லுகிறான். தத்வார்த்தங்களை எவர்கள் சொல்லுகிறார்களோ? அவர்கள் நிச்சயம் ஸம்ஸாரிகள் இல்லை. ராமனே ஆகிறார்கள். அதில் ஸந்தேஹமில்லை. என்று சொல்லுகின்றனர் என உபநிஷத் விரிவாகச் சொல்லி முடித்தது.

---

## 38. ருத்ராக்ஷ ஜாபால உபநிஷத் விவரணம்.

காலாக்னி ருத்ரனை புஸுண்டன் கேட்டது. ருத்ராக்ஷம் எப்படி உண்டானது? அதை தர்சனம் செய்ததால் என்ன பலன்? என்றதும், பதில் காலாக்னி ருத்ரன் சொல்லியது. த்ரிபுரஸம்ஹாரத்திற்காக ஒரு ஸமயம் நான் விழித்தவனானேன். அப்பொழுது என் கண்ணில் இருந்து ஜலத்துளிகள் விழுந்தன. அவைகள் ருத்ராக்ஷங்களாக ஆயின. ஸர்வ உலக அநுக்ரஹத்திற்காகவே, அவைகளுக்குப் பெயர் சொல்லுவதாயிற்று பத்து பசு தானம் செய்த புண்யம், பார்த்தவினாலேயே உண்டு. தொட்டதினாலேயே புண்யம். தரிப்பவர்களுக்கு இதைவிட அதிகம் எனச் சொல்ல முடியாது. எங்கு இருக்கவேணும்? எங்கு தாரணம் செய்யவேணும்? எவ்வளவு பேதம்? எவ்வளவு முகம்?

எந்த மந்த்ரம்? ஆயிரக்கணக்கான வருஷங்கள் என்ன கிடைத்தது? என்றதும், என்றால் கண்விழித்துப் பார்க்கப்பட்டது. பூமியில் கண் விழியிலிருந்து ஜலத்துளி விழுந்தது. அது விழுந்து ருத்ராக்ஷ வ்ருக்ஷங்களாக ஆயிற்று.

பக்தர்களை அநுக்ரஹிக்கவே, மஹாவ்ருக்ஷங்களாக அடைந்தன. பக்தர்கள் தரிப்பதனாலேயே, இராப்பகல் செய்த பாபம் தொலைகிறது. லக்ஷம் ருத்ராக்ஷம் பார்த்ததினால் கோடி புண்யம் தரித்ததினால் அதிகம் உண்டாகும். கோடி பலன் தானம் செய்வதால் கோடி லக்ஷம் கோடி நூறு. அதன் ஜபத்தினால் ருத்ராக்ஷ தாரண பலம் அதிகம் உண்டாகிறது இலந்தைக் கொட்டைக்கு ஸமானம், ரொம்பவும் ச்ரேஷ்டம். நெல்லிக்காய் பெரியது மத்யமம். கடலைப்ரமாணம் அதமம், எனச் சொல்லப்படுகிறது. ப்ராம்ஹண, க்ஷத்ரிய, வைச்ய, சூத்ராள், சிலர் பூமியிலும், அந்த ஜாதியுடையது அழகிய கண்களாகவும்; பூமியில் வ்ருக்ஷ உருவமாக உண்டானார்கள். வெள்ளை ருத்ராக்ஷங்கள் ப்ராம்ஹணர்கள், சிகப்பு, க்ஷத்ரியர்கள், மஞ்சள், வைச்யர்கள், கருப்பு, சூத்ரர்கள் என உதாஹரணம் சொல்வது, ப்ராம்ஹணன் வெள்ளையும், சிகப்பு அரசனும், மஞ்சள் வைச்யனும், கருப்பு சூத்ரனும் தரித்தல் வேணும். அசுத்தமாயும், பொந்து உள்ளதாயும், உள்ள இவைகளைத் தள்ளவேணும். அசுத்தமான ருத்ராக்ஷங்கள் ஆறும் தள்ளவேணும். தானாகவே செய்த த்வாரமுடைய ருத்ராக்ஷம் மிக்க உத்தமம். புருஷ யத்னத்தினால் த்வாரம் போட்டால் மத்யம பலம்.

பட்டு வஸ்த்ரக் கயிறினால் ஸமமாக ருத்ராக்ஷங்களைப் போட்டு தாரணம் செய்ய வேணும். நடுவில் ஸ்வர்ண ரேகை போன்ற ரேகை காண்கிறதே உயர்ந்தது எனவும், சிவபூஜைக்கு ஒழுங்காக உள்ளது எனவும், காரணமாகும். தலையில் ஒரு ருத்ராக்ஷம், தலையைச் சுற்றி 30, கைகளில் 16-16, மணிக்கட்டுகளில் 12, கழுத்தில் 50, பூணல் மாதிரி 108-ம் போடவேணும். இரு ஸரமோ, மூன்று ஸரமோ, ஐந்து ஸரமோ, எழு ஸரமோ கழுத்தில் தரிக்க வேணும், நெற்றியில் குண்டலமாகவும், காதின் மேல் பாகத்தில், கைவளையல்களில் பாககி அங்கங்களில் எல்லாவற்றிலும், தூங்குகையிலும், சாப்பிடும் போதும், ஸதா காலம், மநுஷ்யன் ருத்ராக்ஷம் கட்டாயம் தரிக்க வேணும். அதமம் 300, மத்யமம் 500, உத்தமம் 1000, இவ்விதம் தரித்தல் நலம். ஸத்யோஜாதாதி மந்த்ரங்களைச் சொல்லி ஒவ்வொரு இடத்திலும் தரிக்கவேணும்.

மறுபடி புஸுண்டன் காலாக்னி ருத்ரனைக்கேட்டது. எத்தனை முக ருத்ராக்ஷம் உள்ளது? எனக்கேட்டதிற்குப் பதில். ஒரு முகம் பரத்வாஜ ஸ்வரூபம், இது தரித்தல் பரதத்வ ஜ்ஞானத்திற்கு இந்த்ரிய நிக்ரஹ பலம் உண்டாகும் இரு முகம் அர்த்த நாரீச்வரர் ப்ரீதி அடைகிறார். மூன்று முகம் அக்னி உருவம். தரித்தால் அக்னி ப்ரீதி அடைகிறான். நான்கு முகம் ப்ரம்ஹன் உருவம். அதினால் அவர் ஸந்தோஷமடைகிறார். ஐந்து முகம் பஞ்சப்ரம்ஹனின் ஸ்வரூபம். ஈச்வரன் அவனுக்கு புருஷஹத்தி, ப்ரம்ஹ ஹத்தி தோஷம் எல்லாம் துலைக்கிறார், ஆறு முகம் ஸுப்ரமண்ய உருவம். தாரணம் செய்தலால் ஆரோக்யமுண்டாகும். புத்தி ஜ்ஞான ஸம்பத். சுத்திக்கு புத்திமான் கட்டாயம் தாரணம் செய்யவேணும். அதினால் விநாயகனை அதிதை வதமாக புத்திமான்கள் கருதுகிறார்கள். ஏழு முகம் மஹா ஆரோக்யத் தன்மை. அதினால் லக்ஷ்மி அநுக்ரஹம் செய்கிறாள். பெரிய ஜ்ஞான ஸம்பத். சுத்தி தாரணத்தினால் உண்டாகிறது. எட்டு முகம், எட்டு மாதிரி உள்ளது. அஷ்டவஸுக்கள் க்ஷேமங்கள் உண்டாக்குகின்றனர். ஒன்பது முகம், நவசக்தி உருவம். அதினால் நவ சக்திகள் த்ருப்தி அடைகின்றனர். பத்து முகம், யம தைவதமுள்ளது. தாரணம் செய்வதாலேயே சாந்தி உண்டாகிறது. பதினோரு முகம் ஏகாதச ருத்ர உருவம், ஸௌபாக்யங்களை வ்ருத்தி செய்யக்கூடியது. பன்னிரெண்டு முகம் மஹாவிஷ்ணு உருவம். பன்னிரெண்டு ஸூர்யர்கள் அதினால் த்ருப்தி அடைகின்றனர். பதின்மூன்று முகம், ஸர்வ ஸித்தி உடையது. காமதேவன் அதினால் ப்ரஸன்ன மடைகிறான். பதினான்கு முகம், ருத்ர உருவமுள்ளது. ஸர்வ வ்யாதிகளையும் துலைக்கக் கூடியது. ஸர்வ ஆரோக்யமுள்ளது. ஆகவே இவை முக்ய உருவங்கள். அதை அடைவதோடு அல்லாமல் கர்மாங்கங்கள்; அசுத்தி ஆஹாரங்கள், இதை தரிப்பவன் கட்டாயம் உடனே விலக்கவேணும். முக்ய திதிகள், காலங்கள், இவைகளில் தாரணம் செய்வதாலேயே புண்ய மடையப்படுகிறது. ஸர்வ பாபங்களும் ஒழிகிறது. ருத்ராக்ஷ மூலத்தில் ப்ரம்ஹா, அதன் கொடி விஷ்ணு, அதன் முகம், ருத்ரன், பிந்து ஸர்வ தேவதைகளும் இருக்கிறார்கள் என இவ்விதம் கூறப் படுகிறது.

மறுபடி ஸனத்குமாரர் காலாக்னி ருத்ரரைக் கேட்டது. ருத்ராக்ஷ தாரண விதியை சொல்லச் சொல்லியது. அநேக ரிஷிகளும் வந்து கேட்டது. எல்லோரும் வந்தது காரணம் என்ன? எனக் கேட்கையில்,

ருத்ராக்ஷ விதி கேட்க, ஆவலுள்ளவர்களைக் காண்கிறோம் என்றதும்; ருத்ரனது கண் நீர்த்துளியினால் உண்டானது. ருத்ராக்ஷம் எனப் பெயர். ஸம்ஹார காலத்தில் ஸம்ஹாரம் செய்து, ருத்ரன் கண்ணைத் திறக்கிறார். அதினால் அது உண்டாகிறது. அதினால் ருத்ராக்ஷம் எனப் பெயர். இதை அணிவதால் செய்யும் கார்யங்கள் கோடிக்கணக்கான பலன்கள் அடையும். முக்தி அடைவிக்கும் தன்மையைச் செய்யும். என மோக்ஷ உபாயம் தெரிவித்து விரிவாக உபநிஷத் முடித்தது.

---

## 39. ப்ருஹத்ஜாபால உபநிஷத் விவரணம்.

காலாக்னி ருத்ரனை புஸுண்டன் கேட்டது என ஆரம்பிக்கப்படுகிறது. முதலில் ஒரே ஜலம்தான் இருந்தது. ப்ரஜாபதி ஒருவரே ஆலை இலையில் படுத்து இருந்தார். அவரது மனதில் இஷ்டமாக இதை ஸ்ருஷ்டிக்க வேணுமென ஆசை உண்டாயிற்று. அதினின்று எந்த புருஷன் மனதினால் அடைந்ததோ? அதுவே வார்த்தையில் சொல்லப் படுகிறது. அது கார்யத்தினால் செய்கிறது. முதலில் காமம் வ்ருத்தி அடைந்தது, மனதினின்று ரேதஸ் உண்டாயிற்று, ஸத்தினின்று பிந்து, அஸத்தில் பிந்து இல்லை. ஹ்ருதயத்தில் ஸந்தோஷத்தினால் அது ஆகியது என கவிகள் புத்திக்கு இதையே விளக்குகிறது, காண்கிறது. அதையே கர்மம் என அறி. என்றதும் உடனே அது தபஸ் செய்தது. விபூதி மாஹாத்மியம் சொல் என புஸுண்டன் காலாக்னி ருத்ரனைக் கேட்டது. ஸரி எனச் சொல்லியது. விபூதி ருத்ராக்ஷ மஹிமையை சொல் என்றதும் முதலிலேயே பைப்பலாதரால் சொல்லப் பட்டது. அதன் பலச்ருதியே, அதன்மேல் உள்ளது. என்ன சொல்ல வேணும் என்றதும், முக்தியைச் சொல் என்றது. முதலில் ஸத்யோ ஜாதம், அதினின்று நிவ்ருத்தி கபில வர்ணமுடைய நந்தை என்ற மாடு. அதினின்று விபூதி உண்டாயிற்று, வாம தேவத்தினின்றும் தண்ணீர், அதினின்று ப்ரதிஷ்டை, அதினின்று க்ருஷ்ண வர்ணமுடைய பத்ரை. அதன் சாணத்தினின்று விபூதி உண்டாயிற்று. அகோரத்தினின்று அக்னி, அதினின்று வித்யை. அதினின்று ரக்தவர்ணமுடைய ஸுரபி. அதன் சாணத்தினின்று விபூதி. தத்புருஷத்தினின்று வாயு, அதினின்று சாந்தி, அதினின்று ச்வேதவர்ணமுடைய ஸுசீலா. அதன் சாணத்தினின்று விபூதி உண்டாயிற்று, ஈசானத்தினின்று ஆகாசம். அதினின்று

சாந்தி அதீதம். அதினின்று சித்ரவர்ணமுடைய ஸுமனஸ், அதன் சாணத்தினின்று ரக்ஷை உண்டாயிற்று. விபூதி வெண்மை, க்ஷாரம், ரக்ஷை, எல்லாம் விபூதியினின்று ஐந்து பெயர்கள். ஐந்தும் ஐச்வர்ய காரணம். விபூதி ஸர்வ பாபங்களையும் ஸாப்பிடுகிறது. விபூதிப்ரஸாதத்தினுலேயே வெளுப்பு, ஆபத்தை அலம்புதாலேயே க்ஷாரம், பூதப்ரேத பிசாச, ப்ரம்ஹ ராக்ஷஸ, அபஸ்மாரத்தினின்று உண்டான பயங்களினின்று காப்பாற்றுதல். அதினுலேயே தீக்ஷை. சிவாக்னி ரூபமுடையது. ஸோமாவ்ருதம் என நன்கு ஈசனை எவன் உபாஸிக்கிருனே? அவன் அம்ருதமடையும் லக்ஷணத்தன்மை. மறுபடி விபூதி யோகத்தைப் பற்றிச் சொல்லியது. உபயோகமில்லாத பசுக்களை உபயோகப்படுத்தக்கூடாது. நல்ல பசுக்களைக் கொண்டு அதன் தேஹத்தால் நல்ல இடத்தில் போட்ட சாணம், அதை சுத்தம் செய்து தோஷமில்லாமல் எடுத்த விபூதியேதாரணம் செய்து கொள்ளவேணும். வித்யா சக்திதான் பெரிய சக்தி, அதன் குண ஆச்ரயமே நல்ல ஹேது. அதன் சேர்க்கைதான் மிக்க உயர்ந்த ஸாதனம். இம் மூன்று குணமுடைய பசுவின் சாணமே முக்யம். அப்பேர்ப்பட்ட பசு வித்யை உருவம். அதன் கோமயம் மங்களம், மூத்ரம் உபநிஷத் உருவம், கன்று ஸ்ம்ருதிகள். அதின்னின்று உண்டானது சாணம். ஆகாவ: என்ற மந்த்ரத்தினுல் பசுவை ஸ்தோத்தரித்து அடைதல் வேணும்.

பின்பு மந்த்ர பூர்வகமாக சுத்தி அடைந்து தானும் இருந்து பூர்த்தி செய்த கோமயமே, உயர்ந்த விபூதி உருவமாக ஆகும் தன்மை. 32 அக்ஷரங்களால் போட்டு தாரணம செய்தல் நலம். அக்னிஹோத்ர விபூதி அதுகல்ப்பம், வனத்தில் எரிக்கப்பட்ட விபூதி உபகல்ப்பம், அரண்யத்தில் கிடந்து காய்ந்து உலர்ந்த சாணத்தினுல் ஏற்பட்டது. உபபோக கல்ப்பம், சிவாலயத்திலுள்ளது. அகல்ப்பம், அல்லது சதகல்ப்பம், இவ்விதம் விபூதி நானகு விதமாக ஸர்வ பாபங்களையும் துலைத்து மோக்ஷத்தைக் கொடுக்கிறது. இவ்விதம் புஸுண்டனுக்கு விபூதி தாரண விதியை விஸ்தாரமாகச் சொல்லியது.

மூன்று பட்டையாக விபூதி அணிவதின் மஹிமை கேட்டபொழுது, விபூதி மஹிமையைப் பற்றி ஓர் கதை விஸ்தாரமாகச் சொல்லியது.

வஸிஷ்ட வம்சத்தில் பிறந்த சதபார்யை என்றவளது பையன் தனஞ்சயன் என்ற ப்ராம்ஹணன் இருந்தான். அவன் மூத்த ஸம்ஸாரத்திற்குகருணன் என்ற பிள்ளை இருந்தான். அவனுக்கு சுசிஸ்மிதை என்ற

ஸம்ஸாரம் இருந்தாள். அந்தக் கருணன், அண்ணன், முதலானவர் சண்டையை ஸஹிக்காமல், பவானி நதிக்கரையில் நரசிம்ஹத்தை அடைந்தான். அந்த தேவர் ஸமீபத்தில் வேறு உபாயத்திற்காக நாகைப்பழம் எடுத்து, ஈச்வரனுக்கு நிவேதனம் செய்து வந்தான். அப்பொழுது அங்கிருந்தவர்கள் பாபீ நீ நூறு வருஷங்களுக்கு கொசுவாக இருக்கக் கடவது என சபித்தனர். அவனும் சாபமடைந்து தனது ஸம்ஸாரத்தினிடம் தெரிவித்துவிட்டு என்னை காப்பாற்று எனச் சொல்லி கொசுவாக இருந்தான்.

இதை அறிந்த அவர்களது ஜ்ஞாதிகள் அவனை எண்ணைக் கொப்பரையில் போட்டனர். அவன் இறந்து போனான் என அறிந்த பத்னி அவனை எடுத்து அநந்ததியை அடைந்தாள், சுசிஸ்மிதே! துக்கமடைந்தது போதும்! இந்த ஜீவனைப் பிழைக்க வைக்கிறேன் என விபூதியை எடுத்துத் தெளித்தாள். உடனே அந்தக் கொசு பிழைத்தது. ஜ்ஞாதிகளால் ஏற்பட்ட விஷயம் தெரிந்தது. பின்பு உயிர் கிடைத்தது. இம்மாதிரி விபூதியினாலேயே நல்ல கதியும் ஏற்பட்டது. ஆகவே, தேவர்களுக்கு எப்பொழுது ஆபத்து ஏற்படுகிறதோ? அப்பொழுது எல்லாம் விபூதியால் ஜீவிக்கச் செய்கிறேன் எனச் சொல்லி நதீசியும் உண்டானாள். அதன் ஸ்வரூப மடைந்து தனது ஆச்ரம மடைந்தார். அப்பொழுது விபூதி ஸர்வ பாபங்களையும் துலைக்கும் ஸாமர்த்யம் அடைந்தது எனச் சொல்லப்படுகிறது.

கௌதமர் விவாஹ காலத்தில் அஹல்யயைக் கண்டு எல்லா தேவர்களும் காமாதுரர்களாயினர், அப்பொழுது ஜ்ஞானமில்லாமல் துர்வாஸரை அடைந்து, கேட்டனர். அந்த தோஷம் நிவர்த்திக்கிறேன் எனச் சொல்லி சதருத்ரிய மந்த்ர ஜபம் செய்த விபூதி கொடுக்கப்பட்டு அவர்களுக்கு ஹம்ஸ காயத்ரியே நிவர்த்தி செய்தது எனச் சொல்லி, உத்தம விபூதியைக் கொடுத்தார். என் வார்த்தையால் நீங்கள் எல்லோரும் கேளுங்கள். சதருத்ர மந்த்ர உருவமுடைய விபூதி பூசிய உடனே உருவமுடையவர்களாகிய நீங்கள் போங்கள் என விபூதியின் ஸாமர்த்யம் சொன்னார்.

இந்த விபூதியின் மற்றொரு சக்தியைக் கேள். விஷ்ணு, சிவன் இருவர்களுக்கும் ஜ்ஞானமுண்டாக்கும் தன்மை எனவும், ப்ரம்ஹஹத்தி முதலிய பாபம்விலக்கும் எனவும், மஹா விபூதி என்றும், சிவனுடைய மார்பில் இருப்பதை நகத்தினால் எடுத்து, ப்ரணவம், காயத்ரி,

பஞ்சாக்ஷரம் இவைகளால் மந்த்ரித்து, சிரஸ், சரீரம், இவைகளில் இடுவானேயாகில், அப்பொழுது ஹ்ருதயத்தில் த்யானம் செய் என விஷ்ணுவைச் சொல்லியதும். அவர் தனது ஹ்ருதயத்தில் த்யானித்து காண்பித்த சிவனைச் சொன்னார். விபூதி சாப்பிடு என நாராயணனைப் பிறகு சிவன் சொன்னார். சாப்பிடுகிறேன் எனச் சொல்லி விபூதி ஸ்நானம் முன்பு செய்து வந்தேன் என்றதும் கேட்டு, பக்தி அடையும் படியாக ஈசனைச் சொல்லி, அச்யுதன் விபூதியை சாப்பிட்டார். அவ்விடத்தில் ஆச்சர்யம், நிழலுடைய ஸமான காந்தி உண்டாயிற்று. விஷ்ணு க்ஷணிக காலத்தில் விபூதி சாப்பிட்டதும் சுத்த நல் முத்து வர்ணமானார். அன்று முதல் வெண்மை காந்தி உடையவராகி விஷ்ணு ப்ரஸன்னமானார். எங்கே உனக்கு விபூதி ஜ்ஞான ப்ரபாவத்தைச் சொல்ல முடியும்! முடியாது. உம்மை நான் நமஸ்கரிக்கிறேன் எனச் சரணமடைந்தேன்.

உமது தாமரை போன்ற கண்களால் எப்பொழுதும் பக்தி என்னிடம் காட்டுக! விபூதி தாரண மடைந்தவன் என்பதைக்காட்ட உன்னைப் பக்தனாக ஆக்கப்போகிறேன் என புஸூண்டனுக்கு காலாக்னி ருத்ரன் சொன்னார். ஆகவே விபூதி, அநுபூதி ஸாக்ஷாத்காரத்தை கொடுக்கக்கூடியது எனச் சொல்லப்பட்டது. இதன் கிழக்கில் வஸூக்கள் இருந்தனர். தெற்கில் ருத்ரன். மேற்கில் ஆதித்யாள். வடக்கில் விச்வேதேவாள். நாபியில், ப்ரம்ஹ, விஷ்ணு, மஹேச்வராள். பக்கத்தில் ஸூர்ய சந்த்ரர்கள். இந்த ப்ருஹத்ஜாபாலம் மோக்ஷத்வாரம் உடையது. நான்கு வேத உருவமுடையது. அவரை, குழந்தை, பெரியவாள், யார் உபாஸித்தாலும், மஹான் ஆகிறான். ஸர்வமந்த்ரங்கள் அடைந்தவனாகிறான். விபூதி அணிந்தவன் ஏழு ஸமுத்ரமுடைய பூமியை தக்ஷிணையாகக் கொடுத்த புண்யமடைகிறான்.

ஜனகர் யாஜ்ஞவல்க்யரை அடைந்து, த்ரிபுண்ட்ர விதியைச் சொல்லும் எனக் கேட்டதிற்கு, பதில், விபூதி இடுதற்கு மந்த்ரங்கள் சொல்லி எவன் தரிக்கிறானோ? அவன் பெரிய பலமடைகிறான் எனச் சொல்லப்பட்டது. ஜனகர், யாஜ்ஞவல்க்யரைச் சொல்லியது. விபூதி தாரணத்தினாலேயே, சிவஸாயுஜ்ய மடைகிறான், முக்தி அடைகிறான். திரும்புகிறானில்லை அநேக ரிஷிகள் இம்மாதிரி செய்து, ஜீவன் முக்தி அடைந்தனர். விபூதி தரிப்பவன் சரீரத்தில் ஆயிரக்கணக்கான நாடிகளில், சிவலிங்க உருவங்கள் கண்டு, முக்தி அடைய ஸாதனம். பைப்ப

லாதர் இதைக்கேட்டு உடனேயே வைகுண்டம் போய் விபூதி தரிக்கும் மஹாத்மியம் விசாரித்துத் திரும்பவும் சொல்லியது. விஷ்ணு சொல்லியதை பைப்பலாதர் கேட்டது. பைப்பலாதர் ஒரு ஸமயம் காலாக்னி ருத்ரனை அடைந்து, விபூதி அணிவதைக் கேட்டுத் தெரிந்து கொண்டது. அதில் 60-ஆயிரம் கோடி தீர்த்தங்களில் ஸ்நானம் செய்த பலனை விபூதி அணிந்தவன் முக்யமாக அநுபவிக்கிறான் எனச் சொல்லியது. ருத்ராக்ஷதாரண விதியை ஸனத்குமாரர் காலாக்னி ருத்ரனைப் பார்த்துக்கேட்டது. அதற்கு பதில் ருத்ரன் கண்களிலிருந்து நீர்த் துளிகள் விழுந்தது. அது ருத்ராக்ஷமாகியது. அதினால்தான் அதற்கு அவ்வளவு பெருமை உண்டாகியது ருத்ராக்ஷ தாரண மறிந்ததினால் ஸகலஸௌக்யமடையப்படுகிறது. கடைசியாக ப்ருஹத்ஜாபாலனைக் கேட்கையில்; இதினால் எல்லாவித புண்ய பலன்களும் அடைகிறான், எனச் சொல்லி விரிவாக உபநிஷத்முடித்தது.

---

## 40. பஞ்ச ப்ரம்ஹ உபநிஷத் விவரணம்.

சாகலரை பைப்பலாதர் கேட்ட விஷயத்துடன் ஆரம்பமாகிறது. முதலில் எது உண்டாயிற்று என்றதும், ஸத்யோஜாதம், அகோரம், வாமதேவம், தத்புருஷம், ஈசானம். அவர்தான் தைவயோனிகளுக்கு பிறப்பிடம், என்ன வர்ணம்? என்ன பேதம்? சக்தி? எல்லாம் ரஹஸ்யமாய் உள்ளது. அதுவே முக்யமுள்ளது. இவ்வைந்து உருவமே முக்யமான கார்யம் என விவரித்து, உதாஹரணங்களுடன் கூறி சொல்லி உள்ளது. மாயையில் மோஹமடைந்த ஜனங்கள், தேவர்கள், ஈசனை அறிகிறதில்லை. அவரால் தான் இவ்வுலகம் பூராவும்காண்கிறது. இது பஞ்சப்ரம்ஹம் என அறியவேணும். பஞ்சாக்ஷரப்ரம்ஹம் அதுவே என அறி. அது ஐந்து உருவமாக ப்ரகாசிக்கிறது. இப்படி உபாஸித்ததும், காலவருக்கு நேரில் ஈசன் வந்து க்ருபை செய்து அந்தர்த்யானமானார். இதைக் கேட்ட மாத்ரத்திலேயே ஜ்ஞானம் உண்டாகிறது. ஒன்று அறிந்ததாலேயே எல்லாம் அறிந்ததாகிறது. அதையே அறிதல் வேண்டும். இந்த சரீரத்தில் உள்ள ப்ரம்ஹபுரத்தை அடைந்துள்ள சிறு வெளி ஆகாசத்தில் அது இருக்கிறது. அங்கு ஸச்சிதானந்த உருவம் காணப்படுகிறது.

அதுவே ஸம்ஸார பந்தத்தை அறுக்கச் செய்கிறது அதைத்தான் ஹ்ருதயம் எனச் சொல்வது. இதுவே விரிவாக உள்ள பஞ்சப்ரம்ஹ தத்வம் என்று உபநிஷத் விரிவாகச் சொல்லி முடித்தது.

---

## 41. பஸ்ம ஜாபால உபநிஷத் விவரணம்.

புஸுண்டன் என்ற ஜாபாலன் கைலாஸகிரியில் வஸிக்கும் ஓங்கார ஸ்வரூபியும், மஹாதேவரும் சந்த்ரனை சிரஸில் உடையவரும் ஸூர்ய, சந்த்ர, அக்னி, இவர்களை கண் உருவமுடையவரும் ஆயிரம் சந்த்ரன் போன்ற ப்ரகாசமுடையவரும், புலித்தோலைத் தரித்தவரும் மானைக் கையில் உடையவரும், விபூதி பூசிய சரீரமுடையவரும், நெற்றியில் மூன்று பட்டையாய் விபூதியைத் தரித்து ப்ரகாசிக்கும் நெற்றி ப்ரதேச முடையவரும், புன்னுநவலுடைய ஐந்துவித ஐந்து முகமுடையவரும் வீராஸனத்தில் வீற்றிருப்பவரும், எண்ண முடியாதவரும், ஆதி அந்த மில்லாதவரும், நிஷ்களரும், சாந்தரும், நிரஞ்சனரும், அனுமயரும், ஹூம்பட், என்றதைச் செய்பவரும் சிவநாமாவை அடிக்கடி உச்சரிப்ப வரும், ஸ்வர்ணம் நிதி இவைகளை உடையவரும், சுத்தாத்வைதரும், சதுர்த்தரும், ப்ரம்ஹ விஷ்ணு, ருத்ராள் இவர்களைத் தாண்டிய ஒரே திக்காக உடையவரும், உள்ள அப்பகவான் சிவனை, நமஸ்கரித்து அடிக் கடி பூஜித்து, ஸ்ரீ பலதளங்களாலும், விபூதியாலும், வணங்கிய தலைபாக முடையவனுகி, அஞ்சலி செய்த சிரமடைந்து, கேட்டார். பகவானே! வேத ஸாரத்தை உத்தாரணம் செய்யும் த்ரிபுண்டர விதியால் எக்கார ணம் பற்றி இதர அபேக்ஷை இன்றி மோக்ஷமடைய முடியுமோ? அதை எனக்குச் சொல்லவேணும்! விபூதிக்கு த்ரவியம் என்ன? எந்த ஸ்தானங் கள்? எப்படி தாரணம் செய்தல்? வேணும். இது முதலியன சொல்ல வேணும், என்றதும்; அதன் மாஹாத்மியத்தையும், செய்யும் அநுஷ் டானத்தையும், விஸ்தாரமாகச் சொன்னுர்.

இப்படி விதிப்படி மூன்று காலங்களிலும் தரித்தல் வேணும். ப்ராம்ஹண தர்மமே அது. மறுபடி ப்ராம்ஹணர்கள் செய்ய வேண்டிய தையும், செய்ய முடியாமல் போனுல், அதன் ப்ராயச்சித்தமும், சொல் லப்பட்டது. பின்பு, ருத்ராக்ஷங்களை அணியவேணும். சிரஸில் 40, தலைகளில் ஒன்று, மூன்று காதுகளில், 12. கழுத்தில், 32. கைகளில், 16-16, மணிக்கட்டுகளில் 12-12, கட்டைவிரல்களில், 6-6, ஸந்திக

களில், தர்ப்பம் கொடுத்துக்கொண்டு, ஒவ்வொரு காலங்களிலும் உபாஸிக்க வேணும்.

பிறகு அங்கந்யாஸங்களுடன் விதிப்படி ஈச்வர பூஜை செய்ய வேணும். ஈச்வர பூஜை செய்யாமல் சாப்பிடக்கூடாது லிங்கரூபியான என்னை ஆச்ரயித்து, யார் பூஜை செய்கிறார்களோ? அவர்கள் யோகஜ் ஞானமடைகின்றனர். நான்கு திக்குகளிலும் எல்லா தேவதைகளும் என்னை ஆச்ரயிக்கின்றனர். அவர்கள் என் ஸாந்நித்ய மடைகின்றனர். காசியில் மோக்ஷமடைய என்னை ஆச்ரயித்து, என் உருவமாகவே ஆகி, எனது பதவியில் இருக்கின்றனர். அதுவே என் முக்திஸ்தானம், என விரிவாகச் சொல்லி உபநிஷத் முடிந்தது.

---

## 42. ருத்ரஹ்ருதய உபநிஷத் விவரணம்.

சுகர் வ்யாஸரைக் கேட்ட விஷயத்துடன் ஆரம்பமாகிறது. யாருக்கு சுச்ரூஷை செய்தால், எல்லா தேவதைகளுக்கும் செய்ததாக ஆகுமோ? அதைக்கொண்டு ப்ரீதி அடைய, எனக்குச் சொல்லவேணும். இவ்வார்த்தையை வ்யாஸர் கேட்டு சுகருக்குச் சொல்லியது. ஸமஸ்த தேவதைகள் உருவமும், சிவனே தவிர வேறு ஒருவரும் இல்லை. யாரை நமஸ்கரித்தாலும் சிவனைச் செய்ததாகவே ஆகும். அம்மாதிரியே எல்லாம் முடிவுபெறும். இப்படி அறிந்தவன் கர்மபலங்களை அநுபவிக்காமல், மோக்ஷ பலங்களையே அறிகிறவனாகிறான். அதையே நினைக்க வேணும் என விஸ்தரித்துச் சொன்னார்.

இம்மாதிரி ப்ரம்ஹ ஸ்வரூபம் சிவன் ஒருவன்தான் என அறிவானா கில்; அவனே எல்லா உருவமாகவும் ஆகிறான் என விஸ்தாரமாகச் சொல்லிமுடிந்தது.

---

## 43. சரப உபநிஷத் விவரணம்.

ப்ரம்ஹாவை பைப்பலாதர் கேட்டது. மூவருள் யார்ச்ரேஷ்டர்? அதற்கு, பதில், உண்டாக்கிறது, இருக்கிறது, அழிக்கிறது, முதலிய ஐந்து கார்யங்கள் எல்லாம் பரமேச்வரனே செய்விக்கிறார். அவரே

உயர்வு உள்ளவர். முன்பு சரபபக்ஷி உருவமடைந்து, நரசிம்ஹத்தை அடக்கி, ஆண்டவர். அப்பொழுது பெரிய உருவமடைந்து, விஷ்ணுவுடன் யுத்தம் செய்து, அடக்கினர். அப்பொழுது ஈசனை ஸ்தோத்தரித்தனர். அவர்தான் உயர்வு உள்ளவர். அப்பொழுது தேவர்களுக்கு ஏற்பட்ட ஸர்வ கஷ்டங்களையும், நிவர்த்தி செய்தார். அவர் ஒருவர்தான் உலகிலேயே பெரியவர். அவர்தான் உயர்வு உள்ளவர் அவரையே உபாஸிக்க வேணும், என விஸ்தாரமாகச் சொல்லி உபநிஷத் முடித்தது.

---

## 44. த்ரிபுராதாபினீ உபநிஷத் விவரணம்.

ஒரு ஸமயம் நடுவில் ப்ரஜாபதியும், வைஷ்ணவரும், லயத்திற்குக் காரணரும், உள்ள ரூபத்தை த்ரிபுரை என்ற பெயருடைய பகவதீதன் சக்திகளுடன், பூ:, புவ:, ஸுவ:, என்ற மூன்று ஸ்வர்க்க பூபாதாளங்கள் த்ரிபுரங்கள் என ஈசன் மாயா உருவ ஹ்ரீம்கார ஹ்ருல்லேகையடைந்து, பகதீத்ரிகூட அவஸானத்தில் நிலயம், விலயம், என்ற பட்டணத்தில் கோரமாக வ்யாபித்து, இருந்தாள். அவள்தான் இந்த பகவதீ த்ரிபுரை, எனப் படிக்கப்படுகிறது.

தேவி ஸூத்ரங்களைச் சொன்ன மாத்ரத்திலேயே க்ஷேமம், ஹாதி, பதினேரு அக்ஷரங்கள், மஹா மந்த்ரங்களுடையது. முத்ராதி ஆகாரங்கள். பரப்ரம்ஹத்தின் மலர்ச்சிக்கு உடையது. இங்கு சக்தி பீஜமுடையது. அவ்விடத்தில், லோகம், வேதம், சாஸ்த்ரம், புராணம், தருமம், சிகித்ஸை, ஜ்யோதிஷம், இவை சிவசக்தி லோகத்தினல் சேர்ந்து படிக்கப்படுகிறது: மஹாரூபமுடைய குண்டலினீ, முதலான அக்ஷர பீஜமுடையது. தேவியின் லக்ஷணங்கள் இதுவே என இவ்வக்ஷரங்களை யார் உபாஸிக்கிருர்களோ? அவர்கள் சக்தியாகவே ஆகிருர்கள். ஜீவாத்மா, பரமாத்மா, ஐக்யத்திற்கு காரண உருவமுடைய இதை உபாஸித்து அகஸ்த்யர், அம்பிகையின் க்ருபைக்கு பாத்ரமானர். இதை உபாஸிக்கும்படி பரமேச்வரனும் உபதேசித்திருக்கிருர். ஒன்பது ஆகாரமுடைய சக்ரவித்யையை முன்னெரு ஸமயம் தேவர்களுக்குக் கேட்டபொழுது ஈசன் சொல்லியது இது உள் கலை. களங்கமின்றி யோக சிகித்ஸையையும், அணிமாதி ஸித்திகளையும், கொடுக்கும் ஸர்வ இஷ்டங்களையும் பூர்த்தி செய்யும். வீர ஸௌக்யங்களையும் கொடுக்கும். அது எல்லா மங்களம் ஸௌக்யம், ஸர்வார்த்தங்களையும் விளக்கும்.

எல்லாவற்றையும் காப்பாற்றுதல் செய்யும். ஸர்வ ரோகங்களையும் நிலக்கும். ஸர்வ ஸித்தியையும் அளிக்கும். ஸர்வ அனர்த்தங்களையும் நிலக்கும். ஸர்வ ரஹஸ்யமான மங்களத்திற்கு த்ரிபுரஸுந்தரியின் சக்ரமுடையது. இப்பேர்ப்பட்ட மந்த்ரானுஷ்டான தேவதையை விதிப்ரகாரம் யார் பூஜிக்கிறார்களோ? அவர்கள் அதை அடைகிறார்கள். இது துரியாவஸ்தையுடையது. அம்பிகையின் சக்ரத்தை பக்தியோடு, விதியோடு, ஒருவிதமாக எவன் ஏகாக்ஷரப்ரம்ஹம் என்று அறிகிறானோ? அவன் துர்ய பதம் அடைகிறான். இதன் ப்ரயோகங்களையும் லக்ஷணங்களையும், எவன் அறிகிறானோ? அவன் அதையே அடைகிறான் என்பது திண்ணம். என விரிவாக உபநிஷத் கூறி முடித்தது.

---

## 45. தேவி உபநிஷத் விவரணம்.

ஒரு ஸமயம் எல்லா தேவர்களும் சேர்ந்து அம்பிகையைப் பார்த்து நீ யார்? எனக் கேட்டனர். பதில், என்னைக் காட்டிலும் உலகத்தில் ஒன்றுமில்லை எனச் சொல்லி என்னையே உபாஸிக்கவேணும் என்றும், சொன்னாள். இதைக்கேட்ட தேவர்கள், அந்தத் தேவியை உபாஸனை செய்தனர். துராசாரங்களை ஒழிப்பதினால், துர்க்கை என்ற பெயர் அடைந்தாள். இவ்விதம் மூன்று காலங்களிலும் அம்பிகையை மந்த்ரோச்சாடன புரஸ்வரம் எவன் த்யானம் செய்கிறானோ? அவன் அதை அடைகிறான். மஹா கஷ்டங்கள் நிவர்த்தியாகின்றன. தேவீ ஸன்னிதியில் ப்ராண ப்ரதிஷ்டை செய்து புரட்டாசிமாத செவ்வாய்க் கிழமைகளில் மஹாதேவியை பூஜை செய்கிறவன், அவள் மயமாகிறான். மஹா பாபங்களையும் தாண்டுகிறான். இவ்விதம் விஸ்தாரமாகச்சொல்லி உபநிஷத் முடித்தது.

---

## 46. பாவனா உபநிஷத் விவரணம்.

பரம்காரணபூதமான சக்தியே பரமகுரு. நவார்ணவ நவசக்தி உருவம். சக்ரம் இது. ஸமஸ்த சக்திகளுக்கும் ஸமஸ்த உருவ காமேச்வர சக்தியுடைய பூர்ண சக்ர சக்தி. இப்படியுள்ள சக்தியின் பரிபூர்ண த்யானத்தை எவன் ஒருவன், மூன்று முகூர்த்தம் செய்கிறானோ? அதே பாவனா பரனாகி ஜீவன் முக்தித் தன்மை அடைகிறான். அவனுக்கு

பரதேவதை ஆத்மைக்ய ஸித்தியின் தன்மையைக் கொடுக்கிறாள். நினைத்த கார்யங்களை கஷ்டமில்லாமல் செய்து வைக்கிறாள். அவளே ஸிவயோகி எனவும், சொல்லப்படுகிறது. என விரிவாகச் சொல்லி உபநிஷத் முடிக்கது.

---

## 47. பஹ்வ்ருச உபநிஷத் விவரணம்.

ஒரு ஸமயம் தேவி ஒருவள்தான் இருந்தாள், அவளாலேயே இந்த ஜகத் முழுமையும், ஸ்ருஷ்டிக்கப்பட்டது. அவளே காமகலை, ச்ருங்காரகலை, எனவே அறியப்படுகிறது. அவளே ப்ரம்ஹா முதலிய வர்களை உண்டாக்குகிறாள். அவளே நான் ஆகிறேன் என தத்வமஸி என்ற வாக்யங்களினால் ஸ்ரீவித்யை முதலான உபாஸனைகளால் உபாஸித்து, அம்பிகை உருவமாகி, ப்ரம்ஹானந்த கலையில் இருக்கிறாள் எனச் சுருக்கமாகச் சொல்லி உபநிஷத் முடிக்கது.

---

## 48. ஸரஸ்வதீ ரஹஸ்ய உபநிஷத் விவரணம்.

ரிஷிகள் கூட்டமாகச் சேர்ந்து ஆச்வலாயனரை வணக்கத்துடன் கேட்டனர். எந்த உபாயத்தினால் தத்வார்த்த ஜ்ஞானமடைய முடியும்? அந்த தத்வார்த்தத்தைச் சொல்லும் என்றதும், பரமேச்வரியை ஜபம் செய்து ஸித்தி அடையுங்கள் அங்கந்யாஸ உருவமுள்ள தேவதை ஆத்ம வித்யா ஸாதனமுடையவள் அதை உபாஸித்து, ஹ்ருதயத்தில் த்யானம் செய்யவேணும். அப்படி செய்வானாகில், ஸர்வ ஸந்தேஹங் களும் நிவர்த்தியாகி ஸரஸ்வதீ ரஹஸ்யம் அறிகிறான். உடனே அவனுக்கு முக்தி அளிக்கப்படுகிறது என விரிவாகச் சொல்லி உபநிஷத் முடிக்கது.

---

## 49. ஸீதோ உபநிஷத் விவரணம்.

தேவர்கள் ஒருங்கு சேர்ந்து ப்ரஜாபதியைக் கேட்டனர். ஸீதை என்றால் என்ன உருவம்? அதற்கு பதில், மூல ப்ரக்ருதியும், ப்ரணவ ப்ரக்ருதியும், இந்த உலகம் பூராவும், அவள் உருவமாக அடைந்துள்ளது,

இச்சை, க்ரியை, ஸாக்ஷாத் என்ற மூன்று சக்தி உருவமாக அவள் காண்கிருள். இம்மூன்று சக்திகளும் 21 பேதங்கள் அடைந்து ப்ரம்ஹ கதியின் விவரணத்தை எண்பிக்கிறது. ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயம், என்ற இம்மூன்றிலும் அவள் ஒருவளே ப்ரஸன்னமடைந்து காண்பிக்கிருள்.

வீரசக்திக்கு நான்கு கைகள் அபயம், வரம் கொடுக்கும். தாமரையை தரித்தும், கிரீட ஆபரணங்களுடன், ஸர்வ தேவர்களுடன், சேர்ந்து கல்பவ்ருக்ஷ அடியில் ரத்ன இடங்களில் நிறைந்த, அமிர்த மடைந்து, நான்கு யானை தலைகளில் வைத்ததை அபிஷேகம் செய்து, ஸர்வ தேவ தேவதைகள் ப்ரம்ஹாதிகள் இவர்களால் ஸ்தோத்தரிக்க நமஸ்கரிக்கப்படும், அணிமாதி அஷ்டஸித்திகளுடன், சூழ்ந்து நேரில் காமதேனுவினுல் ஸ்தோத்தரிக்கப்பட்டு, ஜயா முதலிய அப்ஸர ஸ்த்ரீகள் வேலை செய்கிறவர்களாக, ஸூர்ய சந்த்ரர்களாகிய தீபம் ப்ரகாசிக்க தும்புரு, நாரதர்கள், கானம் செய்ய, பூர்ணமா, அமாவாஸ்யா இருவர் குடைபோல் ப்ரகாசிக்க, சாமரம் முதலியன, ஸ்வாஹா, ஸ்வதா, இவர்களால். விசிரி வீச ப்ருகு முதலிய புண்ய புருஷர்களால் பூஜிக்கப்படுப வளாய், தேவி திவ்ய ஸிம்ஹாஸனத்தில் ஏறி, பத்மாஸனத்தில் இருந்து கார்ய காரணங்களைச் செய்பவள்போல், லக்ஷ்மீ தேவருக்கு தனி வீடு, கல்பனை, அலங்காரம், இவைபோல் இருந்து, ப்ரஸன்ன முகமடைந்து ஸர்வ தேவதைகளால் பூஜிக்கப்படுகிற வீரலக்ஷ்மீ என்று அவளை நன்கு அறியவேணும், என்ற ஸ்தோத்ரத்தை முடிவாகச் சொல்லி, அழகிய ஸீதையே வீரலக்ஷ்மி என பெயர் அடைகிருள் என விரிவாகச் சொல்லி உபநிஷத் முடித்தது.

———

## 50. ஸௌபாக்ய லக்ஷ்மி உபநிஷத் விவரணம்.

நாராயணனை தேவர்கள் அடைந்து, ஸௌபாக்ய லக்ஷ்மி வித்யை எங்களுக்குச் சொல்லுங்கள் எனக் கேட்டனர், அதிற்கு பதில், ஈச்வரி உருவத்தை ஸ்ரீ ஸூக்தம் முதலிய மந்த்ரந்யாஸங்களுடன் ஸ்தோத்தரித்து, எவன் பார்க்கிருனே? 16. ஆயிரம் ஹோமம், முதலியன செய்கிருனே? யோகங்கள் செய்து, சின்முத்திரை செய்து, எவன் அநுஷ்டிக்கிருனே? அவன் அவளை அடைகிருன். ஆதாரம், ஸ்வாதிஷ்டானம், நாபி, ஹ்ருதயம், கண்டம், தாலு, புருவம், ப்ரம்ஹரந்த்ரம், முதலிய ஒன்பது சக்ரங்களில் ஏறிச் செய்வானுகில், இச்சாசக்தி ஸாதன

மடையப்படுகிறது. இதை அநுஷ்டிப்பதினுல் அவனுக்கு ஸகல, தன, தான்ய, ஸத்புத்ர, களத்ர, குதிரை, பூமி, யானே, பசு, எருமை பட்ட மஹிஷித் தன்மை, வேலேக்காரர்கள் வேலேகள் செய்யும் தன்மை ஜ்ஞானம், முதலியன உண்டாகிறது. அவன் திரும்பி கர்ப்பவாஸமடைகிருனில்லே. என விரிவாகச் சொல்லி உபநிஷத் முடித்தது.

———

## 51. அத்வய தாரக உபநிஷத் விவரணம்.

சம, தமாதி, ஆறு குணமுடைய இந்த்ரிய மடக்கும் யதிக்கு இது சொல்லப்படுகிறது. நான் சித்ஸ்வரூபனுகிறேன். என அடிக்கடி பாவனே செய்து நன்ருக விழித்த கண்ணுடையவனுகி, உள் பார்வை அடைந்து, புருவத்திற்கும், ஹ்ருதயத்திற்கும், நடுவில் ப்ரம்ஹ ஸ்வரூபத்தை பார்க்கிறவனுக ஆகிறேன். ஜீவன், ஈச்வரன், என்று வேறுபாடு தன்மை விலகி, கர்ப்ப, ஜனன, மரணம், முதலிய ஸம்ஸார சக்ரத்தினின்று விடுபட்டு, ப்ரம்ஹமே ஆகிறேன் என, தேஹமத்தியில் ப்ரம்ஹ நாம ஸுஷும்னே, ஸூர்ய உருவமாகி, பூர்ண சந்த்ர ப்ரகாசத்துடன் காண்கிறது. அது மூலாதாரம் முதல் ப்ரம்ஹரந்த்ரம் வரை செல்லுகிறதாய்க் காண்கிறது. அதன் மத்தியில் மின்னல் கொடிக்கு ஸமான காந்தியடைந்து, தாமரைத் தண்டு நூல்போல் ஸூக்ஷ்ம சரீரமுடைய குண்டலினீ, என்ற ப்ரஸித்தியுடையது ஒன்று இருக்கிறது. அதைப் பார்த்து மனதினுலேயே மநுஷ்யன் ஸர்வ பாப விநாச மோக்ஷமடையும் தன்மை பெறுகிருன். நெற்றி மேல், கீழ், பாகம் வரை எப்பொழுதும் தேஜஸ் தாரக உருவம் ப்ரகாசித்ததைப் பார்ப்பானேயாகில், ஸித்தமடைகிறது. ஆள்காட்டி விரல மத்தியில் விழித்த காது பாகம் வரை, அவ்விடம் பூத்கார சப்தம் உண்டாகிறது அவ்விடத்தில் இருக்கிற மத்தியில், கண் மத்ய மடைந்த நீலஜ்யோதியில் ஸ்தலம் பார்த்து, உள்பார்வையில் குறைவில்லா ஸுகம் அடைகிருன். இவ்விதம் ஹ்ருதயத்தில் அதையே பார்க்கிருன். இவ்விதம் உன் லக்ஷ்ய லக்ஷணம், மோக்ஷமடைபவர்களால் உபாஸிக்கத்தகுந்தது.

குருவின் நடத்தையும், லக்ஷணங்களேயும், தீர்க்கமாக ஆலோசித்தே சிஷ்யனுகக் கொள்ளவேணும். கொண்ட சிஷ்யனும், அதுபடி நடந்து கொண்டு வழி தேடவேணுமென்பதே சாஸ்த்ர வரம்பு. அதையே அநேக விதமாக அஜ்ஞானிகளுக்கு ஞானம் பிறக்க உத்தேசித்து அழகிய முறையில் சொல்லியது.

முக்ய லக்ஷணம் என இதையே அத்வைத ரூபமாக அடைந்து ஸம்ஸார பந்தத்தினின்று மோக்ஷமடையும் தன்மை என விஸ்தாரமாக உபநிஷத் சொல்லி முடித்தது.

---

## 52. அம்ருதநாத உபநிஷத் விவரணம்.

சாஸ்த்ரங்களை அத்யயனம் செய்து, மேதாவி மேலும் அப்யஸித்து, பரப்ரம்ஹமறிந்துள்ளவனுக்கு, பிசாசு விடுவதுபோல் ஸம்ஸாரபந்தமும் விடுதல், அடைதல் லக்ஷணம். ஓங்காரம் என்ற ரதமேறி, விஷ்ணுவை ஸாரதியாக அடைந்து. ப்ரம்ஹலோக பதம் தேடுபவனாகி, சிவனை ஆராதனை செய்வதில் ஒரே மனமுடையவனாகி ரதத்தில் செல்லவேணும். எவ்வளவு ரதமார்க்கம் உள்ளதோ? அதுவரை ரதம் விட்டுப் போகவேணும். அவனே அடைகிறான். அவ்விதம் போகிறவன். ஸூக்ஷ்மபதம் அடைகிறான். அஷ்டாங்கம் செய்து அவனே அடைகிறான் பர்வத கற்கள் எப்படிப் பொடிகளாகிப் பறக்கிறதோ? அவ்விதமே இந்த்ரிய தோஷங்கள் தஹிக்கப்படுகின்றன. ப்ராணாயாமபுரஸ்ஸரம், ரேசக, பூரக, கும்பங்கள், செய்து அதை அடையவேணும்.

காமக்ரோதங்களை அடக்கி, இந்த்ரிய தோஷமறிந்து அசையாமல் இருந்து, எவன் அநுஷ்டிக்கிறானோ? அவனே பெறுகிறான். அவ்விதமே இருந்து, நாதத்தை லயப்படுத்தி, பார்ப்பானேயாகில், அவனே ப்ரம்ஹலோகமடைகிறான். அவன் திரும்புகிறானில்லை என ப்ராணாயாம லக்ஷணங்களையும் உபதேசித்து, அடைய வழியையும் தேட விஸ்தாரமாகச் சொல்லி, உபநிஷத் முடித்தது.

---

## 53. அம்ருத பிந்து உபநிஷத் விவரணம்.

மனம் இருவிதமுடையது. சுத்தம், அசுத்தம் என இருவகைப் படும். அசுத்தம் காமம், சுத்தம் காமமின்மை, மனதுதான் பந்த மோக்ஷங்களுக்கு முக்ய காரணம். பந்தம் விஷயஸுகம். முக்தி விஷயமில்லாத் தன்மை எனச் சொல்லப்படுகிறது. விஷயமின்றி மனமிருத்தலே முக்திக்கு ஹேது. மோக்ஷமடைய, மனதை அடக்கவேணும். அப்பொழுதுதான் ஜ்ஞானம் உண்டாகும். ஆத்மா ஒன்றே என

அறிகிறவன், ஜாக்ரத், ஸ்வப்ன, ஸுஷுப்திகளினின்று அறிவானுகில், அவனுக்கு மறுபடி ஜன்மாவே கிடையாது. ஒரு ஆத்மா உலகம் பூரா வும் வ்யாபத்துள்ளது. ஆதுவே அநேக உருவமாக ப்ரகாசிக்கிறது. ஜகத்தில் அநேக சந்த்ரன் தோன்றுகிறதுபோல், அநேகம் ஆத்மாவில் இருக்கிறது. சப்தப்ரம்ஹம், பரப்ருப்ஹம், இரண்டு. சப்தப்ரம்ஹத் தில் இருப்பவன் பரப்ரப்ஹமாகிருன். இதை அறிந்த மேதாவி ஜ்ஞான, ஜ்ஞான மறிகிருன். பசுமாடுகளுள் எப்படிப் பால் வெண்மையோ? அவ்விதமே ஜ்ஞானமறிந்தவனுள் ப்ரம்ஹஜ்ஞான மறிந்தவன் உயர்வு. பாலில் எப்படி நெய் இருக்கிறதோ? அதுபோல் ஈச்வரன் உள்ளே மறைந்து இருக்கிருன். இதை அடிக்கடி அறிந்து, பார்க்கவேணும். மனது என்ற மத்தால் அதைக் கடைந்து பார்த்தால், அதன் உருவம் ப்ரத்யக்ஷமாகத் தெரியும். ஜ்ஞானநேத்ரம் அடைந்து தான் தெரியவேணும். அதுதான் ஸர்வ அருள் சக்தி உள்ளது. அப்படி அறிந்தால் தான், ஸர்வ அநுக்ரஹமும் சேர்ந்து, நானே வாஸு தேவன் என அறியும் தன்மை உண்டாகும் என விரிவாகச் சொல்லி உபநிஷத் முடிந்தது.

---

## 54. க்ஷுரிகா உபநிஷத் விவரணம்.

யோகஸித்தி அடையச் சொல்லப்போகிறேன் என ஆரம்பித்து, அதை, தானே அடைந்தார். மறுபடி ஜன்மா அடைகிறதில்லை. என் பதையும் உபதேசித்தார். அது வேத தத்வார்த்த உருவம் என்று இவ்விதம் ப்ரம்ஹாவினுல் சொல்லப்பட்டது. ஒருவரும் இல்லாத ப்ரதேசத்தை அடைந்து, ஆமைபோல் சரீரத்தை அடக்கி, மனதை நிலை நிறுத்தி, 12 மாத்ரை உருவமாக ப்ரணவத்தை அடிக்கடி எவன் ஒருவன் த்யானம் செய்கிருனே? அவன் அதை அடைகிருன். ப்ரா ணனை அடக்கி ப்ராணுயாமம் செய்கிறவனே; அதைப் பெறுகிருன்.

ஸுஷும்னை, இடை, பிங்களை, இவை யோகத்தினுல்தான் அது ஸித்தி பெறும். 32 அவயவங்களிலுமுள்ள நாடிகளிலுமுள்ள நாடிகள், அதன் பாவனை அடைந்து, அதினுல் அதைப் பெறும்தன்மை உண்டாக் கும். அவன் பாசங்களை அறுத்து, ஜீவ உருவம் நீக்கி, ஸம்ஸாரம் அறுத்து, தாரணம் அடைகிருன். அநுபூதி ஸ்மயத்தில், தீபம் எப்படி எறிகிறதோ? அதேவிதம் அவனது கர்ம பலங்கள் எறிக்கப்பட்டு,

ஸூக்ஷ்ம உருவம் அடைகிறது. அதுவே லயம் அடையும் தன்மை. ஸர்வ கர்மாக்களேயும் ஒழித்து, அவன் யோகியே ஆகிருன். ப்ராணுயாமம் கூர்மையாக செய்யப்பட்டு, மாத்ரை த்யானங்கள், தாரணங்கள், இவை அறிந்த யோகவித்து, வைராக்யம் என்ற கத்தியால் அஜ்ஞானத்தை அறுத்து விடுவாணுகில், வேருென்றும் அவன் அடைகிருனில்லே. இது உண்மை. அதன் விவரமறிந்து எவன் அப்யஸிக்கிருனே? அவனே அடையும் தன்மை என விரிவாகச் சொல்லி உபநிஷத் முடித்தது.

---

## 55. தேஜோபிந்து உபநிஷத் விவரணம்.

இது புத்திமான்களால் நினைத்து அறியத்தகுந்தது. பொருத்த விஷய லக்ஷணமுடையது. ஆஹார நியமத்திஞல் இந்த்ரிய நிக்ரஹம் செய்து, உள்ளவன் முயற்சிக்கே இது எற்பட்டது. ஸோமரூப கலே என்பது இதன் உருவம். விஷ்ணு ரூபமாக அடையும் தன்மை உள்ள பதம். என நினேக்கவேண்டியது யமாதிகளுடைய நியமம் ஒவ்வொன்றையும் எட்டு விதமாகச் சொல்லி, உபதேசித்துள்ள விஷயம். எல்லாம் அகண்ட ஏகரஸம் என உலகத்திலுள்ள எல்லாவற்றையும் காண்பித்துக் கூறிய விஷயம். எல்லாம் சின்மாத்ரை எனவும், விஸ்தாரமாகக் கூறி உள்ளது. எல்லாம் நானே ஆகிறேன் எனவும், உருவ ஸாக்ஷாத்காரத்தையும், விஸ்தரித்துக் கூறியது. நான் ப்ரம்ஹமாகிறேன். நீதத்வமறிகிருய்! அதுவே நான் என இவ்வித ரூபபாவஞ ரூபத்தை நன்கு விளக்கிக் கூறி உள்ளது. இது ரொம்பவும் உயர்ந்த உருவம். மற்றவைகளேத் தள்ளி. இதை ஒன்றையே. த்யானம் செய்து, பெறலாம் என உபதேசித்தது. அம்மாதிரி செய்வாணுகில், அவன் ப்ரம்ஹமாகவே ஆகிருன் எனக்கூறி உபநிஷத் முடித்தது.

---

## 56. த்ரிசிகி ப்ராம்ஹண உபநிஷத் விவரணம்.

த்ரிசிகி ப்ராம்ஹணன் ஒருஸமயம் ஸூர்ய லோகம் சென்ருன். அங்கு சென்று ஸூர்யனேக் கண்டு, ப்ராணன், தேஹம், காரணன், ஆத்மா. இவைகளது தன்மை, யாது? எனக் கேட்டான். உலகம் பூராவும் இவனே ஒன்றுள்ளது என பதில் சொன்னர். இம்மாதிரி

உள்ளவன் தானே யோக சக்தி அறிய இச்சை அடைந்து அவன் செய்வானாகில், அவனே ப்ரம்ஹமாகிறேன் என நினைக்க ஹேது ஆகிறான். இது உண்மை எனச்சொல்லி விஸ்தாரமாக உபநிஷத் முடிக்கது.

---

## 57. தர்சன உபநிஷத் விவரணம்.

தத்தாத்ரேயர் மஹா யோகி. யோக ஸாம்ராஜ்ய தீக்ஷை உடையவர். மஹாவிஷ்ணு உருவமுடையவர். அவரது சிஷ்யர் முநிச்ரேஷ்டர். ஸாங்க்ருதி என்பவர் பரம பக்திமான். ஏகாந்தத்தில் விநயத்துடன் குருவைக் கேட்டார். எனக்கு யோக சாஸ்த்ரத்தின் அஷ்டாங்கங்களைச் சொல்லும்! எதினால் உடனே ஜீவன் முக்தி அடையுமோ? அதைச் சொல்லும் என்றதும், சொல்ல ஆரம்பித்தார். வேதோக்த ப்ரகாரமின்றி இது ஸித்திக்காது. வேத ஜ்ஞானத்தினாலேதான் மோக்ஷம். இல்லாவிட்டால் ஸம்ஸார பந்தத்தினின்று மோக்ஷமில்லை. உள் உள்ள நாடிகளின் லயனை அடைந்து, அடக்கி ஆளும் சக்தி பெற்று, எவன் போகிறானோ? அவனே பெறும் தன்மை. ஆத்மாவே ஈச்வரன். ஆத்மாவே தீர்த்தம். இதைவிட்டு எவன் ஒருவன் சென்றாலும், முக்தி கிடைக்காது. ஏனெனில், கையில் உள்ள அம்ருதத்தை விட்டு, வெளியில் கிடைக்கும் ஹேதுவை அடைய பலன் போல் ஆகிறான். இப்படி யமாதிகளை ஒவ்வொன்றையும் நினைத்தனர். எவன் அப்யஸிக்கிறானோ? அவனே அதைப் பெறுகிறான். எனச்சொல்லியதை ஸாங்க்ருதி கேட்டு, பயமில்லாமல் ஸுகத்தன்மையும் அடைந்தார் எனச் சொல்லி விரிவாக உபநிஷத் முடிக்கது.

---

## 58. த்யானபிந்து உபநிஷத் விவரணம்.

உலகத்திலுள்ள ஸர்வ லக்ஷணங்களையும் ஏகாகார த்யானமாக எவன் ஒருவன் த்யானம் செய்கிறானோ? அவன் ஸாக்ஷாத்கார லக்ஷண அநுபவமடைகிறான். அதை இவ்வுபநிஷத் மூலமாக மூலாதாராதி சக்ரம் முதல், ப்ரம்ஹரந்த்ரம்வரை உள்ள ஆறு சக்ர த்யானம் செய்ய ப்ராணாயாமம் முதலியன செய்பவனாகி, த்யானத்தினால் தான், நாதம், பிந்து இரண்டும் ப்ரதிபலிக்கிறது என்ற உருவமடைகிறான். அதை அவன் அடையும் மோக்ஷ விவரணத்தை நன்கு போதிக்கிறதாக இவ்

வுபநிஷத் விளக்குகிறது. அதை அடைவானுகில், அவன் ஸர்வ ஆனந்த ஸ்வரூபனுகிருன்என அவனுடைய லக்ஷணத்தை விவரிக்கிறது. இதுவே மோக்ஷ உபாயம். ஆத்ம தர்சன உபாயம். கைவல்யபத மடைய இதுதான் வழி, என அவனுக்கு விஸ்தாரமாகக் குறிப்புகளைச் சொல்லி உபநிஷத் முடித்தது.

---

## 59. நாதபிந்து உபநிஷத் விவரணம்.

ஸர்வ சிந்தைகளையும் விட்டு, எவனும் நாதத்தையே ஸதா அநுஸந்தானம் செய்யவேணும். உடனே சுத்த லயமடையும். தேன் சாப்பிட்ட வண்டு வேறு ஒன்றையும் எப்படி அபேக்ஷிக்கிறதில்லையோ? அம்மாதிரியே, நாதலயம் அடைந்தவன் ஒரு விஷயத்தையும், அறிகிருனில்லை. அவ்விதமே லய மடைந்து, அவன் ப்ரம்ஹ தாரக மந்த்ர உபதேச பலத்தினுல் ப்ரம்ஹலோக மடைகிருன். அதுபற்றி ஸந்தேஹமில்லை. என விரிவாகக்கூறி உபநிஷத் முடித்தது.

---

## 60. பாசுபத ப்ரம்ஹ உபநிஷத் விவரணம்.

ப்ரம்ஹா, ப்ரஜாபதியை ஸ்ருஷ்டிக்க ஈசன் ஆஜ்ஞையால் அதை செய்தபிறகு உலக நிலைமையைக் கேட்க ஆசைப்படுகையில், ப்ரம்ஹம் சொல்லியது என இதில் ஆரம்பமாகிறது. உலகத்திலுள்ள ஸர்வமும் என் உருவமே தவிர, வேறு ஒன்றுமில்லை எனவும் அதையே ஸேவிக்கவும், என்னையே அடையவும், வழிகளை வகையாக சொல்லி என்னைத் தவிர வேறு ஒன்றுமில்லை; ஸர்வ மந்த்ர ஸ்வரூபமும் நானே ஆகிறேன் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோதானம், அநுக்ரஹம், எல்லாம் நானே ஆகிறேன். யஜ்ஞோபவீத ரூபமாக நான் இருந்து 96 தத்வங்களுக்கும் அதிபனுகவே அறிகிறேன என சொல்லி மேற்கொண்டு பூணல் தத்வங்களையும் விரிவாகத் தெளிவுரத் தெரிவித்தது.

ப்ரம்ஹசர்யம், தபஸ், ஸாதனம், இவைகளையும் சொல்லிற்று, இவைகள் ப்ரம்ஹ வித்துக்களுக்கு நன்கு புலப்படும் என விஸ்தரித்துக் கூறி உபநிஷத் முடித்தது.

---

## 61. ப்ரம்ஹவித்யை உபநிஷத் விவரணம்.

ப்ரம்ஹத்தின் விஸ்தரித்த ப்ரமாணமுடைய ஜ்ஞான ஸாதன லக்ஷணத்தை ஜ்ஞான லக்ஷணமாக அதை விவரித்து, நாடி தந்த்ர நிரூபணங்களையும் தெரிவித்து, அதன் ஸ்வரூபத்தையும், அடக்கி ஆளும் சக்தியையும், சொல்லி அதின் ஸௌகர்யத்தையும், அதன் காரணத்தையும், சொல்லி ஈச்வர ஸாக்ஷாத்காரத்தினால் நானே எல்லாம் ஆகிறேன் என்ற பாவனை தனக்கு வ நம்படி சொல்லி, கருத்தினால் அநுஷ்டிக்கும் தர்மத்தையும் உபதேசித்து, அதன் க்ஷேமத்தினால் ப்ரம்ஹலோக ப்ராப்தியும் தேடிப்பார்த்து, அறியும் சக்தியையும், சொல்லியது. அடைந்தவன் திரும்புகிறதில்லை எனவும் கூறி உபநிஷத் முடித்தது.

---

## 62. மண்டல ப்ராம்ஹண உபநிஷத் விவரணம்.

யாஜ்ஞவல்க்யமுநி ஒரு ஸமயம் ஸூர்யலோக மடைந்தார். அங்கு ஸூர்யனை வணங்கி ஆத்மதத்வம் கேட்டார். ஜ்ஞானத்துடன் கூடிய அஷ்டாங்க யோகம் சொல்லியதைக் கேட்டார். எல்லாம் விட்டு வன மடைந்து, ஆஸனங்களைச் செய்து கொண்டு, அங்கேயே ஆஹார நியமத்துடன் இருந்து, அநுஷ்டித்தால் அது ஸித்திக்க நேரம் என்றார். அதுதான் முக்ய தர்மம். தேஹத்திலுள்ள காமக்ரோதங்களை அடக்கி, அதை அடைதலே முக்யம், என உபதேசித்தார். இவ்விதம் மஹானந்தம் அநுபவிக்கிறவன் சாம்பவியாக ஆகிறான். ஸம்ஸார தாரணத்தை முன்னிட்டு குருவை அடைந்து, செய்பவனே அதை அடைகிறான். இவ்விதம் வெகுகாலம் எவன் செய்கிறானோ? அவனே அதைப்பெறுகிறான். அவனது பித்ருக்களை கரையேற்றுபவனாகிறான் என விஸ்தாரமாகச் சொல்லி உபநிஷத் முடித்தது.

---

## 63. மஹாவாக்ய உபநிஷத் விவரணம்.

இது பரமகுஹ்யமுள்ள விஷயம். ஸாத்விக முள்ளவனே இதை அறிய முயற்சிக்கவேணும். அவித்யையை அறுத்து வித்யை அடைந்து ஸாத்விகமே மூலப் பொருள் என அடைய உபாயம். நானே எல்லா

உருவமும் ஆகிறேன் என ஜ்ஞானமடைந்து, அதுவாகவே ஆகிறான் என தன்மையை உபநிஷத் சொல்லி முடித்தது.

---

## 64. யோககுண்டலி உபநிஷத் விவரணம்.

மநுஷ்யனுக்கு சித்தவாஸனை இருவிதம் காமிகம், யோகஜம், என்பது. முதலில் உள்ளதை ஜெபித்தால் உடனே, ஜயமடையவழி. சரீரத்திலுள்ள ஆறு சக்ரத்திலும் படிப்படியாக ஏறி, அப்யஸித்து வருவானானால், அவன் யோகஜ்ஞானபதம் ஏறி, விஸ்தரித்த ஸாதனமடையஹேது. .பலவிதமாக போதிக்கும் தத்வங்களைக் கூறி உள்ள விஷயம் இதில் தெரிவிக்கப்படுகிறது. அது வாஸனையால்தான் காரணமடையும். அதுதான் மேலுலகம் அடைவிக்கும் ஸ்தானம் என உணர்ந்து, அநுஷ்டித்தால் கிடைக்கும் என்பதை விஸ்தரித்து உபநிஷத் கூறி முடித்தது.

---

## 65. யோக சூடாமணி உபநிஷத் விவரணம்.

நாடீ சோதன மறியாதவன் யோகஜ்ஞானமடைய முடியாது. என விஸ்தாரமாகச் சொல்லும் உபநிஷத் இது. செய்யும் யோகிக்கு, லக்ஷணங்களை விஸ்தரித்துக்கூறி அவன் செய்யும் அஷ்டாங்கங்களையும், ப்ராணாயாமம் முதலியவைகளால் தான் அது கிடைக்கப்பெறும் எனவும் விஸ்தாரமாகச் சொல்லுகிறது. இதை அறிந்தவன் அநுஷ்டித்தால் அவனே அந்த நிலைபெறுகிறான் எனச்சொல்லி உபநிஷத் முடித்தது.

---

## 66. யோகதத்வ உபநிஷத் விவரணம்.

யோகிகளுக்கு ஹிதத்தைச் சொல்லும் உபநிஷத். ப்ரம்ஹன் ஒரு ஸமயம் விஷ்ணுவை ஆராதித்து, வழியுடன் தபஸ் செய்து, அஷ்டாங்க ஸாதனம் கேட்டது. பதில்; விஷ்ணு மாயாஜாலத்தில் ஊடாடும் ஜனங்களது மோஹமாயையை விலக்க முக்தி அடைய விஷயம் சொன்னார். காமக்ரோதங்களை அடக்கி, எவன் பரமாத்மாவைக்

காண இச்சிக்கிருனோ? அவனே அதைப் பெறுகிருன். நவத்வாரங்களை அடக்கி, எவன் இந்த ஸாதனம் செய்கிருனோ? அவன்தான் பெறுகிருன் எனக்கூறி விஸ்தாரமாக உபநிஷத் முடித்தது.

---

## 67. யோகசிகை உபநிஷத் விவரணம்.

ப்ரம்ஹன், ஈச்வரன், ஸம்வாத உருவமாக ஆரம்பம். மாயையினின்று எப்படிக் கடைத்தேற வழி உண்டாகும்? என்பதைக்குறித்து கேட்ட ப்ரம்ஹனுக்கு ஈச்வரன் பதில் அளித்தது. கேவலஜ்ஞானத்தினுலேதான், யோகஜ்ஞானம் ஸித்திக்கும். கலி கால ஆரம்பம் நீங்க, எவன் செய்கிருனோ? அவனே பெறுகிருன். இவ்விதம் மனதை நிலை நிறுத்தி, செய்பவனே அறிகிருன். அது அப்யாஸத்தினுலேதான், உண்டாகும். அப்பொழுது ஸம்ஸார ஸமுத்ரத்தைத் தாண்டஹேது ஆகிருன். அதுவே மோக்ஷ வழி, என விஸ்தாரமாசச் சொல்லி உபநிஷத் மூடித்தது.

---

## 68. வராஹ உபநிஷத் விவரணம்.

ரிபு என்ற முநி தேவமான வருஷம் பன்னிரண்டு வருஷம் தபஸ் செய்தார். அதன் முடிவில் வாராஹரூபி ஈச்வரன் ப்ரத்யக்ஷமாகி எழுந்திருந்து, வரத்தைக் கேள். தருகிறேன் என்ருர். அவன் எழுந்து அவரை நமஸ்கரித்து, சொன்னுன். காமக்ரோதமுடைய காமிகள் கேட்கும் விஷயத்தை, ஸ்வப்னத்திலும் நான் கேட்கமாட்டேன். ஸமஸ்தவேத, சாஸ்த்ர, இதிஹாஸ, புராணங்கள், ஸம்ஸ்த வித்யா ஜாலங்கள், அடைந்த ப்ரம்ஹாதிகள் எல்லோரும் உமது ரூபஜ்ஞானத்திலேயே முக்தி அடைகின்றனர். ஆகவே உமது ரூபமுடைய ப்ரம்ஹ வித்யையைச் சொல்லும், என்றதும், ஈசன் பதில் சொன்ஞர். அநேகர் அநேகவிதம் உபாஸிக்கிருர்கள், அவர்களுக்கு ஏற்ப பலங்கள் அடையப் படுகின்றன.

ஆகவே, யோகம்தான் மற்றவைகளுக்கு எல்லாம் உயர்வு. அதை நீ உபாஸித்தால் எல்லாம் கிடைக்க ஹேதுவாகும் என்ருர். பின்பு அதை அடைந்தான். ரிபுவை மறுஸமயம் நிதாகர் கேட்டார். அதைச் சொல்லி அவரும் அடைந்தார். இந்த பூமியில் எல்லாம் நான் தான்

உருவம் கொண்டவன் என என்னை எவன் உபாஸிக்கிறுனே? அவன் அதை அடைகிறுன். எனவராஹரூப ஈசன் சொல்லி முடித்தார் என்றதை உபநிஷத் விஸ்தாரமாகக் கூறி முடித்தது.

---

## 69. சாண்டில்ய உபநிஷத் விவரணம்.

அதர்வன் என்றவரை சாண்டில்யர் கேட்டது. ஆத்ம ஸாமம் எப்படி உண்டாகும்? எனக் கேட்டதிற்கு, பதில். அஷ்டாங்கம், ப்ராணுயாமம், இந்த்ரியநிக்ரஹம், ஆத்மஜ்ஞானம், இவைகளிஞலேதான் கிடைக்கும் எனச்சொல்லியது. இவ்விதம் வாமதேவர், சுகர், உபாஸித்து மேன்மை அடைந்து ஆத்மலோகமடைந்தனர். என விவரித்துக் கூறியது. இதன் தத்வமறிந்தவன் ஸர்வபாபங்களினின்று விடுபட்டு, மோக்ஷமடைகிறுன் எனக்கூறி உபநிஷத் முடித்தது.

---

## 70. ஹம்ஸ உபநிஷத் விவரணம்.

ஸனத் குமாரரை கௌதமர் கேட்டது என்ற விஷயத்துடன் ஆரம்பமாகிறது. போக மோக்ஷ ஸாதனமுடைய ஹம்ஸ, காயத்ரீ மந்த்ர உச்சாடன பலம் விரிவாக இதில் சொல்லியது. ஹம்ஸ பரமஹம்ஸ, நிர்ணயம், ஹம்ஸ காயத்ரீ த்யான லக்ஷணம், இதையும் விவரித்துக் கூறியது. இவ்வித த்யான யோகத்திஞல் ஸங்கல்ப த்யானம் அடைந்து, அதன் சக்தியை அடைகிறுன். அவனது லயம் அதில் ப்ரகாசிக்கிறது. என விவரித்துக்கூறி உபநிஷத் முடித்தது.

---

## 71. அக்ஷி உபநிஷத் விவரணம்.

ஸாங்க்ருதி, ஸூர்யயோகம் அடைந்தார். ஸூர்யனை நமஸ்கரித்து, கண் ஸம்பந்த வித்யையை உபதேசிக்க ஸதோத்தரித்தார். இதை அறிந்தவன், உலகத்தில் கண் வ்யாதி உண்டாகாதவன் ஆவன் என பதிலளித்தார். மறுபடி ப்ரம்ஹ வித்யையைக் கேட்டார். அதன் ஸாதனங்களையும் ஜாக்ரத், ஸ்வப்ன, ஸுஷுப்தி, ஸ்தான வைபவங்களையும், அழகாக அவனுக்கு உபதேசம் செய்தார். தானே ப்ரம்ஹமாக

ஆகிறேன் என எவன் எண்ணுகிருனே? அவனே அதை அறிகிருன். என உபதேசத்துடன் முடிக்கப்பட்டது. இவ்விதம் விஸ்தாரமாக உபநிஷத் சொல்லி முடித்தது.

---

## 72. அத்யாத்ம உபநிஷத் விவரணம்.

ஸ்வாநுபூத ஸாக்ஷாத்காரத்தினுல் எவன் ஹ்ருதயாத்மாவை அறிகிருனே? அவன் தான் புத்திமான். அவன்தான் ஆத்மஜ்ஞான மறிய எறியவனுகிருன். அதோடு நில்லாமல் உலகம் பூராவும் ப்ரம்ஹ ஆரோபணம்செய்து, அதுவாகவே ஆகிருன் என தத்வத்தை விஸ்தார மாகச்சொல்லி உபநிஷத் முடித்தது.

---

## 73. அன்னபூர்ண உபநிஷத் விவரணம்.

நிதாகர், ரிபுவை ஒருஸமயம் கேட்ட விஷயத்துடன், ஆரம்பம். ஆத்மதத்வம் சொல்லவேணும் எனக் கேட்கையில்; ப்ரம்ஹஸ்வரூப மோக்ஷ ஸம்பந்த ஸாம்ராஜ்யத்தைச் சொன்னுர். இதைக்கேட்ட மாத்ரத்திலேயே ஸர்வார்த்த ஸித்தியும் கிடைக்கும். முன்னுளில் அன்னம்வேணும் அது பூர்ணமாகவேணும் எனக்கேட்கையில், ஈச்வரன் வரமளித்து அநுக்ரஹித்தார். ஆத்மதத்வமடைய மனமுண்டாக வேணும். என எனக்கு உபதேசித்தார். உடனே நான் அதை அடைந்து, வித்யா, அவித்யா, தத்வார்த்தமறிந்து, அதன் ஜ்ஞானத் தையும் விசாரித்து, அறிந்து பரமவித்யை பதமடைய எவப்பட்டேன். நீயும் அம்மாதிரி அறிந்து ஸாக்ஷாத்காரமடைய ஹேதுவாகுக! என உபதேசித்தார் என விஸ்தாரமாக உபநிஷத்சொல்லி முடித்தது.

---

## 74. ஆத்மா உபநிஷத் விவரணம்.

அங்கிரஸ் முன்பு மூன்று விதமாக, ஆத்மா, அந்தராத்மா, பர மாத்மா, என அறிந்தார். ஆத்மா சுத்தமுள்ளது, இது மூன்றுதான் உலகத்தில் ஜீவப்ரம்ஹ ஐக்யம் செய்யக்காரணம் என எவன் அறிகி ருனே? அவனே பெறுகிருன் என விஸ்தாரமாகச் சொல்லி உப நிஷத் முடித்தது.

## 75. ஆத்மபோத உபநிஷத் விவரணம்.

ஓங்காரத்தின் மூன்று அக்ஷரங்களையும் விசாரித்து, எவன் சொல்லி உயிரை விடுகிறானோ? அவனே அதைப் பெறுகிறான். அவனுக்கு இவ்வுலகில் வேலை இல்லை. மேலுலகம் அடையும் தன்மை கிட்டும். இனிதுக்கம் நமக்கு இல்லை என அறிந்து, உபநிஷத் வித்யையுடன் ப்ரமஹபதமடையும் தன்மை ஏற்படுகிறது. என விஸ்தாரமாகக்கூறி உபநிஷத் முடித்தது.

---

## 76. ஏகாக்ஷர உபநிஷத் விவரணம்.

ஒரே அக்ஷர ரூப உபாஸனை ப்ரம்ஹத்தை உத்தேசித்து ஸர்வ ப்ரபஞ்சங்களையும் லக்ஷயம் செய்து எவன் உபாஸிக்கிறானோ? அவனே அதைப் பெறுகிறான் என உபநிஷத் கூறி முடித்தது.

---

## 77. கௌஷீதகி ப்ராம்ஹண உபநிஷத் விவரணம்.

சித்ரர் என்பவர் ஆருணியை யஜ்ஞம் செய்ய விஷயம் கேட்டார். அவர் புத்ரன் ச்வேத கேதுவை செய், என ஆஜ்ஞாபித்து சொன்னார். இந்த உலகம் அறிந்து மேல் உலகம்போக வழியைச்சொல் என்றதும், பதில், எனக்குத்தெரியாது. ஆசார்யரைக்கேள்! என்றதும், பிதாவை அழைத்துக்கேட்டார். எப்படி அறியமுடியும்? என்றதும், எனக்குத் தெரியாது. நீ ஸதஸில் கேட்டுத்தெரிந்துகொள், எனச்சொன்னார், இருவரும்போவோம் எனப் புறப்பட்டனர். ஸமித்தை கையிலுடையவர்களாய் உபதேசம் செய்யவேணும்! என சித்ரரை அடைந்தனர். என்னை அடைந்ததால் உங்களுக்குச் சொல்லுகிறேன். இந்த லோகத்திலிருந்து சந்த்ரலோகம் போகிறவர்கள் அங்குபோய் ஸ்வர்க்க ஸுக மடைகின்றனர். பின்பு அவர்கள் கீழே தள்ளப்பட்டு மழை உருவமாக வர்ஷித்து புழு பூச்சி முதலிய உருவங்களடைகின்றனர். புண்யமிருந்தால் புருஷனாகப் பிறக்கிறான். எவ்வளவு வித்யையோ? அவ்வளவு கர்மா. அது விஷயம்பற்றி நான் சொல்லுகிறேன் கேள். புருஷனிடமும் ரேதஸ் சோணிதமாக ஆகி, ப்ரஜையாகி இவர்கள் ஸத்கர்மானுஷ்டானம்செய்து, ப்ரம்ஹலோகமடைய ஏற்பாடு அடைந்ததும், அவனை ப்ரம்ஹா எனது யசஸ்ஸை காப்பாற்றியவன், விரஜா என்றதை

அடைந்தவன். இவனை ஜெயிக்க முடியாது, என அழைக்கிறார். அவனை அழைக்க, 15 அப்ஸரஸ்கள், ஓடி வருகின்றனர் 100 பேர் மாலையை கையில் உடையவர்களாய், 100 பேர் வாஸனைத்ரவியங்கள் கையில் உடையவர்களாய், 100 பேர் வாஸனை பொடிகளை உடையவர்களாய், 100 பேர் வஸ்த்ரமுடையவர்களாய், 100 பேர் ஆபரண முடையவர்களாய், அவனைப்ரம்ஹாலங்காரம் செய்வித்து அடைவிக்க ஏற்பாடு செய்ததை செய்கின்றனர்.

அந்த ப்ரம்ஹாலங்கார மடைந்த ப்ரம்ஹவித், வித்வான் ப்ரம்ஹாவையே அடைகிறான். அவர் வந்து அதிசயமாக அவனை ஆதரிக்கிறார். அந்த ப்ரம்ஹனைத் தவிர வேறு ஒன்றும் அவன் காண்கிறதில்லை. அவர்களது முன்னிலையில் அவன் ஒரு முஹூர்த்தம் இங்கு இருஎன ஆஜ்ஞாபிக்கப்பட்டதும், அவனை எல்லோரும் நன்கு பார்க்கின்றனர். அங்கு விரஜா நதியை மனதினாலேயே தாண்டுகிறான். புண்ய, பாபங்கள், சுத்தம் செய்யப்படுகிறது. அவனுக்குப்பிரியமுள்ள ஜ்ஞாதிகளும் புண்யமடைகின்றனர். பாபிகள் பாபமடைகின்றனர், என்பதை எண்பிக்கின்றது. ரதம் எப்படி வேகமாக இழுத்துச் செல்லப்படுகிறதோ? அதுபோல் அவன் இரவுபகல் ஸந்தோஷமாக நன்கு பார்க்கப்படுகிறான். இவ்விதம் புண்ய, பாபங்கள், அங்கு சுத்தம் செய்யப்படுகிறது. எல்லாவிடமும், இரண்டும் சேர்ந்து இருக்கிறது. அவனே ப்ரம்ஹ மறிந்தவன் எனப்ரம்ஹாவையே அடைகிறான்.

வருகிற அவன் கல்ப்பகவ்ருக்ஷமடைந்ததும் ப்ரம்ஹஸ்வனைபோல் ப்ரவேசிக்கசெய்கிறது. அவன் லஜ்ஜையுடன், அங்கு வருகிறான். அவனை ப்ரம்ஹா பார்க்க ப்ரவேசிக்கிறார். தடுக்க முடியாத அவனது ப்ரம்ஹதேஜஸ் அங்கு ஜ்வலிக்கிறது. அவன் வந்ததும் இந்த்ரன், ப்ரஜாபதி, இருவாசல் காவலாளர்கள், அவனை எதிர்கொண்டு அழைக்கின்றனர். வருகிற அவனிடம் ப்ரபுத்தன்மையுடைய ப்ரம்ஹ, யசஸ், ப்ரம்ஹதேஜஸ், ப்ரஜ்ஞை, இவைகள் நன்கு தெரியப்படுகிறது. அதிப்ரகாசமுடைய கட்டிலில் அந்தப்ராணன் அடைகிறது. அவனுக்கு நடந்தது, நடக்கப்படுகிறது; இரண்டும் கால்கள், லக்ஷ்மி, இளாதேவி, இருவரும் பின்கால்கள். ப்ருஹத் ரதந்த்ரம் என்பதாக அதைச் சொல்லுகிறார்கள். பத்ரை யஜ்ஞாயஜ்ஞ சீர்ஷண, ரிக், ஸாம இவை ப்ராசீனகானம். யஜுஸ் திரச்சீனம், ஸோமாம்சம், உபஸ்தரணம், உத்கீதம், பின்னுள்ள லக்ஷ்மி உபபர்ஹணம். அதில் ப்ரம்ஹா ஆனந்த

மாக வந்து உட்காருகிறார். இவ்விடத்தில் ஒரு காலினாலேயே முன்னால் ஏறுகிறான். அவனை ப்ரம்ஹா நீயார்? எனக்கேட்கிறார். அவனைக் குறித்துச் சொல்லுகிறார். எல்லாம் இந்த ஆகாசத்தினின்று உண்டானது என்று பதில் சொல்லுகிறார். இது தேஜோ பூதமான பூதத்தின் காரண ஆத்மா எதுவோ அதுவே நீ, நானும் அதுவே ஆகிறேன். நான்யார் தெரியுமா? எனக்கேட்கிறார். ஸத்யம் எனச் சொல்லவேணும்! அதுதான் ஸத்யம், தேவர்கள், புராணங்கள், எது வார்த்தையினால் சொல்லு கிறதோ? அதுவே உண்மை. இதுவரை இந்த ஸர்வ உலகமும் நீ காண்கிறாய்? என்பதாக இவனைச்சொல்லுகிறார். புருஷன் என்ற தன்மை எதனால் அடையப்படுகிறது எனில்; ப்ராணனினால் தான் என்பதே. எதினால் ஸ்த்ரீ நாமா, அது வார்த்தையினால் என்பதே. நபும்ஸகம் எதினால்? மனதினால். எதினால் வாஸனை? மூக்கினால்தான், உருவங்கள், எதினால்? கண்ணினால், எதினால் சப்தம்? காதினால் எதினால் அன்னரஸம்? நாக்கினால், எதினால் கர்மாக்கள்? கைகளினால், ஸுகதுக்கம் எதினால்? சரீரத்தினால். எதினால் ஆனந்தம்? ரதி, ப்ரஜைகள், உபஸ்தம் எதினால் செய்யப்படுகிறது? கால்களினால் எதினால் புத்தி? அறியத்தகுந்தது. இஷ்டங்கள் ப்ரஜ்ஞையால்தான். தீர்த்தமே இந்த உலகம் பூராவும். அதுவே ப்ரம்ஹத்தில், சித்தத்தில், கூட்டமாக ஜெபிக்கப்படுகிறது. அதையே சாப்படும் தன்மை என எவன் அறிகிறானோ? அவன் ப்ரம்ஹம் ஆகிறான்.

ப்ராணனே ப்ரம்ஹம், என கௌஷீதகி சொன்னார். ப்ராணனுக்கு மனஸ்பூத உருவங்கள். இவனுக்கு எல்லாம் பலிகளைக்கொண்டு வந்து கொடுக்கின்றனர். இவ்வுபாஸனையை அறிந்த ப்ரம்ஹலோகி, ப்ரம்ஹலோகத்தில் குறைவில்லாத சரீரத்துடன் ச்ரேயஸ் அடைந்து, ஸேவிக்கப்படுகிறான். ஸ்வராஜ்ய மடைகிறான் என யார் இவ்விதம் அறிகிறானோ? அவனே தேவன் என விஸ்தாரமாக உபநிஷத் சொல்லி முடித்தது.

---

## 78. "கர்ப்ப உபநிஷத் விவரணம்"

சரீரம் ஐந்து பூதங்கள், ஆறுகுணங்கள், ஆறு ரஸங்கள், ஏழு தாதுக்கள், மூன்று யோனிகள், நான்கு வித ஆஹாரங்கள் சேர்ந்து உள்ளது. மூன்று மலங்கள் சேர்ந்தது சரீரம் என்ற தன்மை. கடின

பாகம் ப்ருதிவீ, த்ரவபாகம், அப்பு; உஷ்ணபாகம், தேஜஸ்; ஸஞ்சரிப்பது, வாயு; சுத்தமாக உள்ளது, ஆகாசம்; ப்ருதிவீ, தாரணத்திலும் அப்பு பிண்டீகரணத்திலும், தேஜஸ் உருவதர்சனத்திலும், வாயு செல்லுதலிலும், ஆகாசம் அவகாசத்தை கொடுத்தலிலும், காண்கிறது. கண், காது, நாக்கு, உபஸ்தம், ஆனந்தம், அபானம் வெளிப்படுதல், இவைகளை புத்தியினுல் போதிக்கிறது. மனதினுல் ஸங்கல்பிக்கிறது. மதுரம், ஆம்லம், லவணம், திக்தம், கடு, கஷாயம் முதலியன ஆறு ரஸங்களாக அடைந்துள்ளது.

ஷட்ஜ, ரிஷப காந்தார, பஞ்சம, மத்யம, தைவத, நிஷாத, என்ற இஷ்டா நிஷ்ட சப்தஸம்ஜ்ஞைகள் ஒவ்வொன்றும் எழுவிதமாக ஆகிறது. சுக்லம், ரக்தம், க்ருஷ்ணம், தூம்ரம், பீதம், காலம், பாண்டரம் என எழு தாதுக்கள் எவ்விதம் ஒருவனுக்கு த்ரவ்ய விஷயஜ்ஞானத்தை உண்டாக்குகிறதோ? அவ்விதம் ரஸம், குணம், ஒவ்வொன்றுக்கும் தனித்தனி உள்ளது. ரஸம் ஆறுவிதம், ரஸத்தினின்று ரக்தம், மாம்ஸம், மேதஸ், அஸ்தி, மஜ்ஜை, சுக்லம், சுக்ல சோணித, ஸம்பந்தமே கர்ப்பமாகச்சுழலும். ஹ்ருதயத்தில் கர்ப்பவ்யவஸ்தையையே செலுத்துகிறது. ஹ்ருதய நடுவில் அக்னி அதன் ஸ்தானத்தில் பித்தம், வாயு, ஹ்ருதயம், ப்ரஜாபதி, ருதுகாலத்தில் சேர்க்கையை உண்டாக்குகிறுர். ஒரு ராத்ரி இருந்து, அது கலலம் எனப்பெயர் பெறுகிறது. 7 ராத்ரி இருந்து புத்புதம், என பெயர் பெறுகிறது. 15 நாள் இருந்து, பிண்டமாக ஆகிறது. ஒரு மாதம் இருந்து, கடினமாக ஆகிறது. 2 மாதம் இருந்து, சிரஸ் உண்டாகிறது. மூன்று மாதம் இருந்து, கால் பாகம் உண்டாகிறது. நான்காவது மாதத்தில், கடி பாகம், பின் பாகம் உண்டாகிறது. 5-வது மாதத்தில் பின் கீழ்பாகம் உண்டாகிறது. 6-வது மாதத்தில், மூக்கு, கண், காது, இவை உண்டாகிறது. 7-வது மாதத்தில், ஜீவனுடன் கூடி இருக்கிறது. 8-வது மாதத்தில், ஸர்வ ஸம்பூர்ண மாகிறது. பிதாவின் ரேதஸ் அதிகமானுல் புருஷன் ஆகும். மாதாவின் ரேதஸ் அதிகமானுல் ஸ்த்ரீயாகும். இரண்டும் துல்யமானுல் நபும்ஸகமாகும். ஆத்ரத்துடன் மனதைச் செலுத்திப் புணர்ந்தால் பொட்டை, செவிடு, குள்ளம், நொண்டி, இவைகளாகப் பிறக்கும். ஒன்றுக்கொன்று அபான வாயுவினுல் பீடிக்கப்படுகையில், சுக்ல சோணிதங்கள் ஸ்த்ரீகள் ஸம்பந்தமாக ஆகுதலால், வேறுவிதமாகி, இரு குழந்தைகளாகப் பிறக்கின்றன. பஞ்சாத்மக ஸமர்த்தம், பஞ்சாத்மக தேஜஸுடன் சேர்ந்து, ரஸமாக நல்ல ஜ்ஞானத்யானத்தினுல் அக்ஷ

ரம் ஓங்காரத்தை நினைக்கிறது. அது ஏகாக்ஷரமறியவே எட்டுப்ரக்ருதிகளாகி, 16 விகாரங்கள் சரீரத்தில் உண்டாகி, அச்சரீரத்திற்கு 9-வது மாதத்தில், ஸர்வலக்ஷணஸம்பூர்ணம் அடைகிறது. பூர்வஜாதி ஸ்மரணையை நினைக்கிறது, செய்தது, செய்யாதது, உள்ள கர்மா அதில் ப்ரகாசிக்கிறது. சுபாசுப கர்மாவும் அறியப்படுகிறது.

அநேக கோடி அடைந்து, என்னால் ஆஹாரம் அநேகவிதமாகப் பார்த்தும், சாப்பிட்டும், குடித்தும், அநேக விதஸ்தனங்களைப் பானம் செய்தும், பிறந்தும், இறந்தும், அடிக்கடி ஜன்மா அடைந்தும், கஷ்டமான துக்க ஸமுத்திரத்தில் மூழ்கி, மூழ்கி ஒன்றையும் பார்க்கிறேனில்லை.

எப்பொழுது யோனியை விடுகிறேனோ? உடனே ஸாங்க்ய யோகம் அடையப்போகிறேன். அசுபம் ஒழித்து, பவ முக்திகொடுக்கும் கர்த்தா ஈசனை அடையப்போகிறேன், நாராயணனை ஆச்ரயிக்கப் போகிறேன், சுபாசுப கர்மாக்கள் ஜனங்களுக்கு செய்யப்பட்டது. ஒருவனாகவே இருபலமடைந்து தஹிக்கிறேன், உடனே மோக்ஷம் தவிர வேறு ஒன்றும் இல்லை. ஐந்து நூற்றுக்கணக்கான ஸ்த்ரீ யோனித்வாரமடைந்து நின்றேன், என நினைத்துக்கொண்டு இருக்கையில், உள் வைஷ்ணவ நாடி வாயுவினால் பீடித்து, பெரிய துக்கமடைந்து, பிறக்கிறதாக தொடரப்படுகிறது. அப்பொழுது ஜன்ம, மரண, சுபா, சுப, கர்மாக்களை ஒன்றும் நினைக்கிறதில்லை. சரீரம் எதினால் எனில், ஜ்ஞான அக்னி, தர்சனாக்னி, கோஷ்டாக்னி, இம்மூன்றும் சேர்ந்து விளங்கும். அவ்விடம் கோஷ்டாக்னியில் சாப்பிட்டது, குடித்தது, லேஹ்யமுள்ளது, சோஷ்யமுள்ளது, இதுகளை சமையல் செய்கிறது. ரூபாதி தர்சனத்தையும் செய்கிறது. அவ்விடம் மூன்று உருவங்கள் இருக்கின்றன. ஹ்ருதயத்தில் தக்ஷிணாக்னி, உதரத்தில் கார்ஹபத்யாக்னி, முகம் ஆஹவனீயாக்னி, யஜமானனுக்கு புத்தியைப் பத்தினியாகச் செய்து, தீக்ஷை, ஸந்தோஷம், புத்தி இந்த்ரியங்கள், யஜ்ஞபாத்ரங்கள் சிரஸ், கபாலம் மயிர்கள், தர்ப்பங்கள் முகம், அந்தர்வேதி, 16 பக்கத்துப்பற்கள், 100 மர்ம நாமாக்கள், 80 ஸந்திகள், 100 ஸ்நாயுக்கள், 100,8000 ரோம கோடிகள், ஹ்ருதயம் 8 பலம், 12 பலம் நாக்கு, பித்தம் 1 படி, கபம் ஒரு மரக்கால் சுக்லம் 3 படி, மேதஸ் 1 படி, மூத்ர புரீஷங்கள் 2 படி, அன்றன்று சாப்பிடும் அளவுகள் எனபது இது பிப்பலாத சாஸ்த்ரம். இவ்விதமறிகிறவன் மோக்ஷமடைகிறான் என விஸ்தாரமாகச் சொல்லி உபநிஷத் முடிந்தது.

## 79. நிராலம்ப உபநிஷத் விவரணம்.

இந்த அஜ்ஞான ஜந்துக்களுடைய ஸமஸ்த கஷ்டங்களேயும் சாந்தி செய்யவே ஆரம்பிக்கப்படுகிறது, அதையும் அறிய வேண்டியதே. அது முழுமையும் யோஜனேசெய்து நான் சொல்லுகிறேன். உலகத்திலுள்ள எல்லாப் பிடிப்புகளேயும் விட்டு ஒன்றேதான் உள்ளது என எவன் சுத்த சைதன்ய ஸ்வரூபத்தை அறிகிருனே? அவனே ஸந்யாஸி. ஈச்வரன் அவன் உலக ஸ்ருஷ்டியைச்செய்து, பின்பு உள்ப்ரவேசித்து நிற்பவன். ஈச்வர லக்ஷணம் அறிய தேஹம் என்ற ஆரம்ப சக்தி பல காரண உருவமே ஜீவலக்ஷணம் என அறியவேணும்.

பரமாத்மா ஒன்றுதான் என உயர்வாக அறியவேணும். அதைத் தான் காரணப்ரபஞ்ச உருவம் என அறி. ப்ராந்தி இல்லாதது ஜ்ஞானம். ஸந்தேஹத்துக்கு இடமுள்ளது. ப்ராந்தி உருவம் அஜ்ஞானம். ஸுகம் அறிவதுதான் பரமாத்மா, ஒன்றே ஸ்வர்க்கம், நரகம், அஸத்உருவம் பந்தங்கள் அவித்யாவாஸனே, இவை அனுதியாய் ஏற்பட்டு அடையக்கூடியது. சரீரத்தை ஆத்மாஎன எவன் அறிகிருனே? அவன் அஸுரன். அஜ்ஞான முறிவு பரத்திற்கு எல்லாம் பரமானது. அதை அறிவதே ஸத்யம் அதைத்தான் க்ருஹிக்கவேணும். வித்யை எல்லாம் ஸந்யாஸி அடைந்து ஸமஸ்த தர்மங்களேயும் விட்டு ப்ரம்ஹத்தை சரணமடைந்து மஹா வித்யா உபதேசம் பெற்று, தானே அது ஆகிறேன் என நினைத்து, நிர்விகல்ப்ப ஸமாதியில் நிற்பவன், யோகி, பரமஹம்ஸன், அவதூதன், ப்ராம்ஹணன், என லக்ஷணங்கள் கூறுகின்றன. இது குரு அநுக்ரஹத்தினுல்தான் கிடைக்கும். அடைந்தவன் திரும்புகிருனில்லே என விஸ்தாரமாகச் சொல்லி உபநிஷத் முடித்தது.

---

## 80. பைங்கல உபநிஷத் விவரணம்.

பைங்கலர் யாஜ்ஞவல்க்யரை அடைந்து, 12-வருஷம் சுச்ரூஷை செய்து, பரமான கைவல்யம் சொல்லவேணும். எனக்கேட்டார். அதற்கு பதில், ஸத் தான் முதலில் இருந்தது. பின்பு எல்லாம் உண்டாயிற்று. ஸர்வ ஸ்ருஷ்டிக்குப் பிறகு அவஸ்தைகள் உண்டாகிறது. நிற்கிறது. மஹாவாக்ய லக்ஷணங்களேயும், கூறியது. பரோக்ஷ அபரோக்ஷ ஜ்ஞான லக்ஷணம் உபதேசித்தது. ஆத்மஸ்வரூப லக்ஷண ஸா

க்ஷாத்காரத்தை விவரித்தது. பின்பு ஜ்ஞான லக்ஷணம், காம கர்ம லக்ஷணம், இவைகளைச் சொல்லியது. பரமான ஒரு விஷயம் இதுவே எனச் சொல்லுகிறது. யார் இவ்விதம் அறிகிருனே? அவனே ஓங் காரஸ்வரூபனுகிருன். என விஸ்தாரமாகச் சொல்லி உபநிஷத் முடித்தது.

---

## 81. ப்ராணுக்னி ஹோத்ர உபநிஷத் விவரணம்.

சரீரத்தை ஓர் யஜ்ஞரூபமாக உபாஸிக்கச் செய்து, அதன் உருப்புக்களையும் யஜ்ஞஸாதனமாக உபயோகிக்க உபாயம் செய்து, அதன்படி நடத்த ஓர் குருவை அடைந்து ஹிம்ஸை இல்லாத முறையில் எவன் உபாஸிக்கிருனே? அவனே த்யாக புத்தியுள்ளவனுகிருன். என இச்சரீரத்தில் ஸமஸ்த தேவதைகளும் ஸாந்நித்யமாக இருக்கின்றனர் என எவன் அறிகிருனே? அவனே இந்த ஸ்வரூபம் என அறிந்து ஸ்வ ராஜ்ய பதமடைகிருன் என்பதை விவரமாக உபநிஷத் சொல்லி முடித்தது.

---

## 82. மந்த்ரிகை உபநிஷத் விவரணம்.

ஹம்ஸ மந்த்ர உருவ ஸாந்நித்ய ச்ரமத்தை எட்டுவித முடையது என வர்ணிக்கிறது. அதன் லக்ஷணம் விவரித்துக் கூறி உள்ளது. ஸத்வ, ரஜஸ், தமோகுண, ரூபதேஜஸ் அது என விவரிக்கிறது. அதன் ஸ்வரூப லக்ஷணத்தையும், சொல்லுகிறது. உள் பரமாத்மாவைப் பார்க்க வெளி ஆகாசங்களை விட்டு, உள் ஆகாசங்களைப்பார்க்கும் தன் மையை விளக்கும் தன்மை லக்ஷணத்தையும் உபதேசிக்கிறது. அப் பார்வைதான் அவனுக்கு ஸாந்நித்யம் கொடுக்கும் எனவும் வற்புறுத்து கிறது. ஏகாந்தமான ஸேவைதான் உலகத்திலுள்ள எல்லாவற்றையும் வ்யாபிக்க சக்தி உள்ளது. அதுதான் இவ்வுலகம் எங்கும் வ்யாபித்து உள்ளது. என அதையே உபாஸிக்கவேணும். அடைந்தால் தான், ஸுகம் என்று வற்புறுத்துகிறது. அதை அடைந்து அவ்யக்த உருவ மடையலாம் என்ற கருத்தை விஸ்தாரமாக உபநிஷத் சொல்லி முடித்தது.

---

## 83. மஹோபநிஷத் விவரணம்.

நாராயணன் ஒருவரே முன்பு இருந்தார். மற்றவர்கள் யாவரும் இல்லை எனச் சொல்லுகிறது. அவர் ஸ்தோத்ரம் செய்ய இந்த யஜ்ஞ ஸ்தோமங்கள், உண்டாயின. இந்த உருவம் ப்ரபஞ்சத்தில் எல்லாம் உண்டாக்கியது. அவரே எல்லாவற்றையும் ஸ்ருஷ்டிக்க த்யானம் செய்து, ஸ்ருஷ்டித்தார். இப்படி செய்து கொண்டிருக்கையில். அவர் முகத்தினின்று வேர்வை விழுந்தது. அதினின்று ப்ரம்ஹா உண்டானர். பிறகு கண் ஸ்வரூபங்கள் உபதேசிக்கப்பட்டு, அதுவே உலகம் எங்கும் பரவிற்று எனக் கண்டனர். இதையே பிறந்த உடன் ப்ரம்ஹ ஜ்ஞான மடைந்த, சுகாசார்யர் அறிய ஆவல் கொண்டு, யோசனை, சிந்தனை, செய்து அதை அறிந்து ப்ரம்ஹா ஆனர்.

இப்படி அறிந்த பிறகு, ஒரு ஸமயம் மேருபர்வத அடியில் இருந்து, வ்யாஸரான தகப்பனரை சுகர் கேட்டார், ஸம்ஸார ஆடம்பரம் எதற்கு? அநுபவிப்பது பாபம் தான் நேரும், என்று கேட்டார். இதைக்கேட்ட வ்யாஸர், இது எனக்குத் தெரியாது. இதைப்பற்றி ஜனகரைக் கேட்டுத் தெரிந்து கொள்ளவேணும் என்றதும், அங்கு சென்று ஸேவை செய்து கேட்டார். எழுநாட்கள் பேசாமல் இருந்து பிறகு கேட்டார். ஜனகர் அவருக்கு அநுபவிக்கச் செய்து கேட்டார், அனவகளை அவர் விரும்பவில்லை எதற்காக வரப்பட்டது? எனக் கேட்கையில், எதைக் கேட்டால் உடனே முக்தி கிடைக்குமோ? அதைச் சொல்லும், என்றதும் உபதேசித்தார். உலகம் எல்லாம் அநித்யம். அதை நம்புவதைவிட வேறு உபாயம் என்னெனில்; மறுபடி வருகையையே வற்புறுத்துகிறது. துன்பமே வரும். அதை ஒழித்து மேல் உலகம் போவதே மேல் என உபதேசித்தார். அதை விச்ராமமாக அடைந்து, மறுபடி மேருபர்வத சிகர மடைந்து, அநேக ஆயிர வர்ஷங்கள் தபஸ் செய்தார், எண்ணை இல்லாத தீபம்போல், அறிய பரமாத்மாவைக் கண்டார், அதுதான் மஹாத்ம லக்ஷணம். நிதாகர் என்ற முநி குழந்தைக்கு அவரது தகப்பனர் தீர்த்த யாத்ரை போய்வா என ஆஜ்ஞாபித்துச் சொன்னர். $3\frac{1}{2}$ கோடி தீர்த்தங்களிலும் ஸ்நானம் செய்து, வீட்டுக்கு மறுபடி திரும்பினர். தகப்பனர் ரிபுவை அடைந்து தனது விஷயத்தை சொன்னர், இப்படிச் சுற்றிய பிறகு, மனதில் ஓர் விசாரம் உண்டாயிற்று. மநுஷ்யன் போய், போய் வருகிருனே? என்ற இதை நிவர்த்திக்க உபாயம் ஏதாவது உண்டா? என்பதை விளக்கவேணும் என்ருர். இதைக்கேட்ட அவர் துலைக்க உபாயம் சொல்லுகிறேன். மோக்ஷ உபாயம் தான்மேல்,

அதற்கு நான்கு வாசல் காப்பாளர்கள், சமம், விசாரம், ஸந்தோஷம், ஸாது ஸங்கமம், ஒன்றைத்தவிர, பாக்கி விசாரங்களை துலைத்து அடைய வேணும். ஒன்று வசமானால் எல்லாம் வசமாகும். உலகத்தில் ஸத்வத்தி லிருந்து எல்லாம் உண்டாய், அதிலேயே கஷ்டப்பட்டும், ஸுகப்பட்டும், அடைகிறது. அதுதான் நித்யம், பாக்கி அநித்யங்கள் என அறிந்தவன், விடுபடுகிறான். நான் ப்ரம்ஹமாகிறேன். கேவல சுத்தஜ்ஞானமடை கிறேன் என எவன் அறிகிறானோ? அவனே முக்தி அடையும் படியை அடைகிறான்.

அதை அடைய எவ்வளவோ கஷ்டமிருக்கும். அதை எல்லாம் தவிர்த்து, எவன் போகிறானோ? அவனே பிறப்பு அற்றவனாகிறான். அவன்தான் மேல்ஏற ஆசைப்படுகிறவன். அவனே உண்மை ஸ்வரூப மாக அடைந்தவன். பொய் தேஹ அஹங்காரம் அறுப்பவன். இப்படி அறிய அநேக உபாய உபமானங்களை விஸ்தரித்துச் சொல்லி, அது தான் முக்யம் என்றும், பாக்கி அஸத்து என்றும் வற்புறுத்திக் கூறியது. அதை அறிந்தவனுக்கு பயமில்லை, ஒரு ஸமயமும் கஷ்டமில்லை. ப்ரம்ஹா வுடனேயே லயமடைகிறான். என விஸ்தாரமாக ஸத்ய ஸ்வரூப லக்ஷ்யத்தை விவரித்துக் கூறியது. இதைத்தான் மஹாவாக்ய உபநிஷத் என முடித்தது.

---

## 84. முக்திக உபநிஷத் விவரணம்.

அயோத்யா நகரத்தில் அழகிய ரத்னமய மண்டப மத்தியில் ஸீதா, பரத, லக்ஷ்மண, சத்ருக்னன் முதலியவர்களுடன் கூடி ஸனகாதிகள், முநிகள், வஸிஷ்டாதிகள், சுகாதிகள், மற்றுமுள்ள பாகவத உத்தமர் கள் ராப்பகல் ஸேவிக்கப்படும் புத்தி செல்லுகிற ஆயிரம் பேர்கள் மத்தி யில் நிர்விகார ஸாக்ஷாத்கார ஸ்வரூபத்யான நிரத ஸமாதி விராமத்தில் உள்ள நாராயணனை பக்தியால் சுச்ரூஷை செய்து ஒரு ஸமயம் ஹநுமார் கேட்டார், ராமனே! நீ பரமாத்மாவாகிறாய்? ஸச்சிதானந்த ரூபராகிறீர்? உம்மை அடிக்கடி நமஸ்கரித்துக், கேட்கிறேன். உமது ரூபத்தை தத்வார்த்தமாகச் சொல்லும்!

அனாயாஸமாக எதினால் முக்தி கட்டாயம் கிடைத்து, ஸம்ஸார பந்தம் நிவர்த்தியாகுமோ? அதை எனக்கு க்ருபையால் சொல்ல வேணும்! என்றதும்; ராமர் சொன்னார். வேதாந்தங்கள், வேதங்கள்,

உபநிஷத்துகள், பக்தி யோகங்கள், அநேக கிளை உருவங்களாகத் தோன்றுகிறது. அங்கு எல்லாம் நான் இருக்கிறேன். அவைகளில் கிடைக்க முடியாத ஸாயுஜ்ய பதவிகள் கிடைக்கும். ஸ்வரூபம், ஸாரூப்யம், ஸாலோகம், ஸாமீப்யம், ஸாயுஜ்யம், இந்த முக்திகள் ஒவ்வொன்றும் படிப்படியாக ஜீவன் முக்திக்கு ஹேதுவாகும், அதையே ஆசைப்படுகிறவனுக்கு நான் கொடுக்கிறேன்.

இதில் 108 உபநிஷத் க்ரமங்களையும் ப்ரியமாக சுலோக உருவமாக உபதேசம் செய்தார். இம்மாதிரி காலவசத்தால் செய்யச் செய்ய, அவனுக்கு முக்தி கிட்டுகிறது. இதிலும் 108, உபநிஷத்தான் முக்யம். இதைக் கேட்ட மாத்ரத்திலுல் ஜீவன் முக்தி ஸித்திக்கிறது. இது உண்மை. வித்யை முன்பு ப்ராம்ஹணனை வந்து அடைந்தது. ரஹஸ்யமாகவே நான் இருக்கிறேன். முட்டாள்களுக்கு இது சொல்லக்கூடாது. விஷ்ணு ஸம்பந்த விஷயமுள்ளதை எவன அத்யயனம் செய்கிறனோ? அவன் அறிகிறன். ரிக்வேத, யஜுர்வேத, ஸாமவேத, அதர்வவேத, க்ரமங்களை உபநிஷத்துக்களாக எண்ணி, விஸ்தரித்தது. மோக்ஷ இச்சை உடையவர்களே இதை உபாஸிக்கவேணும். கைவல்யத்தைக் காட்டிலும் ஸாங்க்ய யோகங்கள் உயர்வில்லை. இம்மாதிரி ஸாதன முறையதை எவன் அறிகிறனோ? அவனே முக்தி பெறுகிறன், என விஸ்தாரமாகச் சொல்லி உபநிஷத் முடிந்தது.

---

## 85. "முத்கல உபநிஷத் விவரணம்."

புருஷ ஸூக்த அர்த்த நிர்ணயத்தை முக்யமாகக் கொண்டு இவ் உபநிஷத் விஸ்தாரமாகச் சொல்லி உள்ளது. விஷ்ணுவின் கார்யத்தையும், அதன் விவரணத்தையும், விளக்கிச் சொல்லி உள்ளது. இந்த புருஷ ஸூக்த ரஹஸ்யார்த்தத்தில் விவரிக்கும் உபநிஷத் ராஜகுஹ்யம், அதிரஹஸ்யம், தேவகுஹ்யம், குஹ்யத்திலும் குஹ்யதரம் இதை அத்யயனம் செய்கிறவனும், செய்து வைக்கிறவனும், மிகுந்தச்ரேயஸ் அடையும் தன்மை அடைகிறன்என இதை விஸ்தாரமாகச்சொல்லி உபநிஷத் முடிந்தது.

---

## 86. "மைத்ராயணீ உபநிஷத் விவரணம்."

ப்ருஹத்ரதன் என்ற அரசன் பெரிய புத்ரனை பட்டாபிஷேகம் செய்வித்து, இந்த சரீரம் சாச்வதமில்லை என வைராக்யமடைந்து காட்

டில் தபஸ் செய்யச்சென்ருன். அங்கு பரமபத தபஸ் செய்ய கையைத் தூக்கி ஸூர்யனேயே பார்க்கிறவனுகி, வெகுநாள் இருந்தான். ஆயிரம் வருஷங்களுக்குப்பின், பரமதேஜஸ்வி முநிசாகல்யர் அங்கு வந்தார். எழுந்து வரமடை! என அரசனைச் சொன்னுர். அவன் அவருக்கு நமஸ்காரம் செய்து, சொன்னுன், ஆத்ம வித்தாக நான் ஆகவில்லை. தத்வார்த்தமறிய ஆசையே உள்ளவன். எனக்குச் சொல்லவேணும் என்றதும். இதை என்னுல் சொல்லமுடியாது, வேறு ஏதாவது கேள் சொல்லுகிறேன் என்ருர். உடனே அவரது கால்களைப் பிடித்துக் கொண்டு, கேட்டான். இந்த அஸார ஸம்ஸாரத்தில் இருந்து ரொம்பவும் கஷ்டப்படுகிருன். என்னப்ரயோஜனம்? என்றதும்; இதைக் கேட்டு உடனே அரசனுக்கு சாகாயன்யர் ப்ரீதியடைந்து மருத் என்ற அரசன் இதை அப்யஸித்தான் என விஷயங்களைச் சொல்லி ஆத்ம ஸ்வரூப லக்ஷணங்களையும் விவரித்துக் கூறினுர். எனக்கு இதை முன்பு மைத்ரேயர் சொன்னுர்.

நான் உனக்குச் சொல்லுகிறேன். கேள், ஊர்த்வரேதஸ்கள் வாலகில்யர்கள் இவர்கள் அப்யஸித்து ப்ரதிஷ்டை செய்த விஷயம். தபஸினுல் ஸத்வம் அடைதல், அதினின்று மனஸ், ஆத்மா, எல்லாம் அறிந்து, உயர்ந்த தன்மை அடைய லக்ஷணம், இவ்விதம் ஸர்வஸங்க நிவர்த்தியடைய ஒரே உருவம் அடைதல் என வர்ணித்துள்ளது. அதுதான் முக்ய தத்வம், என அறிந்தால் ஜ்ஞானியாகிருன் எனச் சொல்லி முடித்தார், இதைத்தான் அறிவது உபநிஷத் லக்ஷணம் என விஸ்தாரமாகக் கூறி உபநிஷத் முடித்தது.

———

## 87. வஜ்ர ஸூசிகை உபநிஷத் விவரணம்.

அஜ்ஞானத்தை ஒழிக்கும் சக்தியுடையது, என இதைச் சொல்லப்படுகிறது. ஜ்ஞானமில்லாதவர்களுக்கு தூஷணமும், ஜ்ஞானங்கள் உள்ளவனுக்கு அலங்காரமும், இதில் வர்ணிக்கப்படுகிறது. ப்ராம்ஹண, க்ஷத்ரிய, வைச்ய, சூத்ரர்களது வர்ணக்ரமங்களையும் இதில் விஸ்தரித்துக் கூறிஉள்ளது. ஆத்ம ஸ்வரூபத்தை ஜாதி பின்னமான ஒரே ஜ்யோதி என வர்ணித்து, எவன் ச்ருதி ஸ்ம்ருதியுள்ள இதிஹாஸங்களால் சொல்லியதை உபாஸிக்கிருனே? அவனே இதன் தத்வமறிகிருன் என பாவம். அதையே சொல்லுகிறது. அதுதான் இந்த உபநிஷத் தாத்பரியம் என விஸ்தரித்துக் கூறி உபநிஷத் முடித்தது.

## 88. சாரீரக உபநிஷத் விவரணம்.

ப்ருதிவி முதலிய ஐந்து பூதங்கள், தத்வங்கள் சேர்ந்தது, சாரீரம் என வர்ணித்து. 32 அவயவ லக்ஷணங்களையும், விஸ்தரிக்கும். விஷய முள்ளதை வர்ணிக்கிறது, ஜாக்ரத், ஸ்வப்ன, ஸுஷுப்தி, என்ற இருப்பிட உருவம் சரீரம், 32 தத்வங்களுக்கு எல்லாம் இருப்பிடம், எனக் கூறுகிறது. இப்பிரதான விஷயத்தை உபதேசிக்கும் பரப்ரம்ஹ ஸ்வரூப லக்ஷணங்களை வர்ணிக்கும் உபநிஷத் என விஸ்தாரமாக உப நிஷத் கூறி முடித்தது.

---

## 89. சுகரஹஸ்ய உபநிஷத் விவரணம்.

தேவரிஷிகள் ப்ரம்ஹாவை பூஜித்து நமஸ்கரித்து, ரஹஸ்ய உபநிஷத் விஷயம் எங்களுக்குச் சொல்லவேணும் என்றதும், அவர் சொல்லியதாவது, முன்பு மஹா தேஜஸ்வியான வ்யாஸர், ஸர்வ வேத தபோநிதி சிவனை நமஸ்கரித்து அஞ்சலி செய்து, சொன்னார். என் பையனுக்கு வேத ஸம்ஸ்கார கர்மாவில் ப்ரம்ஹ உபதேச காலம் ஸமீ பித்திருக்கிறது. இப்பொழுது ப்ரம்ஹ உபதேசம் நீர் செய்யவேணும். என்றதும், என்னால் சொல்லிய கைவல்யம் ஸாக்ஷாத் ப்ரம்ஹத்தினிடம் உள்ளது. அதை சாச்வதமாக அடைய அவன் தானாகவே வேதனை அற்ற ப்ரகாசம் அடையப்போகிறான். எப்படியாகவாவது போகட்டும். உபநயன கர்மாவில் உமது ப்ரஸாதம் உபதேசிக்கப்படுமேயாகில்; எனது பையன் சீக்ரம் ஸர்வஜ்ஞனாகட்டும. உமது ப்ரஸாதம் நிறைந்த வனுக்கு நான்குவித முக்தி கட்டாயம் கிட்டும். என்றதும், இவ்வார்த் தையை வ்யாஸரிடமிருந்து ஸர்வ தேவர்கள் நிறைந்த ஸதவில் கேட்டு ஸந்தோஷத்துடன் உபதேசம் செய்ய, ஈச்வரன் ஒத்துக்கொள்ள, அவ்விடம் பக்திமானான சுகர் வந்து க்ருதார்த்தமடைய ப்ரணவார்த்த மடைந்து மறுபடி சிவனைக் கேட்டார். தத்வமஸி என்றது முதலிய வாக்ய அர்த்தத்தைச் சொல்லவேணும். அதன் அங்கங்களையும் சொல்ல வேணும் என்றதும்; சிவன் சொல்லியதாவது. நல்லது! கேட்டது! சொல்லுகிறேன். உலகத்திலுள்ள எல்லாம் நான் ஆகிறேன். என்ற ஜ்ஞானம் எப்பொழுது உண்டாகிறதோ? அப்பொழுதே அவன் ஜ்ஞானியாகிறான். நித்யாநந்த ப்ரஜ்ஞான ப்ரம்ஹ உரும் என அறிகிற வன், ஸத்ய உருவ சிவஸாயுஜ்ய முக்தி அடையும் தன்மை அடையவன்

என விஷயங்களையும் ரஹஸ்யார்த்த உபநிஷத்துகளையும், சுகரே நீர் கேளும். என்னால் சொல்லிய விஷயம் கேட்டு முன்பு அறியப்பட்டது. இதை அடைந்தால் ஜீவன் முக்தி ஏற்படும் தன்மை என்றதும், ஸரிஎன ஒத்துக்கொண்டு பரமேச்வரனிடம் விடைபெற்று ஜீவப்ரம்ஹ ஐக்யத் திற்காகப் புறப்பட்டுச் சென்றார். இதை அறிந்து வ்யாஸர் போகிறானே? என விட்டுப் பிரிதல் காரணமடைந்து கூடவே புத்ரனைப் பின்தொடர்ந் தார், மரம், மட்டை முதற் கொண்டு எதிர்சப்தித்தன. அதைக்கேட்டு வ்யாஸர் புத்ரனுடன் சேர்ந்து, பரமப்ரீதி அடைந்தார். இந்த ரஹஸ்ய உபநிஷத்தை குரு அநுக்ரஹத்தால் எவன் அத்யயனம் செய்கிறானோ? அவன் ஸர்வ பாபங்களையும் விட்டு கைவல்ய பதமடைகிறான் எனச் சொல்லி விஸ்தாரமாக உபநிஷத் முடித்தது.

---

## 90. ஸர்வஸார உபநிஷத் விவரணம்.

பந்த மோக்ஷங்கள், வித்யை அவித்யை அவஸ்தைகள் மூன்று, ஜீவன், க்ஷேத்ரஜ்ஞன், ஸாக்ஷி, கூடஸ்தன், அந்தர்யாமி, ப்ரத்யகாத்மா, பராகாத்மா, மாயை, இவைகள் காரணங்கள் எப்படி? எனக் கேள்வி. உருவம் பதிலில்; பந்தத்தினின்று விடுபட்டு, அவித்யை ஒழித்து, ஐந்து கோசங்களைத் தாண்டி, ஜீவன் என்ற பெயர் அற்று, அவன் நானே, நானே அவன், என பாவனை அடைந்து எவன் பரமாத்மாவை அறி கிறானோ? அவனே ஈசனாகிறான் என்பதை விஸ்தாரமாகக் கூறுகிறது. மனஸ்முதலிய 14-இந்த்ரியங்களையும் எவன் அடக்குகிறானோ? அவன் பராக் பார்க்காமல் உள் ஆத்மாவைப் பார்க்கிறவனாகிறான். எனக்கு உலகில் வேறு காணுகிற எதுவும் காரணமே இல்லை. என எல்லாம் ஒன்று என்ற ஈச்வர பாவனை அடைந்தவனாகிறேன் என்கிறார், அது தான் ஆத்மா லக்ஷணம் எனக் குறிப்பாகும் விஷயத்தை விஸ்தாரமாகச் சொல்லி உபநிஷத் முடித்தது.

---

## 91. ஸாவித்ரி உபநிஷத் விவரணம்.

காயத்ரி அக்ஷரங்கள் 24-ம் விஸ்தரித்துக்கூறும் விஷயத்துடன் ஆரம்பமாகி அதன் பாபங்களை விஸ்தரித்துக் கூறும் விஷயமுள்ளது: முன்னொரு ஸமயம் ராமனுக்கு விவாஹம் செய்ய எத்தனித்த விச்வா

மித்ர ரிஷி காரணார்த்தமாக தன் யாகத்தை காக்க வேணும் என எண்ணி அவர் தசரதரிடம் கட்டாயம் ராமனைக் கொடுக்க வேணும் எனக் கேட்க, அதற்கு அவர் முடியாது எனச் சொல்லி, வரும் யுத்தத்தில் அநேக கார்யங்கள் ஸாதகம் ஆக வேணுமென்று எண்ணி அவரது பிடிவாதமே தசரதரிடமிருந்து ராமனைப் பெற்று அரண்யம் செல்லுகையில் ஸந்த்யாகாலமத்தியில் ராமன், லக்ஷ்மணன், இருவருக்கும் பின்னால் நடக்கப்போகும் விஷயத்திற்கு ஏற்ப விச்வாமித்ரர், பலை, அதிபலை, என்ற மந்த்ரங்களை உபதேசம் செய்தார். அது அதிக பசி, தாகம், இவைகளை உடனே தவிர்க்கச் செய்யும் கார்யமுள்ளது. அதை விவரமாக இதில் விஸ்தரித்துக் கூறியுள்ளது. இப்பொழுதும் அத்யாச்ரமிகள் அநுஷ்டிப்பார்களேயானால், உடனே பலன் தருமென, பதில் ஸந்தேஹமில்லை. அதைத்தான் முக்யமாக இவ்வுபநிஷத்தில் கூறியுள்ளது. இதை உபாஸித்தால் உடனே பசி தாக மற்று அரண்ய வாஸமடைந்து ப்ரம்ஹலோகமடைய ஸாதகமாகும் என விஸ்தாரமாகச் சொல்லி உபநிஷத் முடித்தது.

---

## 92. ஸூர்ய உபநிஷத் விவரணம்.

உலகம் பூராவும் ஸூர்யன் முக்ய உருவமுடைய தேவதை ஆத்ம ஸ்வரூபம் என அறிதல் வேணும் இவ்விதம் எவன் அறிகிறானோ? அவனே இவ்வுலகம் பூராவும் ஜெயித்தவனாகிறான் என்று விஸ்தாரமாகக் கூறி முடித்தது.

---

## 93. ஸ்கந்த உபநிஷத் விவரணம்.

ஸ்கந்தரிடமிருந்து பரமேச்வரன் ஸர்வதத்வமறிந்து அதன் விஷயத்தை விசேஷமாக சொல்லியது என ஆரம்பித்து, சிவ, விஷ்ணு ஐக்யத்தையும் சொல்லி அதன் விவரணத்தையும் உபதேசித்து உபநிஷத் விஸ்தாரமாக சொல்லி முடித்தது.

---

## 94. அவதூத உபநிஷத் விவரணம்.

ஸாங்க்ருதி அவதூதரான தத்தாத்ரேயரை அடைந்து கேட்டது. அவதூத லக்ஷணங்களை சொல்லவேணும் எனக் கேட்கையில்; பதில், ஆச்ரம தர்மங்களை விட்டு எவன், எதேச்சையாகப் போகிருனே? அவனே அவதூதன். ஸூர்யன் எவ்விதம் எல்லாவற்றையும் க்ருஹிக்கிருனே? அவ்விதம் இவனும் க்ருஹிக்கிருன் அவனே இவன். ஆத்மஸ்வரூப போதன் என்று எவன் அறிகிருனே? அவன் ஸ்வராஜ்ய மநுபவிக்கிருன் என விஸ்தாரமாகக் கூறி உபநிஷத் முடித்தது.

---

## 95. ஆருணி உபநிஷத் விவரணம்.

ஆருணி ஒரு ஸமயம் ப்ரஜாபதி லோகம் சென்ருர். எதினல் இந்த கர்மா எல்லாவற்றையும் துலைக்க முடியும்! என்று கேட்டார். பதில், உலகத்திலுள்ள ஸர்வத்தையும் த்யாக புத்தியால் விட்டு எவன் இருக்கிருனே? அவனே இந்த ஸுகமடைகிருன். அவன்தான் ஸந்யாஸ தர்ம லக்ஷண மறிந்தவன் அவன் தான் ஆத்ம ஜ்ஞானி என விஸ்தாரமாகச் சொல்லி உபநிஷத் முடித்தது.

---

## 96. கடருத்ர உபநிஷத் விவரணம்.

தேவர்கள் ஒரு ஸமயம் கூட்டமாக ப்ரம்ஹாவிடம் போய் எங்களுக்கு ப்ரம்ஹ வித்யையை உபதேசிக்கவேணும், னெக்கூறியது. பதில் உலகத்திலுள்ள ஸர்வமும் நானே என எண்ணி எவன் ஸ்வரூப ஸாக்ஷாத்கார புத்தியை நினைக்கிருனே? அவனே அதை அறிகிருன். என விஸ்தாரமாகச் சொல்லி உபநிஷத் முடித்தது.

---

## 97. குண்டிகை உபநிஷத் விவரணம்.

ப்ரம்ஹ கார்யத்தில் இருந்து குரு சுச்ரூஷை முதலியன செய்து, வேதாத்யயனம் முடித்து, கல்யாணம் செய்து, அக்னி கார்யங்கள் செய்து, ப்ராம்ஹி இஷ்டி செய்து, புத்ராதிகளிடம் எல்லாம்விட்டு,

வனத்திற்குப்போய், இந்த்ரிய நிக்ரஹம் செய்து, ஆகார நியமம் பண்ணி, கடைசியாக ஸந்யாஸம் பெற்று, எவன் ஈச்வரனையே த்யானம் செய்கிருனே? அவனே அதைப் பெறுகிருன் என்ற விஷயத்தை விஸ்தாரமாகச் சொல்லி உபநிஷத் முடிந்தது.

---

## 98. ஜாபால உபநிஷத் விவரணம்.

யாஜ்ஞவல்க்யரை ப்ருஹஸ்பதிகேட்டது. குருக்ஷேத்ரம், காசி, இரண்டையும் சேர்த்து உயர்வு எது? எனச் சொல்வது என்ற காரணத்தை விவரித்து அதன் பெருமையையும், தாரகப்ரம்ஹ உபதேசத்தையும், அடையும் மோக்ஷத்தன்மையும், அடைவதேகாணும். இதையே மற்ருெரு ஸமயம் அத்ரி யாஜ்ஞவல்க்யரைக் கேட்டது. அதற்கு பதில் காசியைப் பற்றியே உயர்வாகச் சொன்னுர். எதினுல் உயர்வு அடைய முடியும்! எனக் கேட்கையில், சதுர்த்ரீயத்தினுல் தான், என்றும் சொல்லியது. ஜனகர் யாஜ்ஞவல்க்யரை ஸந்யாஸதர்மம் சொல்லவேணும் என்றதிற்கு, பதில், ப்ரம்ஹசர்யத்திலிருந்து, க்ருஹஸ்தனுகி, வானப்ரஸ்தனுகி, ஸந்யாஸமடையவேணும். பரமஹம்ஸ பதமடைய எவனும் இம்மாதிரி அநுஷ்டித்தால்தான் அடைய முடியும், என விஸ்தாரமாகக்கூறி உபநிஷத் முடிந்தது.

---

## 99. துரியாதீத அவதூத உபநிஷத் விவரணம்.

ப்ரம்ஹா நாரயணனை ஒரு ஸமயம் அவதூத லக்ஷண ஸ்திதியைக் கேட்டது. பதில், ஜ்ஞான, ஸம்பத், வைராக்ய மடைந்து, எல்லாம் விட்டு ஒரே மநுஷ்யனுகி ஆத்மா தவிர வேறு ஒருவனும் நமக்கு உதவி இல்லை. என்ற பாவமடைந்து அதன் காரணமே மூலகாரணம் என நினைப்பவனே, இம்மாதிரி நிலை உள்ளவன். அவன்தான் லக்ஷணமுடைய ஆத்மஜ்ஞானம் ஏறி, ப்ரம்ஹலோகமடைய வழிதேடுபவன், என விஸ்தாரமாகச் சொல்லி உபநிஷத் முடிந்தது.

---

## 100. நாரத பரிவ்ராஜக உபநிஷத் விவரணம்.

ஒரு ஸமயம் நாரதர் ஸர்வலோக ஸஞ்சாரம்செய்து அபூர்வ புண்ய

ஸ்தலங்கள், புண்ய தீர்த்தங்கள், இதுகளை நன்குபார்த்து, சித்த சுத்தி அடைந்து. சண்டையற்று, பொறுமை அடைந்து. வேதனையுடன் ஸ்வரூப ஸந்தானமே நித்யம் ஆனந்த உருவ விசேஷம் என எண்ணி, முநிக் கூட்டமுடைய நைமிசாரண்ய புண்ய ஸ்தலத்தில் ஸரிகமபதநி என்ற ஸப்த ஸ்வரத்தால் வைராக்ய முண்டுபண்ணும்படி, ஸ்வர விசேஷங்களுடன் ப்ரபஞ்ச பராங்முகமாய், முக்ய ஹரிகதாலாபம்செய்து கொண்டு, மரம், மட்டை, பர்வதம், எல்லாம் பகவத் பக்திக்கு பாத்ரம் என விசேஷமாய் நினைத்து, ப்ரம்ஹனது பிள்ளையான நாம் ஆத்ம ஜ்ஞான ஸம்பந்த ஸாத்கார மடையவில்லையே, என எண்ணும்படியாக, 12-வருஷம் ஸத்ரயாகம் முடித்துள்ள முநிகளுள் சரேஷ்டனான சௌனகரை அடைந்து, உபதேசம் செய்யக்கேட்க, ஆரம்பித்துச் சொல்லுகையில், உசித ஆதித்யம் செய்து, முக்தி உபாயம் எங்களுக்கு எப்படிக் கிட்டும்! எனக் கேட்டார். அதற்கு பதில், நாரதருக்கு ஸத்குலத்தில் உண்டாய் உபநயனமாய், 44-ஸம்ஸ்காரங்கள் செய்து, தனக்கு இஷ்டமான குருவை அடைந்து, தனது சாகை அத்யயன பூர்வம் வித்யாப்யாஸம் செய்து, 12 வருஷம் சுச்ரூஷை செய்து, ப்ரம்ஹசர்யம் முடித்து, 25 வருஷம் க்ருஹஸ்தர்மம் முடித்து, 25 வருஷம் வானப்ரஸ்த தர்மம் அநுபவித்து, நான்குவித ப்ரம்ஹசர்யம், ஆறுவிதம் க்ருஹஸ்த தர்மம், நான்குவித வானப்ரஸ்த தர்மம், இவை நன்கு அப்யவித்து, உசித கர்மாவை முடித்து, ஸாதன சதுஷ்டய ஸம்பந்தமடைந்து, ஸர்வ ஸாரத்தின்மேல் மனோவாக்காயங்களை கர்மாவாகவே செய்து, ஆசையிருந்து திரும்பி வாஸனை என்ற மூன்று குணங்களையும் தள்ளி, சண்டையின்றி பொறுமையுடன் பரம ஹம்ஸ ஸந்யாஸம் ஆகவேணும். அவ்விடமிருந்தே தேஹத்யாகம் செய்து வருவானாகில், அவனே முக்தி அடைய யோக்யமாகிறான். எனச் சொல்லி முடிக்கப் பட்டது. அவனே முக்தனாக ஆகிறான். அவன் திரும்புகிறானில்லை. எனவும் விஸ்தாரமாகக்கூறி உபநிஷத் முடிந்தது.

---

## 101. நிர்வாண உபநிஷத் விவரணம்.

நானே பரம ஹம்ஸன் என லக்ஷணமறிந்து, என் ப்ரம்ஹஸாக்ஷாத்கார லக்ஷணமடைந்து, பற்றற்று, எல்லாம் ஸமம் என நினைத்து, யதேச்சையாக சுற்றிக்கொண்டு திரிகிறவனாகி, அநுபூதியை நினைத்து, நினைத்து, உருகுபவனாகி அங்கு ஸதா ஆத்மாவையே பார்க்கிறான்.

அவன்தான் நிர்வாணன். அவனைத்தான் அவதூதன் என்றும் சொல்வது என உபநிஷத் விஸ்தாரமாக சொல்லிமுடித்தது.

---

## 102. பரப்ரம்ஹ உபநிஷத் விவரணம்.

சௌனகர் அங்கிரஸை அடைந்து கேட்டது, என ஆரம்பம். எவன் ப்ரம்ஹ வித்யை என்ற பரப்ரம்ஹத்தை மிகுதியாக சிஷ்யனுக்கு அளிக்கிருனே? அவனே ப்ரம்ஹ மறிந்தவனுகிருன். இதையே விஸ்தாரமாகச் சொல்லி அதன் தன்மையையும், விவரித்துக்கூறியது. வண்டானது தேன்களைக் கொண்டுவந்துவைத்துப் பிறருக்கு உபயோகமாகும்படி எவ்விதம் செய்கிறதோ? அவ்விதமே இவனும் அநேகருக்கு உபதேசம் செய்கிறதால், அதன் ஜ்ஞானம் அனுபவிக்க ஹேதுவாகிறது என்பதையும் விளக்கிற்று. இம்மாதிரி அநுஷ்டிக்கும் லக்ஷணத்தையும் விரிவாக உபநிஷத் கூறி முடித்தது.

---

## 103. பரமஹம்ஸ பரிவ்ராஜக உபநிஷத் விவரணம்.

ப்ரம்ஹா நாராயணனை அடைந்து, வர்ணுச்ரமதர்ம லக்ஷணங்களை எனக்குச் சொல்லவேணும்! எனக் கேட்டதிற்கு பதில், நான்கு வர்ண லக்ஷணம், நான்கு ஆச்ரம லக்ஷணம், இவைகளை விஸ்தரித்துச் சொல்லியது. மூன்று அவஸ்தை லக்ஷணங்களையும், ப்ரம்ஹப்ரணவ லக்ஷணங்களையும், விளக்கிக் கூறியது. பரம ஹம்ஸ பரிவ்ராஜ லக்ஷணங்களையும், விவரித்துச் சொல்லியது என உபநிஷத் முடித்தது.

---

## 104. பரமஹம்ஸ உபநிஷத் விவரணம்.

யோகியான பரமஹம்ஸனுடைய மார்க்கம் என்ன? என நாராயணனை நாரதர் கேட்டதிற்கு பதில், ப்ரம்ஹபரமஹம்ஸ மார்க்கமே கிடைப்பது மிகதுர்லபம். அப்படி இருந்தும், அவன் அடையும், முக்தி பலனே அது. உண்மை லக்ஷண மனமடைந்து, ஸதா ஆத்மாராமனுகி, திரும்பாத பலனை அடைபவனே பரமஹம்ஸ லக்ஷணம் எனவும் விஸ்தாரமாக உபநிஷத் சொல்லி முடித்தது.

## 105. ப்ரம்ஹ உபநிஷத் விவரணம்.

மநுஷ்யனுக்கு நான்கு ஸ்தானம் முக்யம். நாபி, ஹ்ருதயம், கழுத்து, தலே. இதில் ப்ரம்ஹம் முக்யமாக இருக்கிறது. இதன் ப்ரம்ஹ விளக்கம் உலகில் உள்ள சக்தி. ஸாதனத்தையே விளக்குகிற தாக ஒருங்கே ப்ரகாசித்து, மநுஷ்யனுக்கு ஞானபுத்தியை அளித்து, அதன் மூலம் மநுஷ்யன் கடைத்தேற வழியையும் சொல்லி காண்பிக்கிறது. அதன் விளக்குதலே அறிந்தவனே ப்ரம்ஹமாகிறான். அவனே இவ்வுலகிலிருந்து ப்ரம்ஹ ஸாக்ஷாத்காரமடைய நிர்வாணபதமடைய ஹேதுவாகிறான் என விஸ்தாரமாக உபநிஷத் சொல்லி முடித்தது.

---

## 106. பிக்ஷுக உபநிஷத் விவரணம்.

பிக்ஷுக்கள், குடீசகன், பஹூதகன், ஹம்ஸன், பரமஹம்ஸன் என்ற பேர்வழிகள் அவர்களின் யோக்யதைகளே விவரித்துக் கூறுகையில், பஹூதகன்—மதுமாம்ஸம் விட்டு தண்ட கமண்டலுவுடன் குரு குலத்தில் வஸிக்கிறவனுகி, பிக்ஷை எடுக்கும் தொழிலே உடையவனுகி, எட்டு பிடி சாப்பிடுபவனுகி, யோக மார்க்கத்தில் ப்ரார்த்திக்கிறவன். குடீசகன், கௌதமர், பரத்வாஜர், யாஜ்ஞவல்க்யர். வஸிஷ்டர் முதலானவர்கள் மாதிரி எட்டு பிடி ஆஹாரமருந்தி, யோகமார்க்கத்திலிருந்து மோக்ஷத்தையே ப்ரார்த்திப்பவன். ஹம்ஸன்—ஓர் க்ராமத்தில் ஓர் இரவு தங்கி, பட்டணத்தில் ஐந்து ராத்ரி, க்ஷேத்திரத்தில் எழு ராத்ரி. இதை மீறி வஸிக்கக்கூடாது. கோமூத்ர, கோமயம் இதை ஆஹாரமுள்ளவனுகி, நித்யம் சாந்த்ராயணவ்ரத பாராயணனுக யோக மார்க்கத்தில் மோக்ஷத்தையே ப்ரார்த்திப்பவன். பரமஹம்ஸன்—ஸம்வர்த்தகர், ஆருணி, ச்வேதகேது, ஜடபரதர், தத்தாத்ரேயர், சுகர், வாமதேவர், ஹாரீதகர், முதலிய எட்டுபேர்கள்போல் மோக்ஷ ஆஹார நிரதர்களாகி யோகமார்க்கத்தில் ஸஞ்சரிப்பவர்களாகி மோக்ஷத்தையே ப்ரார்த்திக்கின்றனர். அவர்களுக்கு தர்மா, தர்ம, வ்யவஸ்தை இல்லே. மறுபடி சூன்யவீடு. ச்மசானம், மர அடிவாரம், வஸ்த்ரத்துடனே? இல்லாமலோ? சுத்தா சுத்த இரண்டற்று, உலகத்தை ஓட்டாஞ்சல்லியாக நினைத்து, ஸர்வ வர்ணங்களிலும் பிக்ஷை எடுத்து, எங்கும் ஆத்மாவையே பார்க்கிறவர்களாகித் திரிகின்றனர். பிறந்த மேனிக்கு சுத்த த்யான முடையவர்களாகி, சுத்த மனதுடையவர்களாக, ப்ரம்ஹசர்ய,

பரமஹம்ஸாசரணுளாகி ஸந்யாஸத்தினுல் தேஹத்தை த்யாகம் செய்ப வர்களாக, அடைகின்றனர், என விஸ்தாரமாகக்கூறி உபநிஷத் முடித்தது.

---

## 107. மைத்ரேய உபநிஷத் விவரணம்.

ப்ருஹத்ரதன் என்ற அரசன் ராஜ்யத்தில் பெரிய பிள்ளையைப் பட்டாபிஷேகம் செய்வித்து, இந்த உலகம் சாச்வதமில்லை என எண்ணி, சரீரத்தில் வைராக்யமடைந்து, காட்டிற்குச் சென்றான். அங்கு கொடிய தபஸ் செய்து, ஸூர்யனைப் பார்க்கிறவனுக இருந்து, அவனது தேஜஸ் உலக முழுமையும் எரிக்கிறதுபோல் காண்கையில், சாகாயன்யர் என்றவர் அவனை அடைந்து எழுந்திரு! எழுந்திரு! வேண்டிய வரமடை எனச்சொன்னுர். உடனே அவருக்கு அவன் நமஸ்கரித்துச் சொல்லியது. நான் ஆத்மவித் இல்லை, நீங்கள் ஆத்ம வித் எனக் கேள்விப்படுகிறோம். நீர் எனக்குச் சொல்லவேணும்! இதற்கு முன் நான் எவருக்கும் சொல்லியது இல்லை. இதைக் கேட் காதே. வேறு எதாகிலும் கேள்! கொடுக்கிறேன் என்றதும், அரசன் அவர் காலைப் பிடித்துக் கொண்டு ஸ்தோத்தரித்தான். இதைத்தவிர எங்கு போனுலும், இருந்தாலும், ஸம்ஸார பந்தமே ஸாரமின்றி ப்ரயோஜனப்பட அடிக்கடி உண்டாவதும், நசிக்கிறதுமே, காண்கிறது. நான் ஒரு புழுவைப்போல் திண்டாடுகிறேன். வேறு கதி என்ன இருக்கிறது? இந்த சரீரம் ஸ்த்ரீ, புருஷ சேர்க்கையால் அடையப் பட்டது. மல மூத்ரங்களில் இருப்பிடமாக கஷ்டப்படுகிறது. பிறகு வந்து ரொம்பவும் கஷ்டமடைகிறது. இம்மாதிரி இருந்து, போய், கதி எது! என்றதும், இதைக் கேட்ட முனி அரசனைப்பார்த்துச் சொன்னுர். நீ மருத் என்ற பெயருள்ள பாதையைக் கேட்டு, அது போல் நீ ஆகிறுய். இது தான் ஆத்மா என்றும் அதன் விவரத்தை சொன்னுர். அதன் ஸ்வரூபத்தை எப்படி வர்ணிப்பேன். விஷய மறிந்து ஆத்மஞான மடை! என விஸ்தரித்துக் கூறியது. ஒரு ஸமயம் மைத்ரேயர் கைலாஸம் அடைந்தார். அங்கு ஈச்வரனிடம், ப்ரம்ஹ, பரமஹம்ஸமயம் எனக்கு எது? என்பதை விவரித்துக் கூறவேணும் என்றதும், ஸந்தேஹமின்றி ஆத்ம தத்வத்தையே உபதேசம் செய்தார். நானே எல்லாம் என்ற பாவனை எவனுக்கு உண்டாகிறதோ? அவனே

என் உருவ ஸாக்ஷாத்கார லக்ஷணமடைகிறான், என விஸ்தாரமாகச் சொல்லி உபநிஷத் முடித்தது.

---

## 108. யாஜ்ஞயவல்க்ய உபநிஷத் விவரணம்.

ஜனகர் யாஜ்ஞவல்க்யரை அடைந்து, ஸந்யாஸ லக்ஷணங்களைக் கூற வேணும் எனக் கேட்டதிற்கு, பதில், ஆச்ரமங்களை மூன்றையும் தாண்டி, எவன் போய் அதன் ப்ரகாரம் நழுவாமல் இருந்து, அநுஷ்டிக்கிறானோ? அவனே பெறுகிறான். என்ற லக்ஷ்யத்தை விஸ்தாரமாகச் சொன்னார். இதை ஒரு ஸமயம் அத்ரி யாஜ்ஞவல்க்யரைக் கேட்டதிற்கு பதில், ஆத்மஜ்ஞான மறிதலே ஜந்மா எடுத்ததிற்கு முக்யம் எனவும் உபதேசித்தார். இதைக் காட்டிலும் அறிய வேண்டியது ஒன்றுமில்லை என்றும் சொல்லியதை விஸ்தாரமாக உபநிஷத் கூறி முடித்தது.

---

## 109. சாட்யாயனீய உபநிஷத் விவரணம்.

மனதுதான் பந்த மோக்ஷங்களுக்கு காரணம், அதை அடக்கி ஆள வேணும், எனக்கூற ஆரம்பித்து ஆகவேணும் எனவும், நல்ல ஆசார்யனை அடைந்து அவர் சொல்லும் விஷயங்களை அநுஸந்தானம் செய்து வர வேணுமெனவும், அவரே ஈஸ்வரன் என்ற பாவனையால் அவ்விதமே நடைப்பிடித்து அநுஷ்டிப்பவனே ஜீவன் முக்தனாகிறான் எனவும், விஸ்தாரமாக உபநிஷத் கூறி முடித்தது.

---

## 110. ஸந்யாஸ உபநிஷத் விவரணம்.

வரிசைக்ரமமாக எவன்போய் எல்லாம் ஆச்ரம ஸ்வீகாரம் என செய்கிறானோ? அவனே அறிபவன். ஸந்யாஸ பேதங்கள்: வைராக்ய ஸந்யாஸி, ஜ்ஞான ஸந்யாஸி, ஜ்ஞான வைராக்ய ஸந்யாஸி, ஸந்யாஸி என நான்கு விதம். தற்செயலாக வைராக்ய மடைந்து புண்ய கர்மா வசத்தால் போகிறவன் வைராக்ய ஸந்யாஸி. சாஸ்த்ர ஜ்ஞானத்தால் பாப புண்ய லோகமநுபவ கேள்வியால் ப்ரபஞ்சத்தினின்று விடுதலை அடைந்து, தேஹவாஸனை, சாஸ்த்ரவாஸனை, லோகவாஸனை, இவை

விட்டு வணங்கின அன்னம்போல் ஸர்வ ப்ரவ்ருத்தியும்விட்டு, உதிக்காமல் நான்கு ஸாதனமடைந்து எவன் ஸந்யாஸ மடைகிருனே? அவன் ஜ்ஞான ஸந்யாஸி. க்ரமமாக ஸர்வமறிந்து, ஸர்வமநுபவித்து, ஜ்ஞான வைராக்ய ஸ்வரூப அநுஸந்தானம் செய்து, தேஹ மாத்ரம் மிச்சமடைந்தவனுகி, ஸந்யாஸமடைந்து, வஸ்த்ரமில்லாமல் யதேச்சையாகச் செல்பவன் ஜ்ஞானவைராக்ய ஸந்யாஸி. ப்ரம்ஹசர்யம் முடித்து க்ருஹஸ்தனுகி, வானப்ரஸ்தனுகி, வைராக்யமடைவதில் ஆச்ரம க்ரமங்களுடன் எவன் ஸந்யாஸம் செய்து கொள்ளுகிருனே? அவன்தான் கர்மஸந்யாஸி. இவ்விதம் ஸந்யாஸிகள் ஆறுவிதம் சொல்லப்பட்டது. குடீசன், பஹூதகன், ஹம்ஸன், பரமஹம்ஸன், துரியாதீதன், அவதூதன். இந்த அறுவருக்கும் உள்ள நியமங்கள் பலவற்றை அநுஷ்டிக்கும் முறையையும் விஸ்தரித்துச் சொல்லியது. இதுபடி அநுஷ்டிப்பவன் கட்டாயம் ப்ரம்ஹ லோகத்தில் பூஜிக்கப்படுகிறவனுகிருன் எனவும் விஸ்தாரமாகச் சொல்லி உபநிஷத் முடித்தது.

108 உபநிஷத் ஸாரம் முற்றிற்று.

———